தெய்வப்புலவர் திருவள்ளுவனார்

இயற்றிய

# திருக்குறள் -
# அறத்துப்பால்

---

L2396

திருவையாறு அரசர் கல்லூரித்தலைவர்

வித்தியாரத்தினம்

டாக்டர் P. S. சுப்பிரமணிய சாஸ்திரி

இயற்றிய

பாலருரையுடன்



திருப்பனந்தாள் மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

**சுவாமிநாதத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

பொருளுதவியைக்கொண்டு

**P. S. நாராயணனால்**

திரிசிரபுரம்

முருகவிலாஸ் ஜனனுகூல பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

**1939**

*Price*

ரூ ]

[ விலை ரூ. 1-4

# TIRUKKURAL - ARATTUPPAL

WITH

THE COMMENTARY BALAR - URAI

BY

VIDYARATNA
P. S. SUBRAHMANYA SASTRI M.A., PH., D.

*Principal, Raja's College of Sanskrit & Tamil Studies, Tiruvadi, & formerly Professor of Oriental Studies, Bishop Heber College, Trichinopoly*

*& Asst. Editor, Tamil Lexicon, University of Madras.*

Published under the kind Patronage of
SRILASRI KASIVASI SWAMINATHA THAMBIRAN SWAMIGAL

HEAD OF THE TIRUPPANANDAL MUTT

BY

**P. S. NARAYANAN,**
36, PANDIAN LANE, TRICHY




AND

PRINTED AT
MURUGAVILAS JANANUKOOLA PRESS,
TRICHY,

1939

***Price***
***Re. 1-4.***



# ஐந்தாம் ஜார்ஜ் மன்னர்
## ஞாபகார்த்த
# தமிழ்ப்பரிசு ரூ. 1000, ஆயிரம்.



நம்முடைய அன்பார்ந்த அரசரும், சக்கரவர்த்தியுமான ஐந்தாம் ஜார்ஜ் மன்னரவர்களுடைய உதார குணத்தையும், தயாளசிந்தையையும் இந்தியாவின்பாலிருந்த அன்பையும் கருதி அவர்களுடைய இனிய ஞாபகம் என்றும் குன்றாதிருந்துவரும்பொருட்டு இந்தப் பரிசு திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் ஸ்வாமிகளவர்களால் ஏற்படுத்தப்பெற்றது. இந்தப் பரிசின் நோக்கம் தமிழ்மொழிப் பயிற்சிக்கும் ஆராய்ச்சிக்கும் ஆதரவு அளிப்பதே யாகும். "ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் ஞாபகார்த்தத் தமிழ்ப் பரிசு" என இது வழங்கப்பெறும்.

இந்தப் பரிசுக்குரிய மூலதனமாக இப்பொழுது உள்ள தொகை முப்பத்தையாயிர ரூபாய் (35,000). இத்தொகை நூற்றுக்கு வருஷத்துக்கு $3\frac{1}{2}$ வட்டியுள்ள காலவரையறையில்லாத சர்க்கார் கடன் பத்திரமாக

உள்ளது. இதிலிருந்து வருஷந்தோறும் கிடைக்கும் வட்டியிலிருந்து ரூபாய் ஆயிரம் (ரூ. 1000) வருஷந்தோறும் ரொக்கப் பரிசாக அளிக்கப் பெறும். 1935 – 36 ஆம் வருஷத்துச் சென்னை சர்வகலாசாலைக் காலண்டர் தொகுதி 1, பகுதி 2-ல் கண்ட 7-D விதிப்படியமைந்த தனித்தமிழ் வித்துவான் பட்டத்துக்குரிய முடிவுப்பரீக்ஷையில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேர்ச்சி பெறுவோர் இப்பரிசைப் பெறும் தகுதியுடையோராவர். மூலதனத்தின் வட்டியில் இவ்வாறு செலவானதுபோக வருஷந்தோறும் எஞ்சும் தொகை மூலதனம் லக்ஷம் ரூபாய் (ரூ. 100,000) ஆகும் வரையில் அதனோடு சேர்க்கப்படும். அதன்பின் மூலதனத்திற்குக் கிடைக்கும் வட்டி முழுதும் வருஷந்தோறும் பரிசுத்தொகையாக உரியவர்க்கு அளிக்கப்படும்.

பரிசளிப்பதற்குரிய விதிகளும், நிபந்தனைகளும் வருமாறு :—

1. இப்பரிசு ஆண்பாலார் பெண்பாலாராகிய யாவருக்கும் ஜாதிமத வேறுபாடு கருதாமல் அளித்தற்குரியது.

2. ஓரியண்டல் பட்டப்பரீக்ஷைகளுள் தனித்தமிழ் வித்துவான் பரீக்ஷையில் தேர்ச்சிபெறுவோர்களுள் முடிவுப்பரீக்ஷையில் முதல்

வகுப்பில்
முதல்வராக வருபவர் முதல் முறையிலேயே
இப்பரிசு அளிக்கப்பெறும்,
தேறினவாரயின் அவருக்கு

vi

எந்த வருஷத்திலாயினும், இருவரேனும் இருவருக்கு மேற்பட்டவரேனும் பரிசுக்குரிய தகுதியைப்பெற்றால் பிரிலிமினரிப் பரீக்ஷையில் பெற்ற அம்சங்களையும் (Marks) சேர்த்துப் பார்த்து மொத்தத்தில் அதிக அம்சம் பெற்றவருக்கு இப்பரிசு அளிக்கப்படும் அவ்வாறு செய்வதிலும் சிக்கல் நேருமாயின், தேர்ச்சி பெற்றவர்களுடைய ஆங்கிலப்பயிற்சியையும் வயதையும் ஆராய்ந்து, அவர்களுள் அதிக ஆங்கிலப்பயிற்சியுடையவருக்கும், குறைந்த வயதுடையவருக்கும் பரிசைக் கொடுக்க ஸிண்டிகேட் சபையார் தீர்மானிப்பார்கள்.

3. ஸெனெட் சபைக் கூட்டமொன்றில் இந்தப் பரிசு உரியவருக்கு வழங்கப்பெறும். எந்த வருஷத்திலேனும் பரிசுக்கு உரியவர் நேரில்வந்து பரிசைப்பெற்றுக்கொள்ள முடியாமற்போனல் ஸிண்டிகேட் சபையார் பரிசுத்தொகையை அவருக்கு அனுப்புவதற்குரிய ஏற்பாட்டைச் செய்வார்கள். பரிசு வழங்குவதற்குமுன் அப்பரிசுக்குரியவர் இறக்கும்படி நேர்ந்தால் அத்தொகை சட்டப்படி அவருடைய வார்சாக இருப்பவரிடம் சேர்ப்பிக்கப்படும்.

4. இப்பரிசுத்தொகை பணமாகவேனும் செக்காகவேனும் அளிக்கப்பெறும். இந்தப் பரிசுத்தொகை எந்தக் காரணத்தைக் கொண்டாவது பெருக்கவோ குறைக்கவோ படாது. எந்த ஒரு வருஷத்திலேனும் அல்லது தொடர்ந்து பல வருஷங்களிலேனும் பரிசு கொடுக்கப்படாமல் இருந்தால் அங்ஙனம் கொடுக்கப்படாமல் இருந்த பரிசுத்தொகை முழுவதும் சேர்த்து, எந்த வருஷத்தில் பரிசு வழங்கப்படுகிறதோ அவ்வருஷத்தின் பரிசுக்குரிய வருக்கே அளிக்கப்பெறும். பரிசுத்தொகைக்கு மேலே கிடைக்கும் தொகைதான் மூலதனத்தோடு சேர்க்கப்படும்.

5. வருஷந்தோறும் பரிசளிப்பு விபரம், பரிசு பெறுபவரின் பெயர், விலாசம் ஆகியவற்றோடு திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சாமிநாதத் தம்பிரான் ஸ்வாமிகளவர்களுக்கும், அவர்களுக்குப்பின்வரும் உரிமையுள்ளவர்களுக்கும் (Successors in interest) தெரிவிக்கப்பட வேண்டும்.

6. பரிசு ஏற்படுத்தியவர்களுடைய நோக்கத்துக்கு வேறுபட்ட எந்த காரியத்துக்கும் இந்த நிதியை உபயோகிக்கக்கூடாது. இனி எப்பொழுதேனும் சர்வகலாசாலையாரின் 7-D விதிப்படி யமைந்த தனித் தமிழ் வித்துவான் பட்டப்பரீக்ஷைக்குப் பிரதியாக ஏதேனும் ஏற்பட்டாலும், ஷை பரீக்ஷைக்குரிய விதிகள் மாறுபட்டாலும், பரிசை ஏற்படுத்திய வர்களுடைய நோக்கமாகிய தமிழ்க்கல்வியபிவிருத்திக்கு

கருதும் வகையில் ஸிண்டிகேட் சபையர் இந்தப் பரிசை உரியவருக்கு அளிக்க ஏற்பாடு செய்யும் உரிமையைப் பெறுவார்கள்.

7. பரிசு கொடுத்ததுபோக எஞ்சும் வட்டித்தொகையையும், மூல தனத்தைக் கவர்ன்மெண்டார் எப்போதேனும் திருப்பிக் கொடுக்க நேர்ந்தால் அத்தொகையையும் எந்தவிதமான பத்திரங்களிலேனும், வேறு வகையிலேனும் வைத்துப் பாதுகாக்கும் உரிமை ஸிண்டிகேட் சபையாருக்கு உண்டு.

காசிமடம்,<br>திருப்பனந்தாள்.<br>15-6—39.

**காசிவாசி சாமிநாத தம்பிரான்.**

---

குறிப்பு:—மேலேகண்ட மூலதனம் (எண்டௌமெண்ட்) சென்னை சர்வகலாசாலையாருடைய அங்கீகாரம் பெற்று 1937-38ம் வருஷத்திய யுனிவர்ஸிட்டி காலண்டர் பகுதி 2-ல் 129, 130வது பக்கங்களில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது.

# KING GEORGE V

# Memorial Tamil Prize

# Rs. 1,000, One Thousand

This Prize is founded by His Holiness Srilasri Kasivasi **Swaminatha Thambiran Swamigal Avergal of Tirupanandal** to keep ever fresh and green the sweet memory of our beloved Sovereign and Emperor **George V** for His benevolence, large heartedness and love for India. The Prize is intended for the encourage- ment for the pursuit and study of Tamil and it shall be styled as **"King George V Memorial Tamil Prize."**

The Endowment at present cousists of Rs.

**35,000** (Rupees Thirty five Thousand) invested in Government Securities. $3\frac{1}{2}$ per cent Non-terminable Promissory Notes. Out of the Annual interest a sum of **Rs. 1,000** (One Thousand) shall be paid in cash as **Prize**, annually, to the candidate who stands first in the first class in Tamil in the Oriental Title Examination, Vidvan (Final) Examination taking Tamil alone as the subject, under regulation 7-D of the Regulation in Chapter LXI of the University Calendar, Volume 1, Part II, 1935—36, or the corresponding Regulations of any subsequent issue of the University Calendar. The unexpended interest of the Endowment Fund shall be added to the corpus of the Fund annually and allowed to accumulate until the Capital of the Endowment amounts to Rs. 100,000-(Rupees One Lakh). Thereafter, the entire interest accruing from the Capital Fund shall be paid as Prize Amount to the Winner

each year.

The terms and conditions of the award of the Prize will be as follows :—

1. The Prize is open to all (male or female) candidates irrespective of caste or creed.

2. The Prize shall be awarded to the candidate, who, among the candidates qualifying during the year for the Vidvan Title with Tamil



alone, in the Oriental Titles Examination, secures a 1st Class in the Final Examination, and has stood first among them, provided that he has passed the Examination at the first appearance.

If, in any year, two or more candidates are eligible for the Prize, the Prize shall be awarded to that candidate who has obtained the highest number of marks in the whole exam ination taking into consideration the marks obtained in the Preliminary Examination for this title. If there is a tie even then, the Syndicate shall decide the award, taking into consideration the qualifications of the candidates in

English and the age of the candidate, preference being given to the candidate who has the highest qualification in English and is young in age.

3. The Prize shall be awarded to the Winner at a meeting of the Senate. If, in any year, the Prize Winner is unable to attend personally to receive the Prize, the Syndicate shall make arrangements to send the amount to him. In case of demise of the Prize-Winner before the actual award, the amount shall be payable to his or her heirs according to Law.

4. The Prize amount shall be paid in Cash or by Cheque. The award amount shall on no account be divided or reduced. If, in any year or series of years, the Prize is not awarded, the Prize amount of the year or years shall be added to the Prize amount of the year when the prize is awarded and the full amount shall be paid to the Prize-winner of that year. Only the extra amount available over the Prize amount of every year shall be added to the corpus of the fund.

5. The award of the Prize with the name and address of the recipient each year shall be

communicated to His Holiness Kasivasi Swaminatha Thambiran Avergal of Tirupanandal or to His Successors in-interest for information.

6. The Endowment shall not be diverted to any purpose other than the one intended by the Donor. If, at any future time, the Oriental Title Vidvan (Final) Examination under regulation 7-D Tamil alone of the University is replaced and or the rules or regu- lations for the Examination are modified, it shall be competent for the Syndicate to make such arrangements for the award of the prize to a

x

candidate who is, in their opinion, satisfies the intention of the Donor, i. e., to stimulate and advance the study of Tamil.

7. It shall be competent for the Syndicate to invest in any Securities or otherwise amounts available for investment from the interest available over the Prize amount and if the Capital amount of the endowment, in case the Government Securities in which the amount is now invested are tendered for payment by Government.

KASI MUTT,
Tirupanandal.
15—6—39 } **Kasivasi Swaminatha Thambiran,**

*N. B.—The above Endowment has been accepted by the University of Madras and published in the University Calendar 1937—38, Vol. II, Pages 129 & 130.*

---

# பொருளடக்கம்.

# இல்லறவியல்

# முகவுரை



திருக்குறளை இயற்றிய ஆசிரியர் தெய்வப்புலவர் திருவள்ளுவனார் ஆவர். அவருடைய தகப்பனார் அகஸ்தியர் மகனை பெருஞ்சாகரனுக்கும் திருவாரூர்ப்புலைச்சிக்கும் பிறந்த பகவன் என்றும், அவருடைய தாயார் பிராமவமிசத்திற் பிறந்த தவமுனி என்பவருக்கும் ஒரு பிராமணமாதிற்கும் பிறந்த ஆதி என்றுங் கூறுவர்.

திருவள்ளுவனாரின் பிறப்பு.

இவ்வாறு கூறுதற்குப் பழமையான சான்று ஒன்றுமிருப்பதாகத் தோன்றவில்லை. அஃது உண்மையாயிருப்பினும், அப்பிறப்பால் ஆசிரியர் திருவள்ளுவனார் போன்ற முனிவர்க்குக் குற்றமொன்றுமில்லை என மகாபாரதம் கூறுவது இங்குநோக்கத் தக்கது. அஃதாவது:- [1]வேதங்களில் தேர்ச்சிபெற்ற முனிவர்கள் கர்மசேஷத்தால்மானிடத்திலும், பக்ஷிகளிடத்திலும், தேவப்பொது மகளிரிடத்திலும் நாலாவது வருணத்தாரிடத்திலும் பிறக்கின்றனர். ருஷ்யசிருங்கர் மானிடத்திலும், கண்வர் மயிலிடத்திலும், அகஸ்தியரும், வஸிஷ்டரும், ஊர்வசியிடத்திலும், ஸோமேச்வரர் பாம்பினிடத்திலும், அச்வினீதேவதைகள் குதிரையினிடத்திலும், விதுரர் நாலாவது வருணத்தாரிடத்திலும் பிறந்தனர். அவர்களுடைய பிறப்பினால் அவருக்குள்ள சிறப்புக் குன்றாது என்பதே. அவர்கள் முற்பிறப்பினுள்ள ஸம்ஸ்காரத்தால் இப்பிறப்பில் ஞானத்தையடைந்து முத்திபெறலாம் என்பதைப் பெரியார் சங்கராச்சாரியர் தங்கள் [2]ஸூத்திர பாஷ்யத்திற் கூறியதும் நோக்கத்தக்கது. ஆசிரியர் திருவள்ளுவனாரும் அப்பிறப்பில் ஞானத்தையடைந்து ஜீவன்முத்தி பெற்ற பெரியாருள் ஒருவராயிருக்கக்கூடும் என்பதை அவரது நூல் காட்டுகின்றது.

(1) மஹாபாரதம்-ஆதிபர்வம் 64, 154-163, 238.

(2)

cf. येषां पुनः - पूर्वकृतसंस्कारवशाद्विदुरधर्मव्याधप्रभृतीनां ज्ञानोत्पत्तिः तेषां न शक्यते फलप्राप्तिः प्रतिषेद्धुम् (सू.भा.1,3,38)

ஆசிரியர் திருவள்ளுவனார் அறம் பொரு ளின்பம்....(501) என்ற குறளில் உறுதிப்பொருள்களைக் கூறினர். அவ்வறம் இல்

திருவள்ளுவனாரின் மதம்.

லறம் துறவறம் என இருவகைப்படும் என் பது அறத்துப்பாலை இருபகுதியாகப் பிரித்த மையால் அறியலாம். இன்பம் இம்மையிலும் மறுமையிலும் நிகழும் என்பதை

மறுமையும்
இம்மையு மின்பந் தரும் (98)
மறுமையும்
இம்மையும்
(1042)

என்ற குறள்களில் அறிவிக்கின்றார். மறுமை என்பது சுவர்க்கத்திலும் நரகத்திலும் வாழ்த லாகும். சுவர்க்கம்என்பதைக் குறிக்க, புத்தேணாடு (966,-1323), புத்தேளுலகு (234, 290), புத்தேளுலகம் (213) புத்தேளிர் வாழுமுலகு (58), வானகம் (101) என்ற சொற்களையும் புலவர் (234),

ஆங்கு வசிக்கும் தேவர்களைக் குறிக்க, தேவர் (1073), வானோர் (346), வானத்தவர் (86), இமையார் (906), அவியுணவினான்றார் (413), புத்தேளிர் (58) அமரர் (121), அகல் விசும்புளார் (25) என்ற சொற்களையும் வழங்கினர். அச்சுவர்க்கத் திற்குத் தலைவன் இந்திரன் என்பதை

அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி. (25).

என்ற குறளிற் கூறினர்,

பாவத்தின் பயனை அனுபவிக்கும் இடமாகிய நரகத்தை ஆரிருள் (121), இருள் சேர்ந்த வின்னுவுலகம் (243) என்ற சொற்களாற் குறித்தனர்.

தேவர்களுக்கு இவ்வுலகில் மனிதர் வேள்வியில் அளிக்கும் அவியே உணவு என்பதை அவியுணவினான்றார் (41 3) என்ற சொல் லாலும்,

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்

வறக்குமேல் வானோர்க்கு மீண்டு (18)

என்ற குறளாலுங் குறித்தனர்.

XV

மானிடர்க்குப் பிறப்புக்கள் பல உள என்பதை எழுபிறப்பும் (62, 107) முதலிய சொற்களாற் குறிக்கின்றனர். இப்பிறப்பில் பழவினைப்பயனை அனுபவிப்பதோடு முயற்சியும் செய்யவேண்டும் என்பதனை ஊழ், ஆள்வினையுடைமை என்ற அதிகாரங்களாற் காட்டினர்.

பூமியில் வசிக்கும் மக்களுள் பார்ப்பார் என்பவர் ஒருவர் என்றும், அவர்க்கு அறுதொழில் உள என்றும், அவர் வேதத்தைப் படித்தல்வேண்டும் என்றும், அவர் பிறப்பொழுக்கத்தைத் தவறாது நடாத்தவேண்டும் என்றும்

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும் (134)
அந்தணர் நூற்கும் .... .... (543)
ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர் (560)

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந்
தானடங்கல்
பேதையிற் பேதையா ரில் (834)
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார்
கீழ்ப்பிறந்துங்
கற்ரு ரனைத்திலர் பாடு. (409)

*முதலிய குறள்களால் நன்கு உணர்த்தினர். அவர்களுடைய அறுதொழில்களில் வேள்விசெய்தல் ஒன்று என்பது வெளிப்படை. அவ்வேள்வியைச் செய்யத்தகுகியுள்ள இல்லறத்தார் ஆயிரம் வேள்விசெய்தலாற் பெறும் பயனைத் துறவறத்தார் ஒன்றன் உயிரைக் கொல்லாமையால் அடைவர் என்பதை*

அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்
உயிர் செகுத் துண்ணுமை நன்று (259)

*என்ற குறளிற் கூறினர்.*

*ஆச்ரமங்கள் நான்கு என்பதை*

இல்வாழ்வா னென்பா னியல்புடைய
மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை (41)

*என்ற குறளாற் குறித்தனர்.*

*துறவறத்தார் இருவகைப்பட்டனர் என்பதை*

மழித்தலும் நீட்டலும் ........ (280)
என்றதனாற் குறித்தனர்.

xvi

வருணங்களையும், வருணதருமங்களையும், ஆச்ரமங்களையும், ஆச்ரமதருமங்களையும், சுவர்க்கம் நரகம் முதலியவற்றையும், பிதிரர் தேவர் முதலியோரையும் ஆசிரியர் கூறுகின்றமையின் வேதத்தின் பூர்வபாகமாகிய கர்மகாண்டத்தை ஒத்துக்கொண்டனர் என்பது வெளிப்படை.

வேதத்தின் ஞானகாண்டத்தாற் சொல்லப்பட்ட பலவகைக் கொள்கைகளுள் ஆசிரியர் கொள்கை யாது எனக் கூறுதற்கு முன்னர் அத்துவைதக் கொள்கைகளைச் சிறிது கூறல் தகும். அவை யாவன :—முக்தி என்பது பரமுக்தி, அபரமுக்தி என இருவகைப்படும்: பரமுக்தி என்பது ஜீவான்மா பரமான்மாவாக ஆவது: ஆகலான் மோக்ஷம் என்பதும் பிரமம் என்பதும் ஒரு பொருட் கிளவியாகும். அஃது இப்பிறப்பில் இவ்வுலகிலே பற்று நீங்கியவுடன் நிகழலாம். அதனை ஜீவன் முக்தி என்பர். இந்த ஜீவன்முக்தி விசிஷ்டாத்வைதம் சைவசித்தாந்தம் இவற்றில்

கொள்ளப்படவில்லை என அவற்றிற் சிறந்தார் கூறுவர்: பரமுக்தியில் பிரமலோகம் என்ற தொகைச்சொல் பிரமமானலோகம் என விரிக்கப்படும்:[2] அபரமுக்தி என்பது கடவுள்வழிபாடு முதலியவற்றால் அடையப்படும் பிரமலோகம்: ஈண்டு பிரமலோகம் என்பது பிரமனுடைய லோகம் என விரியும்: பிரமலோகம் விஷ்ணுலோகம் சிவலோகம் மூன்றும் ஒன்றனையே குறிக்கும். உலகில்தோன்றும்

ஆதாரம் உண்மையான பிரமம் ஆதும்:

பொருள்களுக்கெல்லாம்

அதனை வெவ்வேறாக

நினைக்கும் நினைவிற்கு அத்தியாஸம்[3] எனப்பெயர். அவ்வத்தியாஸம் நீங்கியவுடன் முத்தி பெறலாம்: அது பெறுவரையில் கடவுளை வழிபடவேண்டும்: என்பன ஆகும்.,

பரமுக்தியைச் சிறப்பென்னுஞ் செம்பொருள் (358) என்ற தொடராலும்,

(1) यदा सर्वे प्रमुच्यन्ते कामा येस्य हृदि श्रिताः ।
अथ मर्त्योमृतो भवति भवत्यत्र ब्रह्म समश्नुते ॥

[कठोप.6,14]

(2) ब्रह्मलोकः = ब्रह्मैव लोकः [बृहदारण्यक. 4,4,23]

(3) अध्यासः — अतस्मिन् तद्बुद्धिः
[सू.भा.शा.1,1,1]



பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ
ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.[6]

*என்ற விடத்து நிலம் என்ற சொல்லைக் கூறுமையாலும் ஆசிரியர் குறிக்கின்றனர்.*

*ஜீவன்முக்தியை.*

ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும். (370)
இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். (366)

*என்ற குறள்களிலுள்ள* அந்நிலையே, ஈண்டும் *என்ற சொற்களாலுங் குறிக்கின்றனர்.*

*அபரமுக்தியை* வானோர்க்குயர்ந்த உலகம் (346), வானெனனும் வைப்பு (24), வானம் (353), தாமரைக்கண்ணா னுலகு (1103) *முதலியவற்றாற் கூறுகின்றனர்.* நிலமிசை நீடுவாழ் வார் (3) *என்ற குறளாற் குறிக்கப்பட்டதும் இஃதே ஆகும்.*

*எல்லாப்பொருட்கும் பிரமமே ஆதாரம்*

என்பதைச் சார் புணர்ந்து (359)
என்றவிடத்துள்ள சார்பு என்ற சொல்லால் உணர்த்துகின்றனர்.

அத்தியாஸத்தை.

எப்பொரு ளெத்தன்மைத் தாயினு
மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. (355)

என்ற குறளாற் கூறினர்.

அவ்வத்தியாஸம் நீங்கின் ஞானம்பெற்று முத்தி யடையலாம் என்பதை,

இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

என்ற குறளிற் கூறினர்,

அடியளந்தான், தாமரைக்கண்ணான் என்ற வழங்குதலால் அவர் வழிபட்ட கடவுள் திருமால்

அறத்துப்பாலின் இறுதியில்

சொற்களை அவர்
ஆகும்.

ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்.

என்ற குறளைக் கூறியதால் ஆசிரியர் ஒரு
தல் கூடும்.

ஜீவன்முக்தராயிருந்

xviii

ஆசிரியர் தொல்காப்பியனார் மூன்றாம் வேற்றுமையில் 'ஆல்' உருபைக் கூறியிருக்க, கற்றதனால் (2), உள்ளத்தால் (282, 307),

திருவள்ளுவனார் காலம்.

களவினால் (283), இதனால் (517), அதனால் (642), நாணால் (1017), பாக்கியத்தால் (1141) என்ற விடங்களில் ஆசிரியர் திருவள்ளுவனார் ஆலுருபை வழங்கினர். அஃறிணையியற்பெயரில் பன்மையைக் குறிக்க உறழ்ச்சியாய்க் கள் விகுதி வரும் எனத் தொல்காப்பியனார் கூறியிருக்க, மற்றையவர்கள் (263), கீழ்கள் 1075 என உயர்திணைப் பெயரில் அதனைத் திருவள்ளுவனார் வழங்கினர். எல்லார்தமக்கும் எல்லார்தம்மையும் என வழங்கவேண்டுமென்று தொல்காப்பியனார் கூறியிருக்க, எல்லார்க்கும் (582), உயிர்க்கெல்லாம் (1012), எழுவாரை யெல்லாம் (1032) என்பனவற்றை வழங்கினர் குறளாசிரியர். நீயிர் என்பதை முன்னிலைப்பன்மைப்பெயராகத் தொல்காப் பியனார் வழங்கியிருக்க, நீர் (1319, 1320)

என்பதனைக் குறளாசிரியர் வழங்கினர். அன்னீற்றுத் தன்மையொருமை வினையை அவர் கூறுதிருக்க, இவர் பருகுவன் (1266), இலன் (205). இரப்பன் (1067) என்ற வினைகளை வழங்கினர். வியங்கோள்வினை தன்மை முன்னிலையுள் வாராதெனை அவர் கூறியிருக்க, இவர் காண்க (யான்) (1265., நீவாழி (1242) முதலியவற்றை வழங்கினர். ஆகலின் திருவள்ளுவனார் தொல்காப்பியனார்காலத்திற்குப் பிற்பட்டவர் என்பது வெளிப்படை.

மேற்கண்டவாறு ஆஅருபும், கள்விகுதியும், நீர் என்ற சொல்லும், பருகுவன் போன்றனவும் புறநானூறு, அகநானூறு, பத்துப்பாட்டு, குறுந்தொகை முதலிய நூல்களிற் காணப்படாமையால் அவையெல்லாம் திருக்குறளுக்கு முற்பட்ட நூல்களாதல் தகும். கலித்தொகையில் கோட்டால்(42), ஐவர்கள்(26), அரசர்கள் (25), நீர் (25), வாழிய நீ (96) என்ற வழக்குகளோடு நுமக்கு என்பதன் திரிபாகிய உமக்கு என்பதும் யுளிற் காணப்படுகின்றமையால் கலித்தொகை

139 ஆவது செய்

திருக்குறளிற்குப்
பிற்பட்டதோ என்ற ஐயம் உண்டாகின்றது.

ஏனையோர் உறுதிப்பொருள்களை அறம், பொருள், இன்பம், வீடு என நால்வகையாகக் கூறியிருக்க, திருவள்ளுவனார் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என நூலை ஏன் முப்பிரிவாக்கினர் எனின், வீட்டின் இலக்கணத்தை ஒரு

திருவள்ளுவனார் பொருட்பிரிவு.

xix

வாறு கடவுள் வாழ்த்தில் கூறிவிட்டமையானும் வீட்டிற்குச் சாதன
மான துறவறத்தின் தன்மை அறத்துப்பாலின் பிற்பகுதியிற் கூறி
விட்டமையானும் என்க. அவ்வாறாயின் அறம் என்பது எத்துணைப்
படும் எனின், இல்லறம், துறவறம் என இருவகைப்படும் என்க.
அவற்றையே ப்ரவிருத்திலக்ஷண தர்மம் என்றும் நிவிருத்தி
லக்ஷண தர்மம் என்றும் மகாபாரதத்திற் கூறியது காண்க.”

இல்லறத்தின் இலக்கணம் யாது எனின், அகப்பற்று புறப்

பற்று இவற்றுடன்கூடி மனைவி மக்களோடு
இல்லறதுறவறங் இருத்தல் ஆ தும்;
அஃதல்லாதது துறவறம்
களின் இலக்கணம் ஆகும்; அ கப்பற்று
புறப்பற்று இவற்றை
நீக்கி மனைவிமக்களோடு இருத்தலும் அற
வறத்தின்பாற்படும் என மஹாபாரதம்
அனுசாஸனபர்வம் 209
அத்தியாயத்திற் கூறியது காண்க
இவ்வுலகில் ஒருவனுடைய சு கதுக்கத்திற்குக்
காரணம் அவனு
டைய பழைய வினைப்பயனும்
தற்போது செய்
ஊழின் யும் முயற்சியும் ஆயினும்,
அறத்தைச் செய்ய
வைப்புமுறை. முயற்சி சிறந்ததென்றும்,
பொருளை அடைய
வும் இன்பத்தை நுகரவும் பழையவினை சிறந்த
தெனவுங் காட்ட ஆசிரியர் ஊழ் என்ற
அதிகாரத்தை அறத்துப்
பாலின் இறுதியிலும் பொருட்பாலின்
தொடக்கத்திலும் வைத்த
னர் என்க.

இத்திருக்குறளுக்குப் பழைய உரைகாரர்கள் பதின்மர் என்

உரைகள்.

றும், அவர் தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிமேலழகர், பருதி, திருமலையர், மல்லர், கவிப்பெருமாள், 'காளிங்கள்' ஆவர் என்றும் கூறுவர். இப்பத்து

(1)

प्रवृत्तिलक्षणो धर्मो गृहस्थेषु विधीयते । [म.भा.अनु.211,16]
निवृत्तिलक्षणः पुण्यो धर्मो मोक्षे विधीयते ॥ [म.भा.अनु.211,18]

(2) य एकपत्निधर्माणश्चरन्ति विपुलं तपः ।
विनृयपादेषु ये केचिद्ये च नैमिशवासिनः ॥
शान्ता दान्ता जितक्रोधाः सर्वातिथ्यपरायणाः ।
प्राणिष्वात्मोपमा नित्यम् ऋतुकालाभिगामिनः ।
स्वदारसहिता देवि चरन्ति व्रतमुत्तमम् ।
वसन्ति सुखमव्यग्राः पुत्रदारसमन्वितः ।
ते स्वदारैः समायान्ति पुण्यॉंल्लोकान्दृढव्रताः ।
[म.भा.अनु.209]

உரைகளுள் தற்போது அச்சில் இருப்பது மணக்குடவருரை, பரிமேலழகருரை என்ற இரண்டேயாம். இவற்றுள் பரிமேலழக ருரையே மிகுதியாய்ப் படிக்கப்படுகின்றது. அதன் நடை தமிழ் நூல்களில் மிகுதியான பயிர்ச்சியில்லாதார்க்கு அறியமுடியாமையால் தமிழ்மக்களுள் பெரும்பாலோர் திருக்குறளைப் படியாமலிருக்கின் றார். அக்குறையை நீக்க எளிதான நடையில் இப்பாலருரை எழு தப்பட்டது. ஈண்டு ஒவ்வொரு அதிகாரத்தின் கருத்துக்கள் தொடக்கத்தில் தொகுக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு அதிகாரத்தி லும் ஒரே பொருள்கொண்ட சொற்களுஞ் சொற்றொடர்களும் குறிக் கப்பட்டுள்ளன. முன்பின் குறள்களுக்கு இயைபு கூறப்பட்டுள்ளது. இயைபு கூறுதற்குப் பொருந்துமாறு சில அதிகாரங்களில் குறள் களின் முறை மணக்குடவருரை இவற்றிலுள்ள முறையினின்றும் மாறுபட்டிருக்கும். முடிந்தவரை குறள்களுக்கு ஒப்புமைப் பகுதி உபநிஷத்து மகாபாரதம் முதலிய வடமொழி நூல்களிலிருந்தும் கொடுக்கப்பட்டுள்ளன. தமிழ்மக்களுள் ஆண்பெண் அனைவரும் திருக்குறளைப் படித்து மகிழவேண்டும் என்றதே இவ்வுரை எழுதிய தற்கு முக்கிய நோக்கம் ஆகும். இவ்வுரையிற் காணப்படுங் குறை களைக் கூறுவோர்க்கு எப்போதும் நன்றியோடிருப்பேன்.

இவ்வுரையை எழுதியவுடன் மகிழ்ச்சியுடன் இதைப் பதிப் பிக்கவேண்டிய செலவு முழுமையும் வழக்கம்போல் ஏற்றுக்கொண்ட வர்களும் திருப்பனந்தாள் காசிமடத்தலைவர்களுமான ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாதத்தம்பிரான் சுவாமிகள் அவர்களுக்கு என் நன்றியை உவகையுடன் செலுத்துகின்றேன்.

இவ்வுரையை அச்சிடும்போதும் அதற்கு முன்னரும் நன்கு படித்துக் குற்றங்குறைகளைக் கூறியவரும் திருவையாற்றில் சிறந்த வக்கீலுமான என் நண்பர் மகா-ஏ-ஏ-ஸ்ரீ V. சுப்பிரமணிய அய்யர் அவர்களுக்கு என் நன்றியைச் செலுத்துகின்றேன். அச்சிடுவ

தற்கு முன்னரும் பின்னரும் இதைப் படித்துச் சில மாறுபாடுகளை உணர்த்திய சி. வித்வான் V. R பஞ்சாபகேச சர்மா (Tamil Pandit, Ramakrishna Mission High School, Mambalam) முதலிய என் மாணவமாணவிகள் தமிழிலக்கணவிலக்கியங்களில் தேர்ச்சிபெற்று புரிவாராக.

விளங்குமாறு கடவுள் ப்ரணதார்த்திஹரர் அருள்

திருவையாறு
15—6—39

P. S. சுப்பிரமணிய சாஸ்திரி.

## இப்பாலுரையில் ஆளப்பட்ட நூல்களும் அவற்றின் குறியீடுகளும்

### தமிழ்நூல்கள்.

1. தொல்காப்பியம்
   - i. எழுத்ததிகாரம்
   - ii. சொல்லதிகாரம்
2. புறநானூறு

3. கலித்தொகை
4. பதிற்றுப்பத்து
5. மதுரைக்காஞ்சி
6. பரிபாடல்
7. தேவாரம்
8. நாலடியார்
9. திருக்குறள்— மணக்குடவருரை
10. ஷை பரிமேலழகருரை
பரிமே

## வடமொழி நூல்கள்.

1 तैत्तिरीयसंहिता
तै.सं. 2 तैत्तिरीयोपनिषत्
तै.उप. 3 छान्दोग्यम्
4 बृहदारण्यकोपनिषत्
बृह.उप. 5 कठोपनिषत्
6 मुण्डकोपनिषत्
7 महाभारतम्
म.भा.
i. आदिपर्व
आदि.

காலடி
மணக்

महाभारतम्

ix. अनुशासनपर्व

x. अश्वमेधपर्व

xi. स्त्रीपर्व

xii. मौसलापर्व

xiii. भगवद्गीता

8 रामायणम्

सुन्दरकाण्डम्

9 महाभाष्यम्

10 मनुधर्मशास्त्रम्

11 उत्तररामचरितम्

12 बृहदारण्यकोपनिषत्-
शांकरभाष्यम्



म.भा.

अनु.

अश्वमे.

स्त्री.

मौसल.

भ.गी.
रामा.
सु.

मनु.

---

## பிழையுந் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| xv | 4 | அதிகாஙகளாற் | அதிகாரங்களாற் |
| xvi | 28 | कलोप | कठोप |
| 13 | 1 | முதல் வரியை ஒன்பதாம் வரியாய்ப் படிக்க. | |
| 29 | 25 | செவ்வத்திற்கு | |

செல்வத்திற்கு

| | | |
|---|---|---|
| 36 | 27 | தம்மக்கள் |
| | | தம்மக்கள 38—39   38 ஆம் பக்கத்து 22, 23 வரிகளை 39 ஆம் பக்கத்து முதல் வரியாய்ப் படிக்க. |
| 50 | 11 | பயன்றெறிவார் |
| 72 | 4 & 6 | ஒருத்தார்க்கு |
| ... | 18 | நோற்பாற் |
| 74 | 16 | அழுக்கறுப்பான் |
| 104 | 15 | துறவியல் |
| 127 | 35 | नस्ति |
| 130 | 25 | कोधस्य |
| 143 | 23 | दृष्ठ: |
| 149 | 33 | अदर्शन |
| 150 | 32 | त्वश्यया |

பயன்றெரிவார்

ஒழுக்கார்க்கு

ணொற்டார்

அழுக்கறுப்பான்

ஆறவறவியல்

नास्ति

क्रोधस्य

इष्टः

अदर्शना—

त्वप्रत्यया

உ





# திருக்குறள்

## அறத்துப்பால்

### பாலருரையுடன்

---

## 1. கடவுள்வாழ்த்து.

---

கடவுள்வாழ்த்து என்பதற்குக் கடவுளின் ஸ்துதி என்பது பொருள். இவ்வதிகாரத்தில் கடவுளைக் குறிக்க ஆதிபகவன்[1], வாலறிவன்[2], மலர்மிசையேகினன்[3], வேண்டுதல்வேண்டாமை யிலான்[4], இறைவன்[5], பொறிவாயிலைந்தவித்தான்[6], தனக்குவமை யில்லாதான்[7], அறவாழியந்தணன்[8], எண்குணத்தான்[9] என்ற சொற்களையும், அவருடைய பாதாரவிந்தங்களைக் குறிக்க நற்றாள்[10] மாணடி[11], தாள், அடி என்ற சொற்களையும் ஆசிரியர் திருவள்ளுவனார் வழங்குகின்றனர்.

(1) ஐசுவரியம், வீரியம், கீர்த்தி, திரு, ஞானம், வைராக்கியம் என்ற ஆறினையும் பகம் என்ற சொல் குறிக்கும். அவற்றை உடையவன் பகவன். பூதங்களின் உற்பத்தியையும், முடிவையும், வரவையும், செலவையும், வித்தியையும், அவித்தியையும் அறிபவன் பகவன் எனவுங் கூறுவர். பகவருள் முதலானவன் ஆதிபகவன். (2) சுத்தமான அறிவுடையவன். (3) தாமரைப் பூவின்மேலுள்ளவன் (4) ஆசை வெறுப்பு இவற்றை உடைத்தாயிராதவன் (5) தலைவன் (6) இந்திரியங்களை வழியாகவுடைய ஐந்து விஷயங்களிலும் பற்றில்லாதவன் (7) தனக்கு உபமான மில்லாதவன் (8) தருமக்கடலாகிய அந்தணன் (9) அணிமா, மஹிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசித்துவம், வசித்துவம் என்ற எட்டு சித்திகளையும் உடையவன் (10) செம்மையுள்ள தாள்கள் (11) மேன்மைப்பட்ட அடிகள்.

## 2

முதற்குறளில் கடவுள் ஒருவர் உண்டு என்றும், இரண்டாவதில் அவருடைய திருவடிகளைத் தொழுவதே கல்விக்கு அழகு என்றும், மேல் நான்கு குறள்களில் அதன் பயனை விதிமுகமாயும், பின்னர் இரண்டு குறள்களில் எதிர்மறைமுகமாயும், ஒன்பதாவதில் அவற்றைத் தொகுத்தும் ஆசிரியர் கூறி, பத்தாவது குறளில் அவருடைய திருவடிகளைச் சேராத இந்திரியங்கள் பயனில்லை என முடித்தனர்.

1. அகர முதல[1] வெழுத்தெல்லா மாதி
 பகவன் முதற்றே[2] யுலகு.[3,4]

பொருள்.—எழுத்து எல்லாம் = எல்லா வெழுத்துக்களும், அகர முதல = அகாத்தை முதலெழுத்தாகவுடையன. (அதுபோல), உலகு உலகம், ஆதிபகவன்முதற்று = கடவுளை முதலாக வுடையது. (ஏ = அசை).

கடவுள் ஒருவர் உண்டு; அவர் உலகம் முன் இருந்தார் என்பது கருத்து.

படைக்கப்படுவதற்கு

எழுத்து, உலகு, கடவுள் இவற்றிற்குள்ள இயைபு யாது எனின்,

2. [5]கற்றதனு லாய பயனேன்கொல் வாலறிவ
னற்று டொழாஅ ரெனின்.

பொ-ள். உலகு =, உலகத்தார், வாலறிவனற்றாள் = கடவுளின் திருவடிகளை, தொழார் எனின் = வணங்காவிட்டால், (அவர்), எழுத்து = நூல்களை[5], கற்றதனல் = படித்ததனுல், ஆய = ஆகிய, பயன் = பிரயோஜனம், என்கொல் = என்னமோ? ஒன்றும் இல்லை என்பது கருத்து.

(1, & 2) அகாமுதல, ஆதிபகவன்முதற்று என்பன, அகாமுதல் ஆதிபகவன்முதல் என்ற பண்புத்தொகைச்சொற்களடியாய்ப் பிறந்த குறிப்புவினைகள்.

(3) cf. अक्षरात् संभवतीह विश्वम् (मुण्डकोपनिषत् 1,1,7)

(4) அறிந்த எழுத்துக்கள் உலகு இவற்றைக் கொண்டு அறியாத கடவுளை உணர்த்தினர் ஆசிரியர்.

(5) ஆல் உருபு தொல்காப்பியத்திற் கூறப்படவில்லை.

(6) எழுத்து என்பது எழுத்துக்களாலாகிய ஆகுபெயர்.

நூலைக் குறிப்பதால்

3

உலகு, எழுத்து என்பன முதற்குறளிலிருந்து அதிகரித்தன.

கடவுளடிகளைத் தொழுதலாற் பயன் யாது எனின்,

**3.** [1]மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை[2] நீடுவாழ் வார்.

பொ-ள். மலர்மிசையேகினான் மாணடி = கடவுளின் திருவடிகளை, சேர்ந்தார் = எப்பொழுதும் தியானிப்பவர், நிலமிசை = பிரும்ம லோகத்தில், நீடு = பலநாள், வாழ்வார் = இருப்பர்.

அங்குப் பலநாள் இருப்பதற்குக் காரணம் யாது எனின்,

4. *வேண்டுதல்வேண் டாமை
யிலானடி சேர்ந்தார்க் கியாண்டு மிடும்பை யில[4].

பொ-ள். வேண்டுதல்வேண்டாமையிலானடி
= கடவுளுடைய
அடிகளை, சேர்ந்தார்க்கு = இடைவிடாது
தியானிப்பவர்க்கு, யாண்
டும் = ஒருபோதும்,
இடும்பை = பிறவித்துன்பங்கள், இல = இல்லை.
பிறவித்துன்பங்களின் இல்லாமைக்கு

யாது காரணம் எனின்,

(1) மலர் என்பது மலர்போன்ற இருதயத்தைக்
மென்பர்.

(हृत्पुण्डरीक)குறிக்கு

(2) ஆறுவது குறளில் நிலமிசை என்ற சொல்லைக் கூறாது. நீடு வாழ்வார் என்பதைமாத்திரம் ஆசிரியர் கூறியதால், அங்கு அச்சொற்கு முத்தியடைவர் என்ற பொருளைக்கொள்ளுதல் தகும். இங்கு நிலம் என்பதற்குக் காரியப்பிரம்மலோகம் என்றும், நீடுவாழ்வார் என்பதற்குப் பலநாள்இருப்பர் என்றும் பொருள் கொள்ளல்வேண்டும். நிலம் என்பதற்கு இவ்வுலகும் மேலுலகும் எனப் பொருள் கொண்டனர் மணக்குடவர்.

(3) cf. अशरीरं वा वसन्तं न प्रियाप्रिये स्पृशतः। (छान्दोग्यम् 8,12,1)

मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम्।

नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥ (भ. गी. 8,15)

(4) சேர்ந்தார்...இலர். (மணக் - பாடம்).

4

5. [1]இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்

[2]பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு[3].

பொ-ள். இறைவன் = கடவுளிடத்தில், பொருள்சேர்புகழ் வஞ்சனையின்றி உண்மையான ஸ்துதியை, புரிந்தார்மாட்டு = செய்தவரிடத்தில், இருள்சேரிருவினையும் = புண்ணியபாவங்களைச் சேர்ப்பிக்கின்ற நல்வினையும் தீவினையும், சேரா = உண்டாகா.

பின்னர் அவருக்கு யாது நிகழும் எனின்,

**6.**

பொறிவாயி [4]லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்[5,6]

பொ - ள். *பொறிவாயிலைந்தவித்தான்பொய்தீரொழுக்கநெறி நின்றார் = கடவுளினது உண்மையான தருமமார்க்கத்தில் நடக்கின்றவர், நீடுவாழ்வார் = முத்தி அடைவர்.*

(1) இருள் என்பதற்குப் புண்ணியபாவங்கள் பொருள். இதற்கு अन्धन्तमः ये अविद्यामुपासते (बृहदारण्यकोपनिषत् 4,4,10) என்பதனடியிலுள்ள अन्धं अदर्शनात्मकं तमः "संसारनियामकम्" என்ற சங்கராசார்யபாஷ்யமே

சான்றாகும். அவிச்சை அதற்குப் பொருளென்பர் பரிமேலழகர். அது அவித்தையின் உபாஸ்திக்குப் பயனென முற்கூறிய உபநிஷத்திற் காண்க.

(2) பொருள்சேர்புகழ் = अन्वर्थ स्तोत्रम्.

(3) இடப்பொருளையுணர்த்தும் மாடு என்ற சொல்லின் ஏழாம் வேற்றுமையாகிய மாட்டின்கண் மாட்டு என நின்றது.

என்பது சாரியையும் விகுதியுங் குன்றி

(4) ஐந்து என்பது ஐந்து விஷயங்களின் நுகர்ச்சியைக் குறிக்கும்.

(5) *மூன்றாங்குறளில் நிலமிசை நீடுவாழ்வார் என்றும் ஈண்டு நீடு வாழ்வார் என்றுமே ஆசிரியர் கூறியிருத்தலையும், 370-ஆம் குறளில் அந்நிலையே என்ற சொல்லால் சீவன்முத்தனைக் குறித்தலையும் நோக்கின், மூன்றாங்குறளால் பிரம்மலோகத்தில் நெடுநாள் வாழ்வார் என்றும், ஆறாங் குறளால் அங்கிருந்து முத்தியை அடைவர் என்றும் ஆசிரியர் கூறினர் என்னலாம். இரண்டு குறட்களுக்கும் ஒரே வகையாகப் பரிமேலழகர் பொருள்கொண்டனரெனத் தோற்றுகின்றது. ஆங்குப் 'போக நுகர்தலும்' ஈண்டு 'சாவில்லையென்றதும்' கூறப்பட்டன என்பர் மணக்குடவர்.*

(6) cf. अशब्दमस्पर्शमरूपमव्ययं तथारसं नित्यमगंधवच्च यत्।

अनाद्यनन्तं महतःपरं ध्रुवं निचाय्य तं मृत्युमुखात्प्रमुच्यते ॥ (कठोपनिषत् 3,15)

अगंधमरसस्पर्शमशब्दमपरिग्रहम् ।

अरूपमनभिज्ञेयं दृष्ट्वात्मानं विमुच्यते ॥ (म.भा. अश्वमे 20,10)

5

*அவ்வாறு கடவுளின் திருவடிகளைச் சாராதார்க்கு யாது நிகழுமென்பதைப் பின் இரண்டு குறள்களாற் கூறினர்.*

7. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது.

பொ-ள்.

*தனக்குவமையில்லாதான்றாள் = கடவுளுடைய அடிகளை, சேர்ந்தார்க்கு அல்லால் = தியானிப்பவர்க்கு அன்றி,(பிறர்க்கு),*

*மனக்கவலை = மனத்திலுள்ள கவலையை, மாற்றல் = போக்குதல்,*

*அரிது = இல்லை.*

**8.** அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க்
கல்லாற் பிறவாழி[1] நீந்த லரிது.[2]

பொ-ள்.

*அறவாழியந்தணன்றாள் = கடவுளின் அடிகளை, சேர்ந்தார்க்கு அல்லால் = தியானிப்பவர்க்கு அன்றி, (பிறர்க்கு), பிற வாழி = பிறப்பாகிய கடலை, நீந்தல் = தாண்டுதல், அரிது = இல்லை.*

*முன் ஆறு குறள்களின் பொருளைத் தொகுத்துப் பின்னர்க் கூறினர்.*

**9.** பிறவிப் பெருங்கட னீந்துவர்[3] நீந்தா
ரிறைவ னடிசேரா தார்.

(1) பிறவாழி= संसारसागरः இதனைப் பிறவு ஆழி எனப் பிரித்து பொருள் கூறப்பட்டது. ஆனால் பிற ஆழி எனப் பிரித்து, 'பிறவாகிய கடல்களை' எனப் பரிமேலழகரும் 'காமமும் பொருளும் பற்றி வரும் அவலம்' என மணக்குடவரும் அதற்குப் பொருள்கூறினர். பிறவு என்பது பிறவி என்ற பொருளில் வழங்கப்பட்டதை 'பிறவியொடிறவு மானான்' என்ற தேவாரத்துட் காண்க.

(2) cf. यंदृष्ट्वा यतयस्तात न शोचंति गतज्वराः ।
जन्ममृत्युभयान्मुक्तास्तीर्णाःसंसारसागरं ॥ (म. भा. अनु 167,42)
संसारसागरं घोरं तरिष्यन्ति सुदुस्तरम् । (म. भा. अश्वमे. 19,33)

(3) 'சேர்ந்தாரென்பது சொல்லெச்சம்' என்பர் பரிமேலழகர். அது சேனாவரையர்கொள்கையைப் பின்பற்றியது. அறவாழியந்தணன்

6

பொ-ள். (இறைவனடிசேர்ந்தார்) = கடவுளின் அடிகளைத் தியானிப்பவர், பிறவிப் பெருங்கடல்=பிறப்பாகிய பெரிய சமுத்திரத்தை, நீந்துவர்=தாண்டுவர்; இறைவனடி சேராதார்=கடவுளின் அடிகளைத் தியானிக்காதவர், (அதனை), நீந்தார் =தாண்டமாட்டார்.

ஆகலின் கடவுளின் திருவடிகளை வணங்கவேண்டும் என முடிக்கின்றார்.

**10.** கோளில் பொறியிற் [1]குணமிலவே

யெண்குணத்தான்ः றாளை வணங்காத் தலை[3,4].

பொ-ள். எண்குணத்தான் றாளை = கடவுளின் அடிகளை, வணங்காத் தலை = தொழாத தலைகள், கோளில் பொறியின் = விஷயங்களைக் கவராத இந்திரியங்களைப்போல், குணம் = குணத்தை, இல = உடையனவல்ல,

*றாள்சேர்ந்தார்க்கு என்பதை முற்குறளிலிருந்து அதிகரித்து, அறவாழி யந்தணன்றாள்சேர்ந்தார் என்பதாக வேற்றுமை மாற்றிக்கொள்ளலும் ஒன்று.*

(1) cf. गुणः

(2) cf. अणिमा महिमा चैव प्राप्तिः प्राकाम्यमेव च ।
ईशित्वं च वशित्वं च यत्र कामावसायिता ॥
एतानष्टगुणान् प्राप्य कथंचिद्योगिनां वराः ।
ईशाः सर्वस्य लोकस्य देवानप्यतिशेरते ॥(म.भा. अनु. 246,394)

(3) தலை என்பது உபலக்ஷணம். நா, கண் முதலியவற்றையும் அதனாற் கொள்ளல்தகும்.

(4) இக்குறள் ஒன்பதாவதாகவும் முன்னுள்ள குறள் பத்தாவதாகவும் பரிமேலழகருரையிலும், இம்முறையிலே மணக்குடவருரையிலும் உள்ளன. கடவுளின் ஸ்துதியைப்பற்றிக் கூறும் இவ்வதிகாரத்தின் தொடக்கத்தில் கடவுளின் அடிகளைத் தொழுவதே கல்விக்கு அழகு எனக் கூறப்பட்டமையான், ஈற்றிலும் அவற்றை வணங்காத தலை முதலிய உறுப்புக்கள் பயனில்லை எனக் கூறுவதே பொருந்தும்.

# 2. வான்சிறப்பு.

வான்சிறப்பு என்பதற்கு மழையின் பெருமை என்பது பொருள்.

கடவுளைத்தொழுதல் ஸ்தூலசரீரமில்லாமல் முடியாமையாலும், அதனைக் காக்க உணவும் நீரும் வேண்டுமாகையாலும், அவ்விரண்டும் மழையால் உண்டாகின்றமையாலும் கடவுள்வாழ்த்தின் பின்னர் வான்சிறப்பை ஆசிரியர் கூறினர்.

ஈண்டு மழையைக் குறிக்க மழை, வான், விண், புயல், வானம் என்ற சொற்களையும், மேகத்தைக் குறிக்க விசும்பு, எழிலி என்ற சொற்களையும் ஆசிரியர் வழங்கினர்.

முதற்குறளில் மழையை அமிர்தமென்று நினைக்கவேண்டு மென்றும், பின்னர் நான்கு குறள்களில் மழை எல்லோர்க்கும் உண வைத் தருமென்றும், மழையின்மையால் பசி வருத்துமென்றும், உழவர் நிலங்களை உழமாட்டாரென்றும், அக்காரணம்பற்றியே உல கத்தை ஆக்குவதும் கெடுப்பதும் அம்மழையே

யென்றும், பின்னர் இரண்டு குறள்களில் மழையின் மையால் புல்லும் காணப்படாதென் றும், கடலும் குன்றுமாகையால் ஆங்குள்ள பொருள்களுங் குன்று மென்றும், பின்னர்த் தேவர்களுக்குச் சிறப்பாக பூசை யில்லாமை யால் அவர்க்கும் கேடு நிகழு மென்றும், பிறர்க்குத் தானம் செய்ய முடியாமையால் இல்லறத்தாரும் தவம் செய்ய முடியாமையால் துற வறத்தாரும் துன்பமடைவர் என்றும் கூறி, நீரோட்டம் இராது என முடித்தனர்.

மழையின்றி உலகத்தில்

11 [1]வானின் றுலகம்[2] வழங்கி வருதலாற்[3]
1 [4]றானமிழ்த [5]மென்றுணரற் பாற்று.

(1) வானின்று — நின்று என்பது ஐந்தாம் வேற்றுமைச்சொல் லுருபு. இவ்வாறு கொள்ளின் அது நிற்ப என்றதன் திரிபு எனப் பரி மேலழகர்போல் கொள்ளவேண்டாம்.

(2) 'உலகமென்றது ஈண்டு உயிர்களை' என்றனர் பரிமேலழகர் மழையின்மையால் கடல்குன்றுதல் போன்றனவும் நிகழ்கின்றமையான் உலகம் என்பது உலகத்துள்ள பொருள்களெல்லாவற்றையுங் குறித்தல் கூடும்.

(3) வரு = துணைவினை

(4) தான் = இதனை உரைகாரர்கள் மழையோடு கூட்டினர்.

(5) cf. अमृतम् Eng. *immortal*; Grk. *ambrotos*.

8

பொ-ள். உலகம் = உலகத்திலுள்ள பொருள்கள், வானின்று = மழைகாரணமாக, வழங்கிவருதலால்தான் = ஜீவித்து வருதலாலே, (அது) அமிழ்தம் என்று = அமிர்தமென்று, உணர்ற்பாற்று = உணரத்தகுந்தது.

ஏன் மழை அமிழ்தமென்று கூறப்படுகின்றது எனின்,

**12** துப்பார்க்குத் துப்பாய[1] துப்பாக்கித் துப்பார்க்குத்[2]
**2** துப்பாய தூஉ மழை[3].

பொ-ள், மழை, துப்பார்க்கு = உண்ணுபவர்க்கு, துப்பு = உணவு, ஆய = ஆகுமாறு, துப்பு = உணவுப்பொருள்களை, ஆக்கி = உண்டாக்கி, துப்பார்க்கு = உண்ணுபவர்க்கு, துப்பு = உணவு, ஆய தூம் = ஆகியதும், (ஆகும்).

மழை பெய்யாவிட்டால் குற்றம் யாது எனின்,

**13** விண்ணின்று[1] பொய்ப்பின் விரிநீர்

வியனுலகத்

3 துன்னின் றுடற்றும் பசி[5].

பொ-ள். விண் = மழை, நின்று பொய்ப்பின் = பெய்யாது தவறினால், விரிநீர்விய னுலகத்துள் = கடல்சூழ்ந்த பரந்தபூமியில், துப் பார்க்கு = உணவு வேண்டுபவர்க்கு, பசி, நின்று உடற்றும் = நிலைபெற்று துன்பப்படுத்தும்.

துப்பார்க்கு என்பது முற்குறளிலிருந்து அதிகரித்தது.

ஏன் பசி துன்பப்படுத்தும் எனின்,

(1) துப்பாய = உண்டற்கான (மணக்.); = நல்ல (பரிமே.)

(2) துப்பார்க்கு — அஃறிணைப்பொருட்கும் உபலக்ஷணம்.

(3) உட்கொள்ளப்பட்ட நீரின் சூட்சமப்பகுதி பிராணனாகவும், மத்திமப்பகுதி இரத்தமாகவும் மாறுகின்றன என்பதும், நீரால் ஓஷதிகளும், ஓஷதிகளால் அன்னமும் உண்டாகின்றன என்பதும், அதன் சூட்சமப் பகுதி மனதாகவும், மத்திமப்பகுதி மாமிசமாகவும் மாறுகின்றன என்பதும் சாந்தோக்கியம் முதலிய உபநிஷத்துக்களிற் காண்க.

(4) நின்று = நிலைநிற்க (மணக்.)

(5) cf. यदा सुवृष्टिर्न भवति व्याधीयन्ते प्राणाः अन्नं कनीयो भविष्यति ।
[छान्दोग्यम् 7,9,2]

न च वर्षति पर्जन्यः कथमन्नं भविष्यति [म.भा. अश्वमे 94,13]

14 [1]ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
4 வாரி [2]வளங்குன்றிக் கால்[3,4]

பொ-ள். புயல் = மழை, என்னும் = என்று சொல்லப்படுகிற,
வாரி = நீர், வளம் = பிரயோஜனத்தில்,
குன்றிக்கால் = குறைந்த
பொழுது, உழவர், ஏரின் = ஏரால்,
உழார் = உழமாட்டார்.

ஆகலின்,

15 கெடுப்பதூஉங் கெட்டார்க்குச்
சார்வாய் மற்றுங்கே[5]
5 எடுப்பதூஉ மெல்லா மழை[6].

பொ-ள். மழை, உலகம் = உலகத்தாரை,
கெடுப்பதும் = துன்
பப்படுத்துவதும், மற்று = அவ்வாறில்லாமல்,
கெட்டார்க்கு = துன் பப்பட்டவர்க்கு,
சார்வு = துணை, ஆய் = ஆகி, ஆங்கே = அப்
பொழுதே, எடுப்பதும் = ஆக்குவதும், (ஆம்.)

உலகம் என்பது முதற்குறளிலிருந்து அதிகரித்தது.

மழையில்லாமை உலகத்தார்க்குப் பசியை உண்டாக்குவதோடு வேறு எதனையுஞ் செய்யும் எனின்,

**16/6** [1]விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

பொ-ள். விசும்பின் = மேகத்திலிருந்து, துளி = மழைத்துளி, வீழின் அல்லால் = விழாமற்போனால், ஆங்கே = அப்பொழுதே, பசும்புற்றலைகாண்பு = பசும்புல்லின் தலையைப் பார்த்தல், அரிது = இல்லை. (மற்று = அசை)[8]

(1) ஐந்தாம்வேற்றுமை மூன்றாம்வேற்றுமைப்பொருளில் வந்தது.
(2) வளம் — ஏழாம்வேற்றுமை.
(3) தன்றியக்கால்என்றவினையெச்சம் துன்றிக்கால் எனக்குன்றியது
(4) புயலென்னும்வாரிவளன் என்பதைத் தொகையாகவும், குன்றிக்கால் என்பதற்கு எழுவாயாகவுங் கொள்ளல் தகும்.
(5) ஆங்கு—மறுதலைத் தொழிலுவமத்தின்கண் வந்த உவமச் சொல். (பரிமே.)
(6) கெடுப்பது = கெடுத்தல், எடுப்பது = எடுத்தல், வல்லகா— அவாய் நிலையான் வந்தது (பரிமே.)
(7) விசும்பு = ஆகாயம் = மேகம்; ஆகுபெயர்.
(8) மற்று — வினைமாற்றின்கண் வந்தது. (பரிமே.)

மேலும்,

**17**

7

நெடுங்கடலுந் தன்னீர்மை[1] குன்றுந் [2]தடிந்தெழிலி தானல்கா தாகி விடின்.

பொ-ள்.

*எழிலி தான் = மேகமே, (நெடுங்கடலை), தடிந்து = குறைத்து, துளி = மழையை, நல்கா தாகிவிடின் = கொடுக்காவிட்டால், நெடுங்கடலும் = அகன்ற கடலும், தன்னீர்மை = தன் இயல்பி னின்றும், குன்றும் = குறையும்.*

துளி என்பது முற்குறளிலிருந்து

*அதிகரித்தது.*

வேறு யாருக்காவதும் கெடுதி உண்டோ எனின்,

**18** சிறப்பொடு[3] பூசனை[4] செல்லாது

வானம்

## 8 வறக்குமேல் வானோர்க்கு[5] மீண்டு[6].

பொ-ள். வானம் = மழை, வறக்குமேல் = பெய்யாவிடின், வானோர்க்கும் = தேவதைகளுக்கும், ஈண்டு = இவ்வுலகத்தின்கண் சிறப்பொடு = சிறப்பாக, பூசனை = யாகம் முதலிய பூஜை, செல்லாது = நடக்காது.

(1) தன்னியல்பு குறைதலாவது நீர்வாழுயிர்கள் மணி முதலாயின படாமையுமாம். (பரிமே.)

பிறவாமையும்,

(2) தடிந்து = மின்னி, கூறுபடுத்து. (மணக்.)
(3) சிறப்பு = விழவு (மணக். பரிமே.)

(4) பூசனை = पूजनम्
(5) வானோர் = दिवौकसः

(6) இவ்வுலகின்கண் ஹோமத்தில் இடப்படும் பொருளே தேவர்களுக்கு உணவு என்பது வேதத்தின் கொள்கையாகலின், இக்குறளால், மழையின்மை தேவர்களையும் பசியால் வருத்தும் என்பதை உணர்த்துகின்றனர் ஆசிரியர் எனக்-கொள்ளல் தகும், ஈண்டு அவியுணவிறன்றோர்

மேலும்,

19 தானந்[1] [2]தவமிரண்டுந் தங்கா
வியனுலகம்
9 வானம் வழங்கா தெனின்.

பொ-ள். வானம் = மழை, வழங்காது எனின் = பெய்யாவிடின் வியனுலகம் = அகன்ற உலகத்தின்கண், தானம் தவம் இரண்டும் = தானம் தபஸ் இவ்விரண்டும், தங்கா = உண்டாகா.

தானமில்லாமையான்
இல்லறத்திலுள்ளோரும், தவமில்லாமை
யான்
துறவறத்திலுள்ளோரும் பிழைத்திருக்கமாட்டார்
என்பது
கருத்து.

ஆகலின் மழை அவசியமானது என
முடிக்கின்றார்.

20 நீரின் [3]றமையா

[4]துலகெனின் யார்யார்க்கும் 10
வானின் [5]றமையா தொழுக்கு.

பொ-ள். யார்யார்க்கும் = எவர்க்கும், நீர் இன்று = நீர் இல்லா
மல், உலகு = உலகியல்,
அமையாது = பொருந்தாது, எனின் = என்று கூறின்,
ஒழுக்கு = நீரோட்டம், வான் இன்று = மழை இல்லாமல்,
அமையாது = பொருந்தாது; (என்று கூறல்வேண்டும்).

(குறள். 413) என்ற ஆசிரியாது தொடரே நோக்கத்தக்கது. சிறப்பொடு பூசனை என்பதையும் "செம்மலி யாவுதி பொங்கப் பன்மாண் வீயாச் சிறப்பின் வேள்வி" (புறநா. 15) என்பதையும் ஒப்பிட்டுப்பார்க்க.

(1) தானம் = दानम्. தானமாவது அறநெறியான் வந்தபொருள்களைத் தக்கார்க்கு உவகையோடுங் கொடுத்தல். (பரிமே.)

cf. प्रयोजनमुद्दिश्य स्वस्वत्वनिवृत्तिपूर्वक परस्वत्वापादनं दानशब्दार्थः

(2) தவம் = तपः

(3) இன்றி என்பது இன்று ஆகத்

இரிந்தது. (தொல். எழுத். 237)

(4) உலகு=உலகியல்; ஆகுபெயர்.

(5) ஒழுக்கம் திரம்பாது (மணக்.)

## 3. நீத்தார்பெருமை.

நீத்தார்பெருமை என்பதற்குப் பொருள், மக்கள் இவற்றில் உள்ள ஆசையை விட்டவர்களின் பெருமை என்பது பொருள். உலகத்தில் நல்லவர் எனக் கூறப்படும் நீத்தார் இருந்தால்தான் மழை பெய்யும் என்பது பெரியோரது கொள்கையாதலாலும், ஸ்தூல சரீரத்தை மழை வளர்ப்பதுபோல், அறிவை அவர் வளர்க்கின்றமை யாலும், வான்சிறப்பின் பின்னர் கூறினர்.

நீத்தார்பெருமையை ஆசிரியர்

ஈண்டு நீத்தாரைக் குறிக்க, ஒழுக்கத்து நீத்தார், துறந்தார், அறம் பூண்டார், ஓரைந்துங்காப்பான்,

ஐந்தவித்தான், பெரியர், சுவை யொளியூறோசைநாற்றமென் றைந்தின்வகைதெரிவான்[2], நிறைமொழி மாந்தர்[3], குணமென்னுங்குன்றேறிநின்றார்[4], அந்தணர் என்ற சொற் களை ஆசிரியர் வழங்கினர்.

நீத்தாரது பெருமைகளே பெருமை ; அவற்றை எண்ண முடி யாது ; அவை உலகில் பிரகாசிக்கும் ; அப்பெருமையை அவர்க ளுடைய மந்திரம் காட்டும் ; அவர் சப்த-ஸ்பர்ச-ரூப-ரஸ-கந்தங் களின் வகையை அறிந்ததால் அவராலே உலகம் நிலைக்கும் ; பிறரால் செய்ய முடியாதவற்றை அவர் செய்வர் ; அவருக்கு வரும் கோபத் தின் பயனை ஒரு நிமிஷமாயினும் தடுக்கமுடியாது ; அதற்கு இந்தி ரனே சாக்ஷி ; அவரையே அந்தணர் என்று கூறுவர் ; அவரே மோக்ஷத்திற்கு விதை ; என ஆசிரியர் கூறினர்[5].

(1) நீத்தார் என்பவர் அகப்புறப்பற்றுக்களைவிட்ட இல்லறத்தாரும் நைஷ்டிகப்ரம்மசாரிகளும், வானப்பிரஸ்தர்களும், ஸந்நியாசிகளும் ஆவர். இதைப்பற்றி விரிவாய் 28ஆவது குறளின் உரையிற் காண்க.

(2) ரஸம், ரூபம், ஸ்பர்சம், சப்தம், கந்தம் இவற்றின் பிரக்ருதி விக்ருதிகளை அறிந்தவன்.

(3) நிறைவேறுகின்ற மொழிகளையுடைய மாந்தர்.

(4) அறவு, மெய்யுணர்வு, அவாவின்மை முதலிய குணங்களாகிய மலைகளை ஏறி நின்றார்.

(5) முன்பின் குறள்களின் இயைபுபற்றி மணக்குடவர், பரிமே லழகர் இவ்விருவருங்கொண்ட முறையினின்றும், ஈண்டு அவற்றின்முறை சிறிது வேறுபடும்.

அவர் பெருமைகளை எண்ணுவது எதுபோல் எனின்,

**21**
**1**

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

பொ - ள். *பனுவற்றுணிவு = சாஸ்திரங்களின் சித்தாந்தம், விழுப்பத்து = ஆசைப்படும் பொருள்களுள், ஒழுக்கத்து நீத்தார் பெருமையை = இல்லறவொழுக்கத்திலிருந்து நீங்கினவர்களின் பெருமையை, வேண்டும் - விரும்பும்.*

*பற்றைவிட்ட நிலையே மேலானது என்பது சாஸ்திரங்களின் சித்தாந்தம் என்பது கருத்து.*

**22** துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
**2**
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று[1].

பொ-ள். *துறந்தார்பெருமைதுணை =*

நீத்தாருடைய பெரு
மையின் அளவினை, கூறின் = சொன்னால்,
(அது), வையத்து = உலகத்தில்,
இறந்தாரை = இறந்தவர்களை
எண்ணிக்கொண்டற்று = கணக்கிடுதல்போன்றது.

இறந்தாரை எண்ணுதல் எப்படி முடியாதோ,
அப்படியே நீத்தாரின் பெருமைகளை
எண்ணமுடியாது என்பது கருத்து.

எண்ணமுடியாமல் இருந்தால் என்ன எனின்,

**23** இருமை[2] வகைதெரிந் [3]தீண்டறம்
பூண்டார்[4]
**3** பெருமை பிறங்கிற் றுலகு.

போ-ள். இருமைவகை = இம்மை மறுமை
இவ்விரண்டின் தன்மையை,
தெரிந்து—ஆராய்ந்துபார்த்து,
ஈண்டு = இவ்வுலகத்தில்
அறம்பூண்டார்பெருமை = துறவறத்தைக் கொண்டவர்களுடைய
பெருமை, உலகு = உலகத்தில், பிறங்கிற்று = மேலானது (ஆகும்.)

(1) எண்ணிக்கொண்டால் அற்று (பரிமே.). ஒரு சொல்லாகக் கொள்ளல் தகும்.

(2) இருமை என்பதற்குப் பிறப்பு வீடு இவற்றைப் பொருளாகக் கூறினர் உரைகாரர்கள். மக்கள் இம்மையில் சுகம் துக்கம் இரண்டையும் நுகர்ந்து, மறுமையாகிய துறக்கம் நரகம் இவற்றில் சுகம் துக்கம் இவற்றை முறையே நுகர்ந்து, பின்னர் இவ்வுலகத்தில் பிறப்பதால் இம்மை மறுமை இரண்டும் பேரின்பத்தைத் தாரா. அதனைத்தருவது வீடேயாகும். ஆகவின் இருமை என்பதற்கு இம்மைமறுமை எனப்பொருள் கொளல்தகும்

(3) துறவறம் பூணுதல் இவ்வுலகத்திலே நிகழுமாதலான், ஈண்டு என்ற சொல்லைக் கூறினர்.

(4) அறம்பூண்டார்என்பது அதிகாரத்தால்துறவறத்தாரைக்குறிக்கும்.

## 14

அப்பெருமை எதனால் வெளிப்படும் எனின்,

**24**
**4**

நிறைமொழி[1] மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

பொ-ள். நிலத்து = உலகத்தில், நிறைமொழிமாந்தர்பெருமை = நீத்தாருடைய பெருமையை, மறைமொழி = மந்திரம், காட்டி விடும்.

அவரால் உலகத்திற்கு என்ன பயன் எனின்,

**25** [2] சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
**5** வகைதெரிவான் கட்டே யுலகு.

பொ-ள். உலகு = உலகம்,
சுவையொளியூறோசைநாற்றமென் றைந்தின்
வகைதெரிவான்கட்டு = நீத்தாரிடத்தேயுள்ளது. (ஏ-
அசை.)

அவர்களுடைய சக்தி எப்படிப்பட்டது எனின்,

26/6 செயற்கரிய செய்வார் பெரியர்[3] சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

பொ-ள். பெரியர் = நீத்தார், செயற்கு = செய்தற்கு, அரிய = முடியாத காரியங்களை, செய்வார் = செய்வர்; சிறியர் = இல்லறத்தி லுள்ளவர், செயற்கு = செய்தற்கு, அரிய = முடியாத காரியங்களை, செய்கலாதார் = செய்ய முடியாதவர், (ஆவர்).

(1) நிறைமொழி = सत्यवाक्. நிரம்பிய கல்வி (மணக்.]; நிறைந்த மொழி (பரிமே.) cf. ऋषीणां पुनराद्यानां वाचमर्थोऽनुधावति (उत्तररामचरितम्)

(2) சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்பது சாஸ்திரங்களிற் கூறப்பட்ட முறையாயினும், ஈண்டு ஆசிரியர் முறைமாற்றிக் கூறியதற்குக் காரணம் இம்முறையாகவே குழந்தை அவற்றை அறிதலான் எனக் கூறல் தகும்.

cf. पञ्च बुद्धीन्द्रियाणीह पञ्चकर्मेन्द्रियाणि वै ।
पञ्चभूतविशेषाश्च मनश्चैव तु षोडश ॥
तन्मात्राण्यपि पञ्चैव मनोऽहंकार एव च ।
अष्टमञ्चाप्यथाव्यक्तमेताः प्रकृतिसंज्ञिताः ॥
एताःप्रकृतयश्चाष्टौ विकाराश्चापि षोडश ।

(3)

एवमेतदिहस्थेन विज्ञेयं तत्वबुद्धिना ॥ [म.भा.अनु. 152,24-26]
*நீத்தாரல்லாதாரின் ஆற்றலின்மையைக் கூறுதலால், நீத்தாரின் ஆற்றல்மிகுதியை வெளிப்படுத்துகின்றனர் ஆசிரியர். 'அவற்றைச் செய்யமாட்டாதாரைத் துறந்தாராயினுஞ் சிறியோரென்று சொல்லுவர் என்ற மணக்குடவருரை பொருத்தமின்று.*

15

மேலும்,

**27** குணமென்னுங் குன்றேறி நின்ருர் வெகுளி
**7** [1]கணமேயுங் காத்த லரிது[1].

பொ-ள்.

*குணமென்னுங்குன்றேறிநின்றுர்வெகுளி = நீத்தாரின் கோபத்தின் பயன், கணம் ஏ உம் = ஒரு நிமிஷமேனும், காத்*

தல் = தடுக்கப்படுதல், அரிது = இல்லை.

அவர்களுடைய கோபத்தின் பயன் அனுபவித்தவர் யார் எனின்,

28 ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா[3]

8 [4]னிந்திரனே சாலுங் கரி[5] [6]

பொ-ள், ஐந்தவித்தானாற்றல் = நீத்தாருடைய சக்திக்கு, அகல்விசும்புளார்கோமான் = அகன்ற சுவர்க்கத்தில் உள்ளோர்க்கு அரசன், (ஆகிய), இந்திரனே, கரி = ஸாக்ஷி, (ஆக), சாலும் = பொருந்தும்.

(1) cf. क्षण:; இங்கு ஆகுபெயர்.
(2) வெகுளி கணமேயாயினும்... தடுத்தல் அரிது (பரிமே.)
(3) cf. गोमान्.
(4) cf. इन्द्र:.

(5) இக்குறள் இந்திரனை ஆயிரங்கண்ணன் ஆக்கிய கௌதமரது செயலையும், இக்கிரகப்பட்டமெய்திய நகுஷனைப் பாம்பாக்கிய அகஸ்தியரின் செயலையுங் குறிப்பதேயன்றி பின்னருள்ள மூன்றனையுங் குறித்தல் கூடும்:—

(i) ச்யவனர் என்ற முனிவர் அச்வினீதேவதைகளுக்கு ஸோமயாகத்தில் பாகம் தருவதாகச் சொல்ல, இந்திரன் அதை மறுக்க, அவர் அவ்விருவரையும் நோக்கி மந்திரபூர்வமாக ஸோமத்தைத் தர, அப்போது பெரிய மலையுடனும் வச்சிராயுதத்துடனும் இந்திரன் அவ்வேள்வியின்கண்வர, நீரைத்தெளித்து அவனை அசைவற்றிருக்கச்செய்து அவனைக்கொல்வதற்கு மந்திரசத்தியால் மதன் என்ற ஒருவனை ச்யவனர் உண்டுபண்ண, அவனைப் பார்த்து பயந்த தேவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி இந்திரன் அச்வினீதேவதைகளுக்கும் யாகத்தில் பாகம் இருத்தல்கூடும் என ஒத்துக்கொண்டான். [म.भा.अनु.261, अश्वमे.9.31-36]

(ii) மருத்தன் என்ற அரசன் பிரகஸ்பதியின் தம்பியாகிய ஸம்வர்த்தரைக் கொண்டு யாகம்செய்யத் தொடங்க, அவரைவிட்டு பிரகஸ்பதியைக் கொண்டு செய்யவேண்டுமென இந்திரன் மருத்தனுக்குச் சொல்லியனுப்ப அவர் அதற்கு இணங்காது, ஸம்வர்த்தரைக்கொண்டே யாகத்தைச்செய்யத் தொடங்க, அதற்குவேண்டிய இடையூறுகளை இந்திரன் செய்ய, பிறகு, ஸம்வர்த்தமுனிவரின் தபோபலத்தால் இந்திரன் கோபத்தை விட்டு வேள்விக்கு நேரில் தேவர்களுடன் வந்து ஹவிர்ப்பாகங்களைப் பெற்றுக்கொண்டான்,

## 16

அவர்களுக்குப் பெரியோர் என்ன பெயர் இட்டனர் எனின்,

29 [1]அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
9 செந்தண்மை பூண்டொழுக லான்[3].

பொ-ள். அறவோர் = துறவறத்திலுள்ளவர், மற்று எவ்வுயிர்க்கும் = மற்ற எல்லாப்பிராணிகளுக்கும், செந்தண்மை = அருளை, பூண்டு = மனத்திற்கொண்டு, ஒழுகலான் = நடப்பதால், (அவர்), அந்தணர், என்போர் = என்று சொல்லப்படுவார்.

(iii) அகத்தியர் வேள்வியைத் தொடங்க,

பன்னிரண்டு ஆண்டுகளில் முடியக்கூடிய அப்போது இந்திரன் மழையைப் பெய்யா திருக்கும்படிச் செய்ய, தம்முடைய தவத்தின் ஆற்றலால் தாமே இந்திரன் ஆகின்றேன் என்று அவர் சொல்ல இந்திரன் தேவர்களோடு நேரில்வந்து மழையைப் பெய்யவைத்து வேள்வியை நடத்தினன்.

[म.भा.अश्वमे.94]

(6) மனையாளோடுகூடிய கௌதமரை ஐந்தவித்தான் எனக்கூறல் தகுமா எனின், தகும் என்னலாம். வானப்பிரஸ்தர்கள் இருவகைப்படுவர் என்றும், அவருள் ஒருவர் மனைவியைவிட்டு காட்டிலிருப்பவர் என்றும், மற்றொருவர் மனைவிமக்களோடு காட்டிலிருந்துகொண்டு காம்யகர்மாக்களைச் செய்யாது நிவிருத்திமார்க்கத்தில் தவத்தைச் செய்துகொண்டிருப்பவர் என்றும், அவர் மனைவியோடு பூப்புக்காலத்தில் கூடுவது கடமைக்காக என்றே யன்றி காமத்திற்காக இல்லையென்றும் அறிக.

cf. निर्दारो वा सदारो वा वनवासाय संव्रजेत्

[म.भा.अनु.209,10]

अतिथीनामाभिमुख्यं तत्परत्वं च सर्वदा ।
विंध्यपादेषु ये केचिद्ये च नैमिशवासिनः ॥
पुष्करेषु च ये चान्ये नदीवनसमाश्रिताः ।
सर्वे ते विधिदृष्टेन चरन्ति विपुलं तपः ॥
हिंसाद्रोहविमुक्ताश्च सर्वभूतानुकंपिनः ।
शांता दांता जितक्रोधाः सर्वातिथ्यपरायणाः ॥

प्राणिष्वात्मोपमा नित्यं ऋतुकालाभिगामिनः ।

स्वदारसहिता देवि चरन्ति व्रतमुत्तमम् ॥
वसन्ति सुखमव्यग्राः पुत्रदारसमन्विताः ।
ते स्वदारः समायान्ति पुण्याँ ल्लोकान् दृढव्रताः ॥

[म.मा.अनु.209,34-40]

(1) அந்தணரென்போரும் துறந்தாராகக்கொள்ளப்படுவர். (மணக்.)

(2) cf. अभयं सर्वभूतेभ्यो सर्वेषामभयं यतः ।
सर्वभूतात्मभूतो यस्तं देवा ब्राह्मणं विदुः ॥ [म.भा.शा.269,33]

(எவர் எல்லாப்பிராணிகளையும் அஞ்சவில்லையோ, எவரை எல்லாப்பிராணிகளும் அஞ்சவில்லையோ, எவர் எல்லாப்பிராணிகளையுந் தானாக பாவிக்கின்றாரோ அவரையே தேவர் பிராமணர் என்பர்.)

## 17

அவருக்கும் மோக்ஷத்திற்கும் இயைபு யாது எனின்,

30 [1]உரனென்னுந் தோட்டியா
னோரைந்துங் [2]காப்பான்
10 [3] வரனென்னும் [4]வைப்பிற்கோர்
வித்து[5,6]

பொ-ள். உரன் என்னும் தோட்டியான் = மனத்திண்மை
என்கிற சம்மட்டியால்,
பான் = கெட்டவழியிற்

ஓரைந்தும் = ஐந்து இந்திரியங்களையும், காப்
செல்லாமல் பாதுகாப்பவன், வரன் என்
னும் வைப்பிற்கு = மோக்ஷம் என்ற
உலகத்திற்கு, ஓர் = ஒரு, வித்து = விதை,
(ஆவான்).

துறவறத்தார் இல்லாவிடின் மோக்ஷம்
இராது என்பது
கருத்து.

## 4. அறன்வலியுறுத்தல்.

அறன்வலியுறுத்தல் என்பதற்குத் தருமத்தின் சக்தியை நன்று கூறுதல் என்பது பொருள். உலகம் நிலைத்திருப்பதற்குக் காரணமான கடவுள், மழை, நீத்தார் இவர்களுடைய பெருமையைக் கூறிய பின்னர், இல்லறம், துறவறம் இவற்றைப்பற்றி ஆசிரியர் கூறவேண்டும். இல்லறச்செயல்களும் துறவறச்செயல்களும் சாஸ்திரங்களிலிருந்தே அறியவேண்டும். அவற்றின் பிரயோஜனம் தெரியாத வரையில் அவற்றை உலகத்தார் செய்யமாட்டார். ஆதலால் அவற்றை இவ்வதிகாரத்தில் ஆசிரியர் கூறினர். இவ்வதிகாரத்தில் அறம் என்ற பொருளில் அறவினை, நன்று என்ற சொற்களை வழங்குகின்றனர். அறம் என்பது இல்லறம், துறவறம் இரண்டையுங் குறிக்கின்றது.

(1) ஊான்=அறிவு (மணக்.)

(2) மனத்திண்மையைத் தோட்டிக்கு உவமித்தலின், ஐந்து என்றதற்கு யானைகள் என்பது உவமையாயிற்று. ஐந்து என்றது ஈண்டு ஐந்து பொறிகளையுங் குறிக்கும், அவை மனத்தால் நடக்கப்படுதலின்.

(3) வரன்=परम्. cf. ब्रह्मविदाप्नोति परम् (तै. उप. 2)

(4) ஈண்டு வைப்பு என்பதும், 3ஆவது குறளில் நிலம் என்பதும் 346-வது குறளில் உயர்ந்த உலகம் என்பதும் ஒரு பொருளைக் குறிக்கும்.

(5) 'அந்நிலத்திற் சென்று முளைத்தலின் வித்தென்றார்' எனப் பரிமேழலகர் கூறினர். அந்நிலத்திற்கே அவர்கள் வித்தாகலின் அவர் கூற்று ஆராய்தற்குரியது.

(6) cf. इंद्रियाणींद्रियार्थेभ्यो मनसा विनिवर्तयेत् ।
तत: पश्यति तद् ब्रह्म ज्वलदात्मनि संस्थितम् ॥
[म.भा.अनु.167,31-37]

3

## 18

வாது
அறத்தைக்காட்டிலும் மனிதர்க்கு மேன்மையை உண்டாக்கு
வேறு ஒன்றும் இல்லை; அதனை மறத்தல் கேட்டை உண்டு
பண்ணும்; அதனைத் தவறாமல்
எல்லாவிடங்களிலும் தன்னால்
முடிந்தவகையான் செய்யவேண்டும்;
அவ்வறத்தைச் சுத்தமான
மனத்தோடு செய்யவேண்டும்; அதனைச்
செய்யும்போது பொறாமை,
ஆசை, கோபம், கடுமையான சொற்கள் இவை
இல்லாமல் இருக்க

வேண்டும்; சாகும்போது அதன் பயன் உயிருடன் வருவதால்
பின்னர்ச் செய்வோம் என இருக்கக் கூடாது; அதைச் செய்தாரை
யும் செய்யாதாரையும் பல்லக்கில் இருப்பவன் தூக்குபவர் இவர்க
ளுடைய வேற்றுமையால் அறியலாம்; பிறப்பில்லாமைக்கு அதே
காரணம் ஆகும்;
அதே இன்பத்தைத் தரும்; ஆகலின் அறத்தைச் செய்யவேண்டும் பழியைச்
செய்யாதிருக்கவேண்டும்; என ஆசிரியர் கூறினர்.

31 [1]சிறப்பீனுஞ் செல்வமு மீனு[2] மறத்தினூஉங்[3]
காக்க[4] மெவனோ வுயிர்க்கு[5].

பொ-ள். உயிர்க்கு = மனிதர்க்கு, சிறப்பு = மோக்ஷத்தை, ஈனும் = தரும், செல்வமும் = பிரியமுள்ள பொருள்களையும், ஈனும் = தரும், அறத்தின் = தருமத்தைக்காட்டிலும், ஊங்கு = மேலான, ஆக்கம் = மேன்மையைத் தருவது, எவன் = யாது?

(ஓ—அசை;)

(1) சிறப்பு = श्रेयस्. செல்வம் = प्रेयस्.

(कठोपनिषत्.)

cf. सुखाभ्युदयिकं चैव नैःश्रेयसिकमेव च ।

प्रवृत्तं च निवृत्तं च द्विविधं कर्म वैदिकम् ॥

(मनु.12,88)

(2) ஈனும்—பெயரெச்சம்.

(3) cf. அறம்பெரி தாற்றி யதன்பயன்

கொண்மார்

சிறந்தோ ருலகம் படருநர் போல (பரிபா. 19, 10, 11)

(4) ஆக்கந்தருவது—ஆகுபெயர்.

(5) உயிர் என்பது பொதுவாய்ப் பிராணிகளைக் மனிதனையே குறிக்கும்.

குறிப்பினும், ஈண்டு

19

அறத்தை மறந்தால் என்ன எனின்,

32 [1]அறத்தினூஉங் காக்கமு[2] மில்லை

யதனை

**2** மறத்தலி னூங்கில்லை கேடு.

பொ-ள். (உயிர்க்கு),

அறத்தின் = அறச்செயலைக்காட்டிலும்,
ஊங்கு = மேலான, ஆக்கமும் = ஆக்கந்தருவதும்,
இல்லை; அதனை =
அந்த அறச்செயலை, மறத்தலின் = மறத்தலைக்காட்டிலும்,
இழிவான, கேடு = கேட்டைத்தருவதும், இல்லை.

ஊங்கு =

உயிர்க்கு என்பது அதிகரித்தது.

ஆகலின் என்ன செய்யவேண்டும் எனின்,

**33** ஒல்லும் வகையா னறவினை
யோவாதே

**3** செல்லும்வா யெல்லாஞ் செயல்.

பொ-ள். உயிர் = மனிதர், அறவினை = தர்மச்செயல்களை, ஓவாதே = தவறாமல், ஒல்லும் வகையான் = (தன்னால்) முடிந்த விதத்தால், செல்லும் வாய் எல்லாம் = செய்யக்கூடிய இடங்கள் எல்லாவற்றிலும், செயல் = செய்யவேண்டும்.

உயிர்க்கு என்பது முதற்குறளிலிருந்து அதிகரிக்கப்பட்டு, உயிர் என முதல்வேற்றுமையாக மாற்றப்பட்டது.

அவ்வறச்செயல்களைச் செய்யும்போது எப்படி யெனின்,

இருக்கவேண்டு

**34**
**4** [5]மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
[6]னாகுல நீர பிற.

பொ-ள். அறன் = தருமம், (செய்யப்படும்போது), மனத்துக் கண் = மனத்தில், மாசிலனாதலனைத்து = குற்றமில்லாதவனாயிருக்குந் தன்மையால் வருவது; பிற = வேறெல்லாம், ஆகுலநீர = விபரீதத் தன்மையன.

தருமம் செய்யும்போது மனம் சுத்தமாயிருக்கவேண்டும் என்பது கருத்து.

(1) அறத்தினூஉங் காக்கமு மில்லை என்பது அநுவாதம்.
(2) ஆகுபெயர்.

(3) வைக்கில்லையாம் (மணக். பா.)
(4) ஆகுபெயர்.
(5) cf. मनस्.
(6) cf. आकुलः

20

மேலும்,

35
—
5

[1]அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொல் னான்கு
மிழுக்கா வியன்ற தறம்.

பொ-ள். அறம் = தருமம்,
அழுக்காறு = பொறாமை, அவா =
ஆசை, வெகுளி = கோபம்,
இன்னாச்சொல் = கடுஞ்சொல், (ஆகிய),
நான்கும் = நான்கையும், இழுக்கா = ஒழித்து,
இயன்றது = செய்யப்
பட்டது, (ஆகும்).

தருமம் செய்யும்போது பொறாமை முதலியன

நான்கும் இல் லாமல் இருக்கவேண்டும் என்பது கருத்து.

அச்செயல்களைப் பின்னர்ச் செய்யலாம் என்று இருக்கலாமா எனின்,

**36** [2]அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது[3]
**6**
பொன்றுங்காற் பொன்றுத் துணை[4] [5];

பொ-ள். உயிர் = மனிதர்,

அன்று = கிழத்தனத்தில், அறம் = தர்மத்தை, அறிவாம் = அறிந்துசெய்வோம், என்னாது = என்று நினையாமல். (அதனை), செய்க = செய்யவேண்டும். பொன்றுங்கால் = சாகும்பொழுது, அது = அத்தருமத்தின் பயன், (அவர்க்கு), பொன்றுத்துணை = அழிவில்லாத துணையாக, (ஆகும்). (மற்று — அசை).

உயிர்க்கு என்பது முதற்குறளிலிருந்து அதிகரிக்கப்பட்டு, உயிர் என முதல்வேற்றுமையாக மாற்றப்பட்டது.

(1) தனக்கு ஆக்கமில்லாதிருக்க, பிறர்க்கு உள்ள ஆக்கத்தை

நோக்கித் துன்பப்படுதல் அழுக்காறும். அவராக்கம் போல் தனக்கு மாக்கம் வரல்வேண்டுமென்ற எண்ணம் ஆசையாம். அது எதிர்பார்த்தபடி வாராக் கால் அவர் மனத்தில் கோபம் வரும். அவ்வாறிருக்கும்போது ஆக்கமுடை யாரைப்பற்றிக் கூறுங்கால் கடுஞ்சொல் வரும். அழுக்காறுமை, வின்மை (வெஃகாமை) இவையிரண்டும் இல்லறத்தின்பாற் படும், ளாமை. இன்னாச்சொல்லின்மை இவ்விரண்டும் துறவறத்தின்பாற்

அவா
வெகு
படும்.

(2) அன்று என்ற சொல் செய்மையிலுள்ள நாளை ஆற்றலாற் குறிக் கும்; ஈண்டு அதிகாரத்தை நோக்கி குறிக்கும்.

அது வயது முதிருங்காலத்தைக்

(3 ) அது என்பது தருமத்தின் பயனைக் குறித்தலால் ஆகுபெயர்.

(4) cf. धर्म एको मनुष्याणां सहायः पारलौकिकः (म.भा.अनु.173,16)

(5) இக்குறளிற் கூறப்பட்ட அறம், செயல்களையே குறிக்கும்.

பெரும்பாலும் இல்லறச்

அறஞ்செய்தவர், அறஞ்செய்யாதவர் என
எனின்,
எப்படி அறியலாம் **37**

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை[1]
**7** பொறுத்தானே டூர்ந்தா னிடை [2] [3],

பொ-ள். அறத்தாறு = தருமத்தின் பிரயோஜனம், இது, என வேண்டா = என்று கூறப்படவேண்டா. (அது), சிவிகை = பல்லக்கை, பொறுத்தானோடு = தூக்குகின்றவனோடு, ஊர்ந்தானிடை = தூக்கப்படுகின்றவனிடத்தில், (காணப்படும்).

மேலும் அறத்தின் பிரயோஜனம் யாது எனின்,

**38** வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
**8** வாழ்நாள் வழியடைக்குங் கல்[4],

பொ-ள், ஒருவன், வீழ்நாள் படாஅமை = வீணாக நாளைச் செய்யாமல்,
நன்று = அறத்தை, ஆற்றின் = செய்தால்,
அஃது = அவ்வறம், வாழ்நாள்வழி = பிறப்பினை, (ஆகும்).

அடைக்கும் = மூடும், கல்,

மறுபிறப்பில்லாமல் செய்யும் என்பது கருத்து. ஆகலின்,

**39** அறத்தான்[5] வருவதே யின்பமற் றெல்லாம்

**9** புறத்த புகழு மில[6].

பொ-ள். அறத்தான் = கருமத்தால், வருவதே = பெறப்படு வதே, இன்பம், (ஆகும்). மற்று எல்லாம் = வேறெல்லாம், (அதன்) புறத்த = இன்பத்தைத்தருவன அல்ல; புகழும் = கீர்த்தியையும், இல = உடையனவல்ல.

(1) cf. शिबिका.

(2) இக்குறளிற் கூறப்பட்ட அறமும் பெரும்பாலும் இல்லறச் செயல்களையே குறிக்கும்.

(3) cf. वहन्ति शिबिकामन्ये यान्त्यन्ये शिबिकागताः (म.भा.शा.331,42)

(4) இக்குறளிற் கூறப்பட்ட அறம் பெரும்பாலும் துறவறச்செயல் களைக் குறிக்கும்.

(5) இஃது எதுப்பொருளில் வந்த

மூன்றும்வேற்றுமை யென்னலாம். ஆனுருபு ஈண்டு உடனிகழ்ச்சிக்கண் வந்தது என்பர் பரிமேலழகர்.

(6) இக்குறளிற் கூறப்பட்ட அறம் இல்லறச்செயல் துறவறச் செயல் இரண்டையுங் குறிக்கும்.

22

ஆகலின்,

40 செயற்பால தோரு மறனே[1]
யொருவற்[2]
$\overline{10}$ குயற்பால தோரும் பழி.

பொ-ள். ஒருவற்கு = ஒருவனால், அறனே = தருமச்செயலே, செயற்பாலது = செய்யத்தகுந்தது, பழி = பாவச்செயல், உயற்பாலது = நீக்கத்தகுந்தது, (ஓரும்—அசை).

(1) மூன்றாவது குறளில் அறஞ்செய்தல்வேண்டும் என ஆசிரியர் கூறினமையின் ஈண்டு அது அநுவாதம். இக்குறளிற் சிறப்பாகக் கூறப் பட்டது பழியைத் தவிர்த்தல் வேண்டுமென்பதே.

(2) நான்காம்வேற்றுமை மூன்றாம்வேற்றுமைப் பொருளில் வந்தது.

# இல்லறவியல்

அறத்தின் சக்தியைக்கூறிய பின்னர், அதன் ஒரு பகுதியாகிய [1]இல்லறத்தைப்பற்றி 20 அதிகாரங்களிலும், மற்றொரு பகுதியாகிய [2]துறவறத்தைப்பற்றி 13-அதிகாரங்களிலும் ஆசிரியர் கூறினர். முன் 20 அதிகாரங்களுக்கும் இல்லறவியல் என்பதும், பின் 13 அதிகாரங்களுக்கும் துறவறவியல் என்பதும் பெயர் ஆகும். இல்லறவியலில் முதல் மூன்று அதிகாரங்களில் அதன் கடமையும் பயனும் யாவை என்பதையும் தக்க மனையாளோடும் புதல்வரோடும் இருப்பதே அதன் இலக்கணம் என்பதையுங் கூறி, பின்னர் 15 அதிகாரங்களில் இல்லறத்தில் உள்ளார்க்கு அன்பு, விருந்தோம்புந்தன்மை, இனியவை கூறல், செய்ந்நன்றியறிதல், நடுவுநிலைமை, அடக்கம், ஒழுக்கம், பிறனில்விழையாமை, பொறை, அழுக்காறின்மை வெஃகாமை, புறங்கூறாமை, பயனிலசொல்லாமை, தீவினை செய்யாமை, ஒப்புரவறிதல் என்ற குணங்கள் இருக்கவேண்டும் என்றும், பின்னர் 2 அதிகாரங்களில் அவர் தானம் செய்யவேண்டும் என்றும் அதனால் கீர்த்தி உண்டாகும் என்றும் ஆசிரியர் உணர்த்தினர். முற்கூறப்பட்ட குணங்களுள் சில மனத்திலும் சில வாக்கிலும் சில செய்கைகளிலும் உள்ளன.

## 5. இல்வாழ்க்கை.

இல்வாழ்க்கை என்பதற்குப் பற்றைவிடாது கிருகஸ்தாச்ரமத்தில் இருப்பது என்பது பொருள்.

முதல் நான்கு குறள்களில் இல்வாழ்வான் எவற்றைச் செய்ய வேண்டும் என்றும், ஐந்தாவதில் இல்லறத்தின் இலக்கணமும் பிரயோஜனமும் அன்பு தர்மம் இவ்விரண்டே என்றும், ஆறாவதில் அவ்

(1) இல்லறம் என்பது கணவன் மனைவியோடு தன் வீட்டிலிருந்து அறந்தவறாது பொருளைத்தேடி காமத்தை நுகரும் நிலையாம்.

(cf.) प्रवृत्तिलक्षणो धर्मो गृहस्थेषु विधीयते। (म.भा.अनु.211,16)

इह चामुत्र वा काम्यं प्रवृत्तं कर्म कीर्त्यते। (मनु.12,89)
(2) cf. निवृत्ति लक्षणः पुण्यो धर्मो मोक्षो विधीयते।(म.भा.अनु.211,18)
निष्कामं ज्ञानपूर्वन्तु निवृत्तमुपदिश्यते। (मनु.12,89)



வாறு நடத்தினால் துறவறத்தின் பயனையும் அடையலாம் என்றும், ஏழாவதில் வீடு பெற முயல்வாருள் இல்லறத்திலுள்ளவனே சிறந்தவன் என்றும், எட்டாவதில் இல்லறம் துறவறத்தைக் காட்டிலும் வலிமையுடைத்து என்றும், ஒன்பதாவதில் இல்லறம் துறவறம் இவ்விரண்டினுள் இல்லறமே சிறந்ததென்றும், பத்தாவதில் அவ்வாறு முறைப்படி நடந்தவர் தேவர் ஆவர் என்றுங் கூறினர்.

**41** இல்வாழ்வா னென்பா
னியல்புடைய மூவர்க்கு
**1** நல்லாற்றி னின்ற துணை [1,2].

பொ-ள். இல்வாழ்வான் என்பான் = கிருஹஸ்தன் எனச்
சொல்லப்பட்டவன், இயல்பு = சாஸ்திரமுறையை, உடைய =
அநுஷ்டிக்கிற, மூவர்க்கும் = பிரம்மச்சாரி, வானப்பிரஸ்தன், ஸந்நி
யாசி இம்மூன்று பேர்க்கும், நல்லாற்றின் = தர்மவொழுக்கத்தின்
கண், நின்ற = இருக்கின்ற, துணை, (ஆவன்.)

கிருஹஸ்தன் மற்ற மூவருக்கும் உணவு,
உடை, வசிக்குமிடம்
இவற்றைக் கொடுக்கவேண்டும் என்பது கருத்து.
மேலும்,
**42**

துறந்தார்க்குந்[3] துவ்வாதவர்க்கு மிறந்தார்க்கு
2 மில்வாழ்வா னென்பான் றுணை.

பொ-ள். இல்வாழ்வான் என்பான் = கிருஹஸ்தன் எனச்
சொல்லப்பட்டவன், துறந்தார்க்கும் = பந்துக்களால் விடப்பட்டு
அநாதையாயிருப்பவர்களுக்கும், துவ்வாதவர்க்கும் = ஏழைகளுக்
கும், இறந்தார்க்கும் = அநாதப்ரேதங்களுக்கும், துணை, (ஆவன்)

(1) cf. एवं गार्हस्थ्यमाश्रित्य वर्तन्ते इतराश्रमाः। (म.भा.शा.269,6)
एवमाश्रमिणः सर्वे गृहस्थे यान्ति संस्थितिम्। (म.भा.शा.295,39
मनु. 6,90)
यथा मातरमाश्रित्य सर्वे जीवन्ति जन्तवः।
तथा गृहाश्रमं प्राप्य सर्वे जीवन्ति चाश्रमाः॥ (म.भा.अनु.211,49)

(2) இக்குறளின் உரையில் " இவருள் முன்னையிருவரையும் (பிரம மச்சாரி வானப்பிரஸ்தன்) பிறர்மதமேற்கொண்டு கூறினர்." என்றனர் பரிமேலழகர். தர்மத்தை, ப்ரவிருத்திதர்மம், நிவிருத்திதர்மம் என இரு வகையாகப் பிரித்திருத்தல் மகாபாரதம், மனுஸ்மிருதி (12, 88) முதலிய நூல்களால் அறியப்படுதலானும் ஆங்கு நிவிருத்திதர்மத்திற் சேர்ந்தார் நைஷ்டிகபிரம்மசாரியும் வானப்பிரஸ்தரும் ஸந்நியாஸியுமாகலானும், அவர்தங்கூற்று ஆராய்தற்பாலது.

(3) வருணத்தினையும் கர்மத்தினையுந் துறந்தார்க்கும் (மணக்.) அதி வர்ணாச்ரமி என்பது பொருளாகலாம்.

## 25

மேலும்,

43 [1]தென்புலத்தார் [2]தெய்வம் விருந்தொக்க றுனென்றாங்
3 கைம்புலத்தா றோம்ப றலை.

பொ-ள்

தென்புலத்தார் = பிதிருதேவதைகள், தெய்வம் = தேவதைகள், விருந்து = விருந்தினர்கள், ஒக்கல் = சுற்றத்தார்கள்,

தான், என்று ஆங்கு = என்று கூறப்பட்ட அவ்விடமாகிய, ஐம்

புலத்து = ஐந்து இடத்திலும்,

ஆறு = தர்மத்தை, ஓம்பல் = தவறா

மல் செய்தல், தலை = சிறந்தது, (ஆகும்).

மேலும்,

**44** பழியஞ்சிப்[1] பாத்தூ
ணுடைத்தாயின் வாழ்க்கை
4 வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

பொ-ள். *வாழ்க்கை = இல்வாழ்வானது வாழ்க்கை, பழி = பாவத்தை, அஞ்சி = பயந்து, பாத்து = (மூற்கூறியவர்களுக்கு) பகுத்து, ஊண் = சாப்பிடுதலை, உடைத்தாயின் = உடைத்தாயிருந் தால், (அவனுக்கு), = எப்பொழுதும், வழியெஞ்சல் = ஸந்ததியின்மை, எஞ்ஞான்றும் இல் = இல்லை.*

*மூற்கூறப்பட்டவர்களை உபசரித்தால், ஸந்ததி யுண்டுபண்ண வேண்டிய இவனுடைய கடமையும் சித்திக்கும் என்பது கருத்து.*

(1) cf. देवतातिथिभृत्येभ्यः पितृभ्यश्चात्मनस्तथा ।
ऋणवान् जायते मर्त्यस्तस्मादनृणतां व्रजेत् ॥ (म.भा.शा.292,9)
देवतातिथिभृत्यानां पितृणामात्मनश्च यः ।
न निर्वपति पंचानामुच्छ्वसन्न स जीवति ॥ (म.भा.वन.314,60)

(2) தென்புலத்தார் என்பது பிதிருதேவதைகளைக் குறிக்கும்

என்பது देवा दिशो व्यभजन्त, प्राचीं देवाः दक्षिणा पितरः (तै. सं.) என்றவேத வாக்கியத்தால் அறிதல் தகும். தென்புலத்தாரும் தெய்வத்துள் ஒரு பகுதியாயிருப்பினும் அவர்களின் சிறப்பு நோக்கி ब्राह्मणवसिष्ठ நியாயத்தை முன்னிட்டு அவர்களைப் பிரித்துக் கூறினர். அச்சிறப்பு நோக்கித் தென்புலத்தாரை முதலிற் கூறினர். அவருடைய சிறப்பு अक्रोधनाः शौचपराः सततं ब्रह्मचारिणः । न्यस्तशस्त्रा महाभागाः पितरः पूर्वदेवताः ॥ (मनु. 3, 192) என்ற மனுஸ்மிருதி சுலோகத்திற் கூறப்பட்டது காண்க.

(3) பொருள் செய்யுங்கால் பாவத்தை யஞ்சி ஈட்டி (பரிமே.)

## 26

இல்வாழ்க்கையின் இலக்கணமும், பிரயோஜனமும் யாவை எனின்,

45 [1]அன்பு மறனு
முடைத்தாயி னில்வாழ்க்கை
5 பண்பும் பயனு மது.

பொ-ள். இல்வாழ்க்கை = கிருஹஸ்தனுடைய வாழ்க்கை, அன்பும் = ஸ்நேகத்தையும், அறனும் = தர்மத்தையும், உடைத்தாயின் = உடைத்தாயிருந்தால், அது = அதுவே, பண்பும் = இலக்கணமும்,

பயனும் = பிரயோஜனமும், (ஆகும்).
கிருஹஸ்தன் பிறரிடம் அன்புடன்
தருமச்செயல்களைச் செய்ய
வேண்டும்; அதனால் அவனுக்கு விளைவது
பிறர் இவனிடங்
கொள்ளும் அன்பும் அறச்செயல்களின் பயனாகிய
தர்மமும் ஆகும் என்பது கருத்து ஆம்.

அவ்வாறு இல்லறத்தை நடத்தினால் யாது பயன்

எனின்,

46 அறத்தாற்றி
னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
6 போஒய்ப் பெறுவ தெவன்.

பொ-ள்- இல்வாழ்வான், இல்வாழ்க்கை =
இல்வாழ்க்கையை அறத்தாற்றின் = தருமவழியில்,
ஆற்றின் = நடத்தினால், புறத்
தாற்றின் = துறவறத்தில், போய், பெறுவது =
அடைவது, எவன் =
யாது? (ஒன்றுமில்லை என்பது கருத்து.)
இல்வாழ்வான் என்பது இரண்டாங்

குறளிலிருந்து அதி

கரித்தது.

இல்வாழ்க்கையைப் பயன் கருதி நடத்தாது, அவ்வாறு நடத்தல் தன்னுடைய கடமையாகும் என்றே ஒருவன் இருப்பானாயின், தவம் முதலியவற்றால் வரக் கூடிய சித்தசுத்தி முதலியன தாமே வரும் என்பது கருத்து.

(1)

கூறினர்

'தன்றுணைவிமேற் செய்யத்தகும் அன்பு' எனப் பொருள் பரிமேலழகர். 'யாவர் மாட்டும் அன்பு' எனப் பொருள் கூறினர் மணக்குடவர். அன்புடைமை என்ற

அதிகாரத்திற் கூறப்பட்டன

வற்றை நோக்கின் மணக்குடவரது பொருள் சிறந்தது என்னலாம்.

27

இன்னும் வேறு பயன் யாது எனின்,

**47**
**7**

இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
[1]முயல்வாரு ளெல்லாந் தலை.

பொ-ள். இல்வாழ்க்கை = இல்வாழ்க்கைக்கண்,

இயல்பினன் = முறைப்படி, வாழ்பவன் என்பான், முயல்வாருள் எல்லாம் = வீடுபெற முயற்சிசெய்பவருள் எல்லாம், தலை = சிறந்தவன், (ஆவன்.)

அவ்வாறு நடந்தால் இல்லறத் திற்குத் துறவறத்தைக்காட்டி லும் வலிமை உண்டோ எனின்

**48**
**8**

[2]ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
[3]நோற்பாரி னோன்மை யுடைத்து.

பொ-ள். அறன் இழுக்கா = தருமம் தவறாது, ஆற்றின் = முறைப்படி, ஒழுக்கி = செய்து, (வரும்), இல்வாழ்க்கை, நோற்பாரின் = தவஞ்செய்தார்நிலைமையைக்காட்டிலும், நோன்மை = வலிமையை, உடைத்து.

(1) முயறல்—பொருட்கு முயறல் (மணக்.) முயல்வார்—புலன்களை விட முயல்வார் (பரிமே.) 'முயல்வாரென்றது

என்றனர் பரிமேலழகர். வீடு பெற முயல்வார்

மூன்று நிலையினின்றாரை'
என்க் கொள்ளின், அவர்

நான்கு நிலையிலுள்ளவராகவும் இருத்தல் கூடும். அப்போது
ளெல்லாந் தலை' என்ற தொடர் மிகப் பொருந்தும்.

'முயல்வாரு

(2)
கப்பண்ணி

ஆற்றினொழுக்கி என்பதற்குப் பிறரையும் தந்நெறியின் கண் ஒழு
எனப் பொருள்கொண்டனர் மணக்குடவரும் பரிமேலழகரும்.
அஃது அரசனுடைய கடமையாதலின் இவ்வாறு கூறவேண்டாம். அவர்
களுக்கு உணவு முதலியன இடுவதால் அவர்களைத் தத்தம் நெறியில் ஒழு
கப் பண்ணினர் என அவர் கொண்டு கூறியிருத்தலு மொன்று.

(3) நோற்பாரின்—நோற்பார் நிலையின்
(ஆகுபெயர்.)

28

ஆகவின் இல்லறமே சிறந்ததோ எனின்,

49/9 அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்[1]
பிறன்பழிப்ப தில்லாயி னன்று[2,3]

பொ-ள். இல்வாழ்க்கையே, அறன் எனப்பட்டது = சிறந்த அறம் எனக் கூறப்பட்டது. அஃதும் = அவ்வில்வாழ்க்கையும், பிறன் பழிப்பது இல்லாயின் = பிறனால் பழிக்கப்படாமல் இருந்தால், நன்று = அறன், (ஆகும்).

இல்லறத்தால் சுவர்க்கமடையலாமோ எனின்,

**50**
**10**

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
[4]தெய்வத்துள் வைக்கப்படும்.[5,6]

பொ-ள். வையத்துள் = உலகத்தில், வாழ்வாங்கு = வாழவேண்டியபடியே, வாழ்பவன், வான் = சுவர்க்கத்தில், உறையும் = வசிக்கும், தெய்வத்துள் = தேவதைகளுள், வைக்கப்படும் = வைக்கப்படுவான்.

முறைப்படி இல்லின்கண் வாழ்வான் சுவர்க்கம் புகுவன் என்பது கருத்து.

(1) அஃதும் = ஏனைத்துறவறமும் (பரிமே.). அறன் என்றதற்குச் சிறந்த அறன் எனப் பொருள் அவரே கொண்டமையாலும், அச்சிறப்பு பிறன்பழியில்லாதபோழ்தே நிகழுமாகையாலும் அவர்தங்கூற்று ஆராய்தற்பாலது.

(2) நன்று = அறன் cf. குறள் 38.

(3) cf. तस्मात् ज्येष्ठाश्रमो गृही [मनु.3,78]

(4) cf. देवः

(5) cf. प्रवृत्तं कर्म संसेव्य देवानामेति साम्यताम् [मनु.12,90]

(6) உலகத்திலே தேவருள் ஒருவனாக மதிக்கப்படுவன் (மணக்.)

---



## 6. வாழ்க்கைத்துணைநலம்.

---

வாழ்க்கைத்துணைநலம் என்பதற்கு மனைவியின் நற்குணம் என்பது பொருள்.

இல்லறத்தின் கடமையும் பயனையுங் கூறிய பின்னர், அதன் இலக்கணங்களுள் ஒன்றாகிய மனைவியைப்பற்றி இங்குக் கூறினர்.

மனைவி என்ற பொருளில் வாழ்க்கைத்துணை, இல்லாள், பெண், மகளிர், பெண்டிர், இல், மனை என்ற சொற்களை வழங்குகின்றனர்

மனைவி குலத்திற்குத் தகுந்த குணங்களை உடையவளாகிக் கணவன்நிலைக்குத் தகுந்தவாறு இருத்தல்வேண்டும்; அவளிடம் பெருந்தன்மை இல்லாமலிருப்பின், வேறு எச்செல்வம் இருப்பினும் பயனில்லை; அஃது இருப்பின் எல்லாச் செல்வமும் இருப்பது போலே ஆகும்; அவளிடம் கற்பு இருக்கவேண்டும்; கற்பு என்பது வேறு தெய்வத்தை வழிபடாமல் கணவனையே தெய்வமாக வழிபடுதல்; அது தன்னையும் தன் கணவனையும் தம் புகழையும் காத்தல் ஆகும்; கற்பைத் தானே காத்தல் சிறந்தது; அவ்வாறுள்ள மனைவி சுவர்க்கத்தில் போற்றப்படுவாள்; மாட்சியில்லாத மனைவியைக்கொண்ட கணவனுக்குக் கௌரவம் இல்லை; எனக்கூறி மனைவிக்

குப் பெருந்தன்மை அழகு ஆகுமென்றும் நல்ல மக்கள் ஆபரணம் ஆவர் என்றுங் கூறி முடித்தனர்.

51 [1]மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
1 வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

பொ-ள். வாழ்க்கைத் துணை = மனைவி, மனை = இல்லறத்திற்கு, தக்க = தகுந்த, மாண்பு = பெருந்தன்மையை, உடையவள் ஆகி = உடையவளாய் இருந்து, தற்கொண்டான்வளத்தக்காள் = தன்னை மணந்த கணவனுடைய செல்வத்திற்குத் தக்கவாறு நடப்பவள் (ஆவாள்).

(1) மனை—இல்லறம், ஆகுபெயர். மனைத்தக்க மாண்பு—தான் பிறந்த குடிக்குத்தக்க ஒழுக்கம். (மணக்.)

## 30

## அம்மாட்சி எவ்வளவு சிறந்தது எனின்,

52 மனைமாட்சி யில்லாள்க ணில்லா
யின் வாழ்க்கை
2 யெனைமாட்சித் தாயினு மில்.

பொ-ள். இல்லாள்கண் = மனைவியிடத்தில், மனை மாட்சி = இல்லறத்திற்குத் தகுந்த பெருந்தன்மை, இல்லாயின் = இல்லாமல் இருந்தால், வாழ்க்கை = இல்வாழ்க்கை, எனைமாட்சித்து ஆயினும் = வேறு

எல்லாவகையாலும் எவ்வளவு சிறந்ததாய் இருந்தாலும், இல் = (சிறந்தது) இல்லை.

மேலும்,

**53** இல்லதே னில்லவண் [1]மாண்பானு லுள்ளதே
**3** னில்லவள் [2]மாணுக் கடை.

பொ-ள். இல்லவள் = மனைவி, மாண்பு ஆனல் = பெருந்தன்மை யுடையவளாக இருந்தால், (வாழ்க்கைக்கு), இல்லது என் = இல்லாதது எது? இல்லவள் = மனைவி, மாணுக்கடை = பெருந்தன்மையோடு இல்லாதிருந்தால், உள்ளது என் = இருக்கின்றது எது?

வாழ்க்கை என்பது முற்குறளிலிருந்து அதிகரிக்கப்பட்டு நான்காம் வேற்றுமையாக மாற்றப்பட்டது.

மனைவிக்குச் சிறந்தது யாது எனின்,

54 பெண்ணிற் பெருந்தக்க யாவுள [3]கற்பென்னுந்
4 திண்மையுண் டாகப் பெறின்.[4]

பொ-ள். கற்பு என்னும் திண்மை = பாதிவிரத்தியம் என்ற கலங்காத நிலைமை, உண்டாகப் பெறின் = இருந்தால், பெண்ணின் = மனைவியைக்காட்டிலும், பெருந்தக்க = மேம்பட்ட பொருள்கள், யா = எவை, உள = இருக்கின்றன?

(ஒன்றுமில்லை என்பது கருத்து).

(1) மாண்பு—மாட்சிமைப்பட்டவள், ஆகுபெயர்.
(2) மாணுக்கடை—வினையெச்சம்.
(3) கற்பு என்பது தொல்காப்பியத்தில் காரணத்தோடு செய்யப் பட்ட மணம் என்ற பொருளில் வழங் கப்பட்டிருப்பினும், ஈண்டு வேறு பொருளில் காண்க.
(4) cf. पतिव्रतात्वं नारीणामेतदेव सनातनम्

[म.भा.अनु.249,12]

கற்புடையாள் யாது செய்வாள் எனின்,

55 தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
5 பெய்யெனப் பெய்யு மழை [1]

பொ-ள். தெய்வம் = வேறு தெய்வத்தை, தொழாள் = வணங்காமல், கொழுநன் = கணவனையே, தொழுது = வணங்கி, எழுவாள் = (படுக்கையைவிட்டு) எழுந்திருப்பவள், பெய் என = பெய் என்று கூற, மழை பெய்யும்.

கற்புடையாள் இன்னும் எவ்வாறு இருப்பாள் எனின்,

56 தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
6 சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

பொ-ள். பெண் = (கற்புடைய) மனைவி,

தன் = தன்னையும்,
காத்து = தவறிய வழியில் போகாது காத்துக்கொண்டு, தற்கொண்டான் = தன் கணவனை, பேணி = உபசரித்து, தகைசான்ற சொல் = புகழையும், காத்து = கெடாமல் காத்து, சோர்விலாள் = சோம்பேறித்தனமில்லாதவள், (ஆவாள்).

அவள்கற்பை யார் காத்தல் சிறந்தது எனின்,

**57**

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்

நிறைகாக்குங் காப்பே தலை.[2]

பொ-ள்.
மகளிர் = மனைவிகளை, சிறை = காவல்களால், காக்கும் காப்பு எவன் செய்யும் = என்ன செய்யும்?
நிறை = (தம்) மனத் திண்மையால், காக்குங் காப்பே, தலை = சிறந்தது.

(1) पतिर्हि दैवतं स्त्रीणां.........। नान्यं गतिमहं पश्ये प्रमदाया यथपतिः॥

[म.भा.अनु.250,25]

அருமறை நால்வேண்டிற் றருகிற்கும் பெருமையளோ (கலித்.
கேள்வர்த் தொழுதெழலால் (கலித். 39, 17)

39, 6)

வறனோடின் வையகத்து வான்றரும் கற்பினள் (கலித்.

(2) cf. अरक्षिता गृहे रुद्धाः पुरुषैराप्तकारिभिः ।

16, 20)

आत्मानमात्मना यास्तु रक्षेयुस्ताः सुरक्षिताः ॥
वैषम्यमपि संप्राप्ता गोपायन्ति कुलस्त्रियः ।

(मनु.9.12)

आत्मानमात्मना सत्यो जितः स्वर्गो न संशयः ॥
[म.भा.वन.68,8]

32

கற்பின் பயன் யாது எனின்,

58
8

[1]பெற்றார்ப் பெறிற்பெறுவர் பெண்டிர்
புத்தேளிர் வாழு முலகு.

பெருஞ்சிறப்புப்

பொ-ள், *பெண்டிர் = மனைவிகள், பெற்றார் = கணவர்களை, பெறின் = கற்போடு அடைவார்களாயின், புத்தேளிர் = தேவர்கள், வாழும் = வசிக்கின்ற, உலகு = உலகத்தின்கண், பெருஞ்சிறப்பு = மேலான பெருமையை, பெறுவர் = அடைவர்.*

*கற்புடைய மனைவி யில்லாதார்க்குத் தீங்கு யாது எனின்,*

59 [2]புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை
9 யிகழ்வார்முன் னேறுபோற் பீடு நடை.

பொ-ள். *புகழ்புரிந்தில்லிலோர்க்கு = கற்புடைமனைவியில்லா தார்க்கு, இகழ்வார்முன், ஏறுபோல் = காளைபோல், பீடுநடை = கம்பீரமான நடை, இல்லை.*

புரிந்த என்ற பெயரெச்சத்து ஈற்றிலுள்ள அகரம் கெட்டது.

அமுதுபோன்ற மனைவிகளின் கற்பிற்கு ஆபரணம் போன்றது யாது எனின்,

60 [3]மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
10 னன்கல நன்மக்கட்[4] பேறு.

பொ-ள். மனைமாட்சி = மனைவியின் பெருந்தன்மையை, மங்கலம் = அழகு, என்ப = என்று கூறுவர் (பெரியோர்). நன்மக்கட் பேறு = நல்ல குழந்தைகளை அடைதலை, அதன் = அதனுடைய, நன் கலம் = ஆபரணம், என்ப = என்று கூறுவர்.

(1) பெற்றாற் பெறின் (பரிமே.) என்ற பாடத்தில், பெற்றான்... பெண்டிர் என்பது ஒருமைபன்மைமயக்கமாகும்.

(2) பெண்டிர்க்குப் புகழைக் கற்பே ஆக்குதலின், விழைப் புகழ்புரிந்தில் என்றார். கற்புடைய மக

(3) மங்கலம் = நன்மை (பரிமே.) = cf. मंगलम्

(4) இக்குறள் மேலதிகாரத்திற்குத் தோற்றுவாய் ஆகும். மக்கள் என்பது ஆண் பெண் இரண்டையும் குறிக்கும் எனக் கூறல் தகும்,

# 7. புதல்வரைப்பெறுதல்

---

[1]புதல்வரைப்பெறுதல் என்பதற்கு ஆண்மக்களையும் பெண்மக் களையும் பெறுதல் என்பது பொருளாகும்.

மனைவிபோல் குழந்தைகளும் வாழ்க்கைத்துணைநலத்தின் லான், இல்லறத்திற்கு இலக்கணம் ஆக பின்னர் இவ்வதிகாரத்தை ஆசிரியர் கூறினர்.

மக்கள் என்ற பொருளில் மகன் என்ற சொல்லையும் வழங்குகின்றனர்.

அறிவும் குணமும் மிகுந்த மக்களை யடைவதைக்காட்டிலும் மேலான பாக்கியம் வேறொன்றும் இல்லை; அவரைப் பெறின் தாய் தந்தையரை எழு பிறப்புக்களிலும் தீவினைகள் தீண்டா; அவர் செய்யும் வினைப்பயன் தாய்தந்தையரைச் சேர்வதால் அம்மக்கள் அவருடைய பொருள்; அம்மக்களின் சிறுகையாற் கலக்கப்பட்ட உணவு அமிர்தத்தைக்காட்டிலும் இனிப்பானது; அம்மக்கள் தாமாக தாய் தந்தையருடலைத் தொடுவது உடலுக்கு இன்பமும் அவரது சொல் காதிற்கு இன்பமும் தரும்; மழலைச்சொல்லைக் கேட்க பாக்கியமில்லாதவரே குழல் யாழ் இவற்றின் ஒலி இனிமையானது எனக் கூறுவர்; தந்தை மக்களுக்குச் செய்யவேண்டிய தருமம் அவர் சபையில் முதல்வராக இருக்குமாறு செய்வதே; தம்மக்கள் தம்மைக்காட்டிலும் சிறந்தவராயிருத்தல் தமக்கு மகிழ்ச்சியைத் தரும்; தம்மக்கள் மேலோர் எனக் கேட்ட தாய் அவரைப் பிரசவித்த காலத்திற்காட்டிலும் அதிகமாய் மகிழ்வாள்; மக்கள் தந்தைக்குச் செய்யவேண்டிய கடமை இவர்தந்தை இவரைப் பெறுதற்கு என்ன தவம் செய்தாரோ என உலகத்தார் கூறுமாறு செய்தலே; என ஆசிரியர் இங்குக் கூறினர்.

(1) புதல்வனையும் புதல்வியையும் பொதுவாய்க் குறிக்குஞ் சொல் புதல்வர் என்பதே யாகும். புதல்வர் என்பது புதல்வன் என்ற சொல்லின் பன்மை யெனக்கொண்டு 'மக்களென்னும் பெயர் பெண்ணொழித்து நின்றது' என்று பரிமேலழகர் கூறுவது ஆராய்தற்பாலது. 67, 69, 70 இம்மூன்று குறள்களிலுங் கூறப்பட்ட மகன் என்ற சொல்லும் ஆண் பெண் இருவரையுங் குறித்தல் தகும். ஆசிரியர் தொல்காப்பியனார் ஆண் மகன் பெண்மகன் எனத் தொல்காப்பியத்தில் வழங்குகின்றமையின். ஆகலின் புதல்வரைப் பெறுதல் என்பதற்கும் மக்கட்பேறு என்பதற்கும் பொருள் ஒன்றே யாம்.

5



6 1 [1]பெறுமவற்றுள் யாமறிவ தில்லை

[2]யறிவறிந்த[3]

1 மக்கட்பே றல்ல பிற.

போ. யாம், பெறுமவற்றுள் = அடையும் பாக்கியங்களுள், அறிவு = அறியவேண்டியவற்றை, அறிந்த = தெரிந்துகொண்ட, மக்கட்பேறல்ல பிற = மக்களை அடையும் பாக்கியத்தைவிட்டு வேறொன்றையும், அறிவதில்லை = அறியோம்.

அவ்வாறு மக்களைப் பெறுவதனால் மறுமையில் எனின்,

யாது பயன்

62 எழுபிறப்புந் தீயவை தீண்டா
2 பண்புடை மக்கட் பெறின்.

பழிபிறங்காப்

போ. பழிபிறங்காப்பண்புடைமக்கள் = பாவம் ஓங்காத குணங்களையுடைய மக்களை, பெறின் = பெற்றால், எழுபிறப்பும் = எழுபிறப்பினும், தீயவை = தீவினைகள், தீண்டா = அடையா.

மக்களை ஏன் தம் பொருளாக உலகத்தார் நினைக்கின்றார் எனின்,

63 தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
3 [4]டந்தம் வினையான் வரும்[5].

பொ. தம்மக்கள் = தம்முடைய மக்களை, தம்பொருள் = தம்முடைய பொருள், என்ப = என்று கூறுவர், (பெரியோர்). அவர் பொருள்.[6] = அவர் செய்த பொருளின் பயன், தந்தம் வினையான் = தம்மாற் செய்யப்பட்ட வினைப்பயனோடு, வரும்.

(1) cf. पुत्रलाभात्परं लोके नास्तीह प्रसवार्थिनाम् । [म.भा.आदि.64,69]
(2) அறிவு—அறியவேண்டுவது. ஆகுபெயர்.
(3) அறிந்த என்பது மக்கட்பேறல்ல என்ற என்பதைத் தழுவும்.

விடத்துள்ள மக்கள்

(4) தம்மை நோக்கி அவர் செய்யும் நல்வினையானே (பரிமே.) தத்தம்முடைய வினையோடே (மணக்.) தாய்தந்தையர் இறந்தவுடன் அவர்களுடன் அவரவர் செய்த வினைப்பயனே பின் வருதலாலும், மக்கள் ஈமச்சடங்கு செய்ததின் பயன் அவரைச் சேர்தலாலும் மணக்குடவருரை சிறக்கும்.

(5) cf. यदर्थं पुरुषस्यात्र पुत्रानिच्छन्ति मानवाः ।
प्रेत्य चेह च संप्राप्ता त्रायन्ते महतो भयात् ॥ [म.भा.द्रो.196,17]

(6) ஈண்டு பொருள் என்பது அவர் செய்யும் ஈமச்சடங்கு, சிராத்தம் முதலியவற்றைக் குறிக்கும்.

cf. इच्छन्ति पितरः पुत्रान् स्वार्थहेतोर्यदोस्कच ।
इह लोकात्परे लोके तारयिष्यति मानवाः ॥ [म.भा.द्रो.174,54]

## 35

இம்மையில் மக்களால் அடையும் பயன் யாது

எனின்,

**64** அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்

**4** சிறுகை யளாவிய கூழ்.

பொ. தம்மக்கள் = தம்முடைய மக்கள், சிறுகை = சிறிய கைகளால், அளாவிய = கலக்கப்பட்ட, கூழ் = சோறு, (தமக்கு), அமிழ்தினும் = அமிர்தத்தைக்காட்டிலும், ஆற்ற = மிகவும், இனிது = இன்பத்தைத் தருவது. (ஏ – அசை).

மேலும்,

**65** [1]மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப[2] மற்றவர்

**5** சொற்கேட்ட லின்பஞ் [3]செவிக்கு.[4]

பொ. மக்கள் = தம்மக்கள், மெய் = (தம்முடைய) உடலை, தீண்டல் = தொடுதல், உடற்கு = உடலுக்கு, இன்பம் = சுகத்திற் குக் காரணம், (ஆகும்).
அவர்சொற்கேட்டல் = அவருடைய சொல்லைக் கேட்டல், செவிக்கு = காதுகளுக்கு,

இன்பம்=சுகத் திற்குக் காரணம், (ஆகும்).

குழந்தையின் சொல் அதிக சுகத்தைக் கொடுக்குமா யாழ் குழல் இவற்றின் ஒலி

கொடுக்குமா எனின்,

(1) ஒருவன்மெய்க்கின்பமாவது மக்களது மெய்யைத் தீண்டுதல் (பரிமே.) தம்மக்கள் தமதுடம்பினைச் சார்தல் (மணக்.) கூழளாவுதல், மழலைச்சொற்சொல்லல் முதலிய செய்கை குழவியிடத்தும், அதன் பயனாகிய இன்பம் பெற்றோரிடத்தும் இருக்கின்றமையால், மெய்தீண்டுந் தொழிலும் குழவியினிடம் இருப்பின் சிறக்கும். ஆகலின் மணக்குடவரது உரை சிறந்தது. வேறொருவன்குழவி தம்முடலைத் தீண்டாதாகலின், ஈண்டு மக்கள் என்பது தம்மக்களையே குறிக்கும்.

(2 & 3) இன்பம்—இன்பத்திற்குக் காரணம்—ஆகுபெயர்.

(4) cf. पुत्रस्पर्शात्तु लोकेषु नान्यत्सुखमतीव हि ।
[म.भा.आदि.64,67]

शिशुनालिंग्यमानस्य स्पर्शस्सूनोर्यथासुखः ।

पुत्रस्पर्शात्प्रियतरः स्पर्शो लोके न विद्यते
............वाक्यं कान्तं भविष्यति ।
॥ [म.भा.आदि.98,51]

बालस्येव प्रवृद्धस्य कलमव्यक्तमद्भुतम् ॥
[म.भा.अनु.131,41]

66
6

[1] குழலினி தியாழினி தென்பதம் மக்கண்
மழலைச்சோற் கேளா தவர்.[2,3]

போ. *தம்மக்கண்மழலைச்சொல் =*
*தம்முடைய குழந்தை*
*களின் மழலைச்சொற்களை, கேளாதவர் =*
*கேட்காதவரே, குழல்,*
*இனிது, யாழ், இனிது, என்ப = என்று கூறுவர்.*
*தந்தை மக்கட்குச் செய்யவேண்டிய*
*கடமை யாது எனின்,*

67 தந்தை மகற்காற்று நன்றி
யவையத்து[4]
7 முந்தி யிருப்பச் செயல்.[5]

போ. *தந்தை = தகப்பன், மகற்கு =*
*குழந்தைக்கு, ஆற்றும் =*
*செய்யவேண்டிய, நன்றி = கடமை, அவையத்து =*
*சபையில், முந்தி =*

முதலில், இருப்ப = இருக்குமாறு,
செயல் = செய்தல், (ஆகும்).

தம்மக்கள் தம்மைக்காட்டிலும் சிறந்தாரா யிருப்பின் அது
சுகத்தைத் தருமா எனின்,

**68**

"தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
8 மன்னுயிர்க் கெல்லா மினிது".

(1) குழல், யாழ்—ஆகுபெயர்.

(2) கேட்டவர் அவற்றினும் மழலைச்சொல் இனிதென்பரென்
பது குறிப்பெச்சம் (பரிமே.)

(3) ............वाक्यं कान्तं भविष्यति ।
बालस्येव प्रवृद्धस्य कलमव्यक्तमद्भुतम् ॥
[म.भा.अनु.131,41]

யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்
கருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை

(புறநா. 92, 1—3)

(4) அவை cf. सभा.

(5) சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே (புறநா. 312,2)

அரசுதுறை போகிய—வீறுசால் புதல்வற் பெற்றனை

(பதிற்று. 74)

(6) தம்மக்கள் தறிவுடைமை பெரிய நிலத்து மன்னு நின்ற உயிர் கட்கெல்லாந் தம்மினு மினியதாம். ஈண்டறிவென்றது இயல்பாகிய அறி வோடு கூடிய கல்வி யறிவினை ... இதனால் தந்தையினும் அவையத்தார் உவப்பர் என்பது கூறப்பட்டது. (பரிமே)

(7) cf. एकमेव हि लोकेस्मिन्नात्मतो गुणवत्तरम्।
इच्छन्ति पुरुषाः पुत्रं लोके नान्यं कथंचन ॥ [म.भा.द्रो.195,5]
पुत्रादिच्छेत् पराजयम् ॥

## 37

பொ. மாநிலத்து = பெரிய உலகத்தில், தம்மின் = தம்மைக்காட்டிலும், தம்மக்களறிவுடைமை = தம்முடைய மக்களின் —அறிவுடைமை, மன்னுயிர்க்கு எல்லாம் = நிலைபெற்ற மாந்தர்க்கெல் லாம், இனிது = சுகத்தைத் தருவது, (ஆகும்).

தம்மக்கள் சிறந்தார் எனக் கேட்ட தாய் யாது செய்வாள் எனின்,

69 ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் [1]தன்மகனைச்
9 சான்றோ னெனக்கேட்ட தாய்.[2]

பொ. தன்மகனை = தான் பெற்ற குழந்தையை, சான்றோன் = சிறந்தவன்[3], என = என்று (பிறர்) சொல்ல, கேட்ட, தாய், ஈன்ற = (அக்குழந்தையைப்) பெற்ற, பொழுதின் = காலத்திற் காட்டிலும், பெரிது = மிகவும், உவக்கும் = மகிழ்ச்சியடைவாள்.

மகன் தந்தைக்குச் செய்யவேண்டிய உதவி யாது எனின்,

70 மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை[4]
10 யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.[5] பொ. மகன் = குழந்தை, தந்தைக்கு = தகப்பனுக்கு, ஆற்றும் = செய்யும், உதவி = உபகாரம், இவன்றந்தை = இவனுடைய தகப்பனர், என்னோற்றான் கொல் = என்ன தவஞ் செய்தானோ, எனும் = என்று கூறப்படும், சொல்,

---

(ஆகும்).

(1) ஈண்டு தன் என்பது எற்றுக்கென விளங்கவில்லை.

(2) பெண்ணியல்பாற் றானாக வறியாமையிற் கேட்ட தாய் எனவுங் கூறினர். (பரிமே.) 'தன் குஞ்சு பொன் குஞ்சு' என்ற எண்ணம் எப்போதுமிருக்குமாகையால் தாய் படித்திருப்பினும் பிறர் சான்றோன் எனக் கேட்பதுதான் அவளுக்கு மிக்க மகிழ்ச்சியைத் தரும். தாய் அறிவோடிருக்கலாம் என்பதைப் புறநானூற்றடிகள் காட்டும்.

(3) சிறப்பு ஒவ்வொரு வருணத்திற்கும் மாறுபடும். அரசர்க்குரிய சிறப்பு. "முளரியோன் சிறுவன்—களிறெறிந்து பட்டன னென்னு மூவகை யீன்ற ஞான்றினும் பெரிதே" (புறநா. 277), "செங்களந் துழவுவோன் சிதைந்தவே றாகிய—படுமகன் கிடக்கை காணூஉ—ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே." (புறநா. 278) என்ற அடிகளால் விளங்கும்.

(4) தந்தை—உபலக்ஷணம்; அது தாயையுங் குறிக்கு மென்னலாம்.

(5) cf. ஒளிறு வா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே (புறநா. 312, 5-6)

# 8. அன்புடைமை.

அன்புடைமை என்பதற்கு நேசமாயிருத்தல் என்பது பொருள். இல்வாழ்க்கையதிகாரத்தில் அன்பும் அறனும் இல்வாழ்க்கைக்குப் பண்பும் பயனும் ஆகும் என்று ஆசிரியர் கூறினமையால், இல்வாழ்க் கையின் இலக்கணத்தைக்

கூறியபின்னர் அன்புடைமையைப்பற்றிக் கூறுகின்றார்.

மனத்திலுள்ள அன்பைக் கண்ணீர் வெளியிட்டுவிடும்; அன்புடையாரெலும்பும் பிறர்க்கு உரித்தானது; பெரியோர் முற்பிறப்பிற்காட்டிய அன்பினைத் தொடர்ந்துகாட்டுவதற்குப் பின்னரும் பிறக்கின்றனர்; அன்பு விருப்பத்தைத் தர, விருப்பம் சிநேகத்தை உண்டுபண்ணும்; இவ்வுலகில் சுகமாய்ப் பெருமையோடு வாழ்தல் அன்பின் காரியமே; அறியாதவர் தர்மத்தைச் செய்வதற்கே அன்பு துணையெனக் கூறினும் அது பகையைப் போக்குவதற்குந் துணையாகும்; எலும்பில்லாத சரீரத்தைச் சூரியன் தகிக்குமாறு அன்பில்லாத மக்களைத் தர்மக்கடவுள் வருத்தப்படுத்துவர்; மனத்தில் அன்பு இல்லாது உயிர் வாழ்தல் வன்னிலத்தில் தளிர்க்காத மரத்தைப்போல் உள்ளது; உள்ளத்துள் அன்பு இல்லாவிட்டால் உடலுக்கு வெளிப்புறத்தில் உள்ள இடம் ஏவலாளர் இவர்களால் பயன் ஒன்றும் இல்லை; அன்போடு கூடிய உடம்பே சீவன் இருத்தற்கு இடமாகும். அது இல்லாதது தோலால் மூடப் பட்ட எலும்பே ஆகும்; என ஆசிரியர் கூறினர்.

அன்போடு கூடியவாது பொருளெல்லாம்

யாருக்கு உரித்து எனின்,

71 அன்பிற்கு முண்டோ
வடைக்குந்தா ழார்வலர்
1 புன்கணீர் பூச றரும்.

போ. *அன்பிற்கும், அடைக்கும் தாழ்=மூடும் தாழ்ப்பாள், உண்டோ? ஆர்வலர்புன்கணீர்=நேசமுடையவர்களுடைய துன்பத்தைக் காட்டும் கண்ணீரே, (அதனை), பூசல் தரும்=வெளிப்படுத்தும்.*

(1) *அஃதாவது அவ்வாழ்க்கைத்துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கட் காதலுடையனுதல். (பரிமே.). தன்னைச் சார்ந்தார்மாட்டுக் காதலுடையவனுதல் (மணக்.). ததீசி முனிவர் இந்திரனுக்கு வச்சிராயுதஞ் செய்யத் தனது எலும்பைக் கொடுத்ததை இவ்வதிகாரத்தில் ஆசிரியர் குறிப்பதாலும், அவர் இந்திரனுக்குத் தொடர்பில்லாதவராதலாலும், மணக்குடவர் கூறிய பொருளே பொருந்தும்,*

39



72 அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
2 ரென்பு முரியர் பிறர்க்கு.[1]

போ. *அன்புடையார், என்பும் = எலும்பாலும், பிறர்க்கு, உரியர் ; அன்பிலார் = அன்பு இல்லாதவர், எல்லாம்=எல்லாப்பொருளாலும், தமக்கு=தமக்கே, உரியர்.*

*அன்புள்ளவரது எலும்பும் பிறர்க்குப் பயன்படும் ; அன்பில்லாதவரது பொருளெல்லாம் அவர்க்கே பயன்படும் என்பது கருத்து.*

அன்புள்ளார் இப்பிறப்பு எடுத்ததற்குக் காரணம் யாது எனின்,

73 அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
3 கென்போ டியைந்த தொடர்பு.

போ. ஆருயிர்க்கு=சிறந்த மக்களுக்கு, என்போ டியைந்த தொடர்பு =எலும்போடு உண்டான சேர்க்கையாகிய இப்பிறப்பு, அன்போடு இயைந்தவழக்கு =(முற்பிறப்பில்) அன்போடுபொருந்திய பழக்கம், என்ப=என்று கூறுவர், (பெரியோர்).

அன்பு எதனை உண்டாக்கும் எனின்,

74 அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
4 நண்பென்னு நாடாச் சிறப்பு.

போ. அன்பு, ஆர்வமுடைமை = (பிறரின்) விருப்பத்தை, ஈனும் = உண்டுபண்ணும் ; அது = அவ்விருப்பம், நண்பு = சிநேகம், என்னும் = என்று சொல்லப்படுகின்ற, நாடாச்சிறப்பு= அளத்தற்கு முடியாத சிறப்பினை, ஈனும் = உண்டுபண்ணும்.

அன்பு, பிறர் நம்மை நம்புமாறு செய்து, அவரைச் சிநேகிதர் ஆக்கும் என்பது கருத்து.

மேலும்,

75 அன்புற் றமர்ந்த [2]வழக்கென்ப வையகத்

5 தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

போ. வையகத்து = பூமியில், இன்புற்றார் = சுகத்தை யடைந் தவர், எய்தும் = அடையும், சிறப்பு = பெருமையை, அன்பு உற்று அமர்ந்த வழக்கு = அன்போடு கூடிய பழக்கத்தின் பயன், என்ப = என்று கூறுவர், (பெரியோர்).

(1) இங்கு ததீசி முனிவர் வச்சிராயுதஞ் செய்தற்கு இந்திரனுக்குத் தன் முதுகெலும்பு வழங்கியதை ஆசிரியர் குறிக்கின்றார்.
(2) வழக்கு—வழக்கின் பயன், ஆகுபெயர்.



அன்பு தர்மம் செய்வதற்குத்தான் துணையோ எனின்,

76 அறத்திற்கே[1] யன்புசார் பென்ப வறியார்

6 மறத்திற்கு[2] மஃதே துணை.

போ. அறியார் = புத்தியில்லாதவர்,

அன்பு = அன்பை,

அறத்திற்கே = தருமம் செய்வதற்கே,
சார்பு = துணை, என்ப =

என்று கூறுவர். மறத்திற்கும் = அதர்மத்தைப்
போக்குவதற்கும்,

அஃதே = அதுவே, துணை, (ஆகும்).

அன்போடு கூடாத தருமச்செயல்களை
தருமக்கடவுள் விரும்பு

வாரா எனின்,

77 என்பி லதனை வெயில்போலக்
காயுமே

7 யன்பி லதனை யறம்.

பொ. வெயில், என்பிலதனை =
எலும்பில்லாத உடம்பை,

காயும்போல = தகிக்கும்போல,
அறம் = தருமக்கடவுள், அன்பி

லதனை = அன்போடுகூடாத மக்களை,
காயும் = துன்பப்படுத்தும்.

அன்பு இல்லாத மக்களின் வாழ்க்கை
எதைப்போல் எனின்

78 அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை
வன்பாற்கண்

8 வற்றன் மரந்தளிர்த் தற்று.

போ. அன்பு, அகத்து = மனத்தில், இல்லாவுயிர்வாழ்க்கை = இல்லாத மக்களின் வாழ்க்கை, வன்பாற்கண் = பாலை நிலத்தில், வற்றன்மரம் = காய்ந்த மரம், தளிர்த்தற்று = துளிர்த்தாற்போன்றது.

அன்பில்லா வுயிர்வாழ்க்கை பயனில்லாதது என்பது கருத்து.

அன்பு இல்லாதவர்க்கு இடம் பொருள் ஏவலாளர் இவரால் பயன் உண்டோ எனின்,

79 புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
9 யகத்துறுப் பன்பி லவர்க்கு.

போ. யாக்கையகத்துறுப்பு = உடம்பிற்கு உள்ளிலுள்ள உறுப்பாகிய மனத்தின்கண், அன்பிலவர்க்கு = அன்பு இல்லாதவ

ருக்கு, புறத்து உறுப்பு எல்லாம் = வெளியில் உறுப்பாக உள்ள இடம், பொருள், ஏவலாளர் எல்லாம், எவன் செய்யும் = என்ன செய்யும்?

ஒரு பயனையுந் தாராது என்பது கருத்து.

(1) அறத்திற்கு—அறஞ் செய்வதற்கு; ஆகுபெயர்.

(2) மறத்திற்கு—மறத்தைப் போக்குவதற்கு; ஆகுபெயர்.

## 41

எவ்வுடம்பு சீவன் இருப்பதற்குத் தகுந்த இடமாகும் எனின்,

80 அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
10 கென்புதோல் போர்த்த வுடம்பு.

பொ. அன்பின் வழியது = அன்போடு கூடியது ஆகிய, உடம்பு = உடம்பே[1], உயிர்நிலை = சீவன் இருத்தற்கு இடம், (ஆகும்). அஃதிலார்க்கு = அவ்வன்பு இல்லாதவருக்கு, உடம்பு = உடம்புகள், தோல் = தோலால், போர்த்த = மூடப்பட்ட, என்பு = எலும்புகளே[2], (ஆகும்).

---

# 9. விருந்தோம்பல்

விருந்தோம்பல் என்பதற்கு விருந்தினரை உபசரித்தல் என்பது பொருள்.

அன்பும் அறனும் இல்வாழ்க்கைக்குப் பண்பும் பயனும் ஆகும் என 45-ஆவது குறளிற் கூறினமையால், அன்பினைப்பற்றிக் கூறிய பின்னர், அறன்களுள் முதலெனக் கருதப்படும் விருந்தோம்பலை ஆசிரியர் கூறினர்.

இல்வாழ்க்கை விருந்தினரை உபசரிக்கும்பொருட்டே; அமிருதமாயினும் விருந்தினரை வீட்டின் வெளிப்புறத்தில் வைத்து விட்டு, தான் தனியாய் உண்ணக்கூடாது; விருந்தினரை உபசரிக்கின்றவனது வாழ்க்கையில் துன்பம் வாராது; அவனுடைய வீட்டில் லக்ஷ்மி வசிப்பாள்; அவன் நிலங்களில் விதை விதைக்கவேண்டிய அவசியம் இல்லை; அவன் இவ்வுலகம்விட்டு சுவர்க்கத்திற்குப் போகும் போது தேவர்கள் அவனை நன்கு உபசரிப்பார்கள்; விருந்தினரை உபசரித்தலால் உண்டாகும் பயனின் அளவு கணக்கிட முடியாது; அவரை முகமலர்ச்சியில்லாமல் உபசரித்தால் அவர் வருந்துவர்; அவரை உபசரிக்காதவனது பொருள் அழியும்; அவரை உபசரிக்காமையாகிய கூறினர்:-

உடைமையுளின்மை அறியாரிடம் இருக்கும்;

எனக்

(1 & 2)
6

இவ்விரண்டிடத்தும் தேற்றேகாரம் தொக்கன.

42

81
இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
1 வேளாண்மை செய்தற் பொருட்டு.

பொ. இல் = வீட்டில், இருந்து = வசித்து, ஓம்பி = (பொருள் முதலியவற்றைப்) பாதுகாத்து, வாழ்வது எல்லாம் = வாழ்தல் எல் லாம், விருந்து = விருந்தினரை, ஓம்பி = உபசரித்து, வேளாண்மை செய்தற்பொருட்டு = உபகாரம் செய்தற்கு, (ஆகும்.)

உயர்ந்த உணவுப்பொருள் ஆயினும் தான்மட்டும் உண்ணலாமோ எனின்;

82 விருந்து புறத்ததாத் தானுண்டல்[1]

சாவா

2 மருந்தெனினும் வேண்டற்பாற்
றன்று.[2]

போ. விருந்து = விருந்தினர், புறத்தது
ஆ = வீட்டின் வெளிப்புறத்தில் இருக்க, தான் =
தானே, உண்டல், சாவாமருந்து
எனினும் = அமிர்தம் என்றாலும், வேண்டற்பாற்று
அன்று = விரும்பத்தக்கது இல்லை.

ஆக என்பது ஆ எனக் குன்றியது.

விருந்தினரை உபசரித்தால் பயன் யாவை
எனின்,

83 வருவிருந்து வைகலு மோம்புவான்
வாழ்க்கை

3 பருவந்து பாழ்படுத லின்று.

போ. வைகலும் = ஒவ்வொரு நாளும்,
இல் = வீட்டிற்கு, வரு விருந்து = வருகின்ற
விருந்தினரை, ஓம்புவானவாழ்க்கை, பரு
வந்து = துன்பப்பட்டு, பாழ்படுதல் = கெடுதல்,
இன்று = இல்லை.

இல் என்பது 81ஆவது குறளிலிருந்து
அதிகரித்தது.

மேலும்,

அகனமர்ந்து[3] செய்யா ளுறையு முகனமர்ந்து[4]
4 நல்விருந் தோம்புவா னில்.

(1) சாவாமருந்து என்பது अमृतम् என்பதன் மொழிபெயர்ப்பு.
(2) cf. न वै स्वयं तदश्नीयात् अतिथिं यन्न भोजयेत्। (मनु. 3,106)
मृष्टमश्नाति यश्चैको वृथा जीवति सोपि च (म.भा.अश्वमे.98)
இந்திர
ரமிழ்த மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரே. (புறநா. 182, 1-3 ; 127, 7—10)
(3) செய்யாள் लक्ष्मीः என்பதன் மொழிபெயர்ப்பு. cf. लक्ष्मीः
(4)

लक्षणात् भासनात्. (महाभाष्यम् 1,1,1)
cf. सुमुखः सुप्रसन्नात्मा धीमानतिथिमागतम्।
स्वागतेनासनेनाद्भिरन्नाद्येन च पूजयेत्॥ (म.भा.अश्वमे. 101,74)

43

பொ. முகன் = முகம், அமர்ந்து = மலர்ந்து, நல்விருந்து = நல்ல விருந்தினரை, ஓம்புவானில் = உபசரிக்கின்றவனது வீட்டில், செய்யாள் = லக்ஷ்மி, அகன் = மனம்,
அமர்ந்து = குளிர்ந்து, உறையும் =

தங்குவாள்.

மேலும்,

85 வித்து மிடல்வேண்டுங்
கொல்லோ விருந்தோம்பி
5 மிச்சின் மிசைவான் புலம்.[1]

போ. விருந்து = விருந்தினரை, ஓம்பி = உபசரித்து, மிச்சில் = மிஞ்சியதை, மிசைவான் = உண்ணுகின்றவன், புலம் = நிலத்தில், வித்தும் = விதையையும், இடல்வேண்டும் கொல்லோ = இடவேண்டுமோ?

நிலத்தில் வித்தை விதைத்து
விளைபொருள்களை அவன்
அடையவேண்டுவதின்று. பிறர் தாமே
ஏராளமாய் அவனுக்குப்
பொருள் அனுப்புவர் என்பது கருத்து.

மேலும்,

86 செல்விருந் தோம்பி வருவிருந்து
பார்த்திருப்பா
6

னல்விருந்து வானத் தவர்க்கு.[2]

போ. இல் = வீட்டிற்கு, செல்விருந்து = செல்லுகின்ற விருந்தினரை, ஓம்பி = உபசரித்தபிறகு, வருவிருந்து = வருகின்ற விருந்தினரை, பார்த்திருப்பான் = எதிர்பார்த்துக் கொண்டிருப்பவன், வானத்தவர்க்கு = தேவர்களுக்கு, நல்விருந்து = நல்ல விருந்தினன், (ஆவான்.)

(1) இக்குறட்குக் கருத்து 'தானே விளையாதோ' என மணக்குடவரும், 'தானே விளையும்' எனப் பரிமேலழகரும் கூறினர். அதிசயோக்தியைப் பெரும்பாலும் இந்நூலில் ஆசிரியர் வழங்காமையாலும், விருந்தினரைப் போற்றுபவருக்கு ஏனையோர் தாமே பொருள் வழங்குவதை இப்போதும் காண்கின்றமையாலும் அவர்தங் கூற்று ஆராய்தற்பாலது. புலம் என்பதற்குப் பரிமேலழகர் விளைபுலத்திற்கு எனப் பொருள் கூறினர்; விளை புலத்திற்கண் என இருத்தல் நலம். cf. தொல். சொல். 105.

(2) வானத்தவர் என்பது दिवौकसः என்பதன் மொழிபெயர்ப்பு.

மேலும்,

**87** இனைத்துணைத் தென்பதோன் றில்லை விருந்தின்

**7** றுணைத்துணை[1] வேள்விப் பயன்.

போ வேள்விப்பயன் = விருந்தினரை உபசரித்தலாகிய வேள்வியின் பயன், இனைத்துணைத்து என்பது ஒன்று இல்லை = இவ்வளவுக்குட்பட்டது என்பது ஒன்றும் இல்லை.

விருந்தின் = விருந்தினருடைய, துணைத்துணை = யோக்யதைக்குத் தகுந்தது. (ஆகும்).

விருந்தினரை உபசரிக்கும்பொழுது எவ்வாறு இருக்கவேண்டும் எனின்,

**88** மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து

**8** நோக்கக் குழையும் விருந்து.

போ. அனிச்சப் = அனிச்சப்பூ, மோப்ப = மோர்ந்துபார்க்கும்போது, குழையும் = வாடும்; விருந்து = விருந்தினரோ, முகம் திரிந்து[2]

நோக்க = முகத்தை வேறுபடுத்திக்கொண்டு பார்க்கும்போதே, குழையும் = வருந்துவர்.

விருந்தினரை மனமில்லாமல் உணவு முதலியவற்றால் உபசரித்தல், அவரை வருத்தும் என்பது கருத்து.

விருந்தினரை உபசரிக்காமல் இருப்பின் யாது நேரும் எனின்,

89 பரிந்தோம்பிப் பற்றற்றே
மென்பர் விருந்தோம்பி
9 வேள்வி தலைப்படா தார்.

பொ. விருந்து ஓம்பி = விருந்தினரை உபசரித்து, வேள்வி = அவ்வேள்விப்பயனை, தலைப்படாதார் = அடையாதார், பற்று = செல்வத்தை, பரிந்து = துன்பப்பட்டு, ஓம்பி = பாதுகாத்த பிறகு, அற்றேம் = இழந்தோம், என்பர்.

(1) cf. नृयज्ञोतिथिपूजनम्. (मनु.3,70)

(2) திரிந்து ஈண்டு பிறவினைப்பொருளில் வந்தது.

(3) cf. பற்றற்ற கண்ணும் (குறள் 521).
பற்றுக்கோடு (பரிமே.)

பற்று = பொருள் (மணக்.)

45

அவ்வாறு யார் இருப்பர் எனின்,

90 [1]உடைமையு ளின்மை
விருந்தோம்ப லோம்பா
10 மடைமை மடவார்க ணுண்டு.

போ. உடைமையுளின்மை = இருந்தும் இல்லாமை (ஆகிய) விருந்தோம்பலோம்பாமடமை = விருந்தோம்பலைச் செய்யாத மடத்தனம், மடவார்கண் = அறியாதாரிடத்தில், உண்டு.

---

## 10. இனியவைகூறல்

இனியவைகூறல் என்பதற்கு இனிய சொற்களைச் சொல்லு தல் என்பது பொருள்.

விருந்தினரை உபசரிக்கும்போது முகம் மலர்ந்திருத்தல் வேண்டும் என்றார். அஃது அகமலர்ச்சியின்றி நிகழாது. அவ் விரண்டும் இருப்பினும் இனிய சொற்களையே கூறவேண்டும் என் பதை அறிவிக்க விருந்தோம்பலின் பின்னர் இவ்வதிகாரத்தை ஆசி ரியர் கூறினர்.

மனம் மலர்ந்து கொடுப்பதைக் காட்டிலும் இனிய சொற்களை வழங்குவது மேலானது; அதுவே அறம் ஆகும்; அவ்வாறு கூறின் வறுமை வாராது; பணிவோடு இன்சொல் வழங்குவதே ஒரு வர்க்கு அணி; அது பாவத்தைப்போக்கிப் புண்ணியத்தைப் பெருக் கும்; அது சித்தசுத்தியை உண்டுபண்ணி மறுமையை அடைவிக் கும்; இம்மையிலும் மறுமையிலும் அஃது இன்

பத்தை விளைவிக்
குும்;
இனிய

உண்மைப்பொருளைக் கண்டு கூறுவாறும் அன்போடு கலந்த சொற்களைக் கூறவேண்டும்; இன்சொலின் பயனை அறிந்தவன் கடுஞ் சொற்களை வழங்கான்; இனிய சொற்கள் இருக்கக் கடுஞ்சொற்களை வழங்குவது பழம் இருக்கக் காயை விரும்பினுர் போலும்; எனக் கூறினர்.

(1) இதனையே 'இன்மையுளின்மை' என 153ஆவது குறளில் ஆசிரியர் கூறினர். உடைமையின்கண்ணே யில்லாமைபோல' என ஈண்டும், வலியின்மையுள் வைத்து வலியின்மையாவது' என அக்குறளிலும் பொருள் கூறினர் மணக்குடவர்.

## 46

**91** அகனமர்ந் தீதலி னன்றே

முகனமர்ந்

**1** தின்சொல ஞகப் பெறின்.

பொ. முகன் = முகம், அமர்ந்து = மலர்ந்து, இன்சொலன் = இனிய சொற்களைக் கூறுபவன், ஆகப் பெறின் = ஆயின், (அது).

அகன் = மனம், அமர்ந்து = மலர்ந்து, ஈதலின் = (பொருளைக்)

கொடுத்தலைக்காட்டிலும், நன்று நல்லது.

(ஏ—அசை.)

அவ்வாறு என் செய்யவேண்டும் எனின்,

92
2

முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
[1]மின்சொ லினிதே யறம்.

போ. அறம் = தர்மம், முகத்தான் அமர்ந்து = முகத்தை மல ரும்படிச் செய்து, இனிது நோக்கி = பிரியமாகப் பார்த்து, அகத்தான் = மனத்தோடு, (வழங்கப்பட்ட), இன்சொலினது = இனிய சொற்களிடத்து, ஆம் = ஆகும்.

இனிய சொற்களை வழங்குவதினால் உண்டாகும் பயன்கள் யாவை எனின்,

93 துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
3 மின்புறூஉ மின்சொ லவர்க்கு.

போ. யார்மாட்டும் = எவரிடத்தும், இன்பு = இன்பத்தை, உறும் = அதிகப்படுத்தும், இன்சொலவர்க்கு = இனிய சொற்களை

வழங்குபவர்களுக்கு, துன்பு = துன்பத்தை, உறும் = மிகுவிக்கும் துவ்வாமை = வறுமை, இல் = இல்லை, ஆகும்.

மேலும்,

**94** பணிவுடைய னின்சொல னாதல்
லொருவற்கு
**4** அணியல்ல மற்றுப் பிற.

ஒருவற்கு = ஒருவனுக்கு, பணிவுடையன் = பணிவை உடையன், (ஆய்), இன்சொலன் ஆதல் = இனிய சொற்களை வழங்குகின்றவனாக ஆதல், அணி = ஆபரணம்; பிற = மற்றவை (அணி) அல்ல = ஆபரணம் அல்ல. (மற்று = அசை).

(1) இன்சொல் வல்லவனாயின் அதே (மணக்.); இனிய சொற்களைச் சொல்லுதலின்கண்ணதே (பரிமே) பரிமேலழகருரை சிறக்கும்.



மேலும்,

**95** அல்லவை தேய வறம்பெருகு
[1]நல்லவை

5 நாடி யினிய[2] சொலின்.

பொ. நல்லவை = புண்ணியங்களை, நாடி = கருதி, இனிய = இனியசொற்களை, சொலின் = கூறினால், அல்லவை = பாவங்கள், தேய = போக, அறம் = தர்மம், பெருகும்.

மேலும்,

96 [3]நயனீன்று நன்றி[4] பயக்கும் பயனீன்று
6 பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

பொ. பயன் = (பிறர் விரும்பிய) பயனை, ஈன்று = கொடுத்து, பண்பின் = இனிமைத்தன்மையிலிருந்து, தலைப்பிரியாச்சொல் = நீங்காத வார்த்தை, நயன் = சித்தசுத்தியை, ஈன்று = கொடுத்து, நன்றி = துறவறத்தை, பயக்கும் = உண்டுபண்ணும்.

பண்பு அதிகாரத்தால் இனிமையைக்

குறிக்கும்.

மேலும்,

97/7 சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும்.

போ. சிறுமையுள் நீங்கிய = வருத்தத்தைக் கொடுக்காத இன்சொல், மறுமையும் இம்மையும் = பரலோகத்திலும் இவ்வுலகத்திலும், இன்பம் = சுகத்தை, தரும்.

மாறுபட்ட இரண்டு கட்சிக்காரர்களுடைய கொள்கைகளையுங் கேட்டு தீர்மானம் சொல்லுகின்றபொழுது எவ்வாறு சொற்களை வழங்கவேண்டும் எனின்,

(1) நன்மை பயக்குஞ் சொற்களை (மணக். பரிமே.)
(2) இனியவாக (மணக். பரிமே.)
(3) பிறரால் விரும்பப்படுதல் (மணக்); நீதி (பரிமே.)
(4) பொருள் (மணக்.)

48

98/8

இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.[1]

போ. செம்பொருள் = உண்மைப்பொருளை,

கண்டாவாயச
சொல் = கண்டவர்களுடைய தீர்மானம்,
இன்செ லால் = இனிய
சொற்களால், ஈரம் = அன்பு, அளைஇ = கலந்து,
(இருப்பின்), படிறு
இலவாம் = குற்றம் உடையனவல்லவாம்.

ஆகலின் இன்சொல்லின் பயனை அறிந்தவன்
கூறுவானு எனின்,
கடுஞ்சொற்களைக்

99 இன்சொ லினிதீன்றல் காண்பா
னெவன்கொலோ
9 வன்சொல் வழங்கு வது.
பொ. இன்சொல்,
இனிது = நன்மையை, ஈன்றல் = பயத்தலை,
காண்பான் = அறிந்தவன், வன் சொல் =
கடுஞ்சொற்களை, வழங்கு
வது = வழங்குதல். எவன்கொலோ = எதற்காக?
(வழங்கமாட்டான்
என்பது கருத்து).
இன்சொல் இருக்கக் கடுஞ்சொற்களை

வழங்குதல் எதனைப்
போன்றது எனின்,

100
10

இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.[1]

பொ. இனிய = இனிய சொற்கள், உள ஆக = இருக்க, இன்னாத = கடுஞ்சொற்களை, கூறல் = வழங்குதல், கனி = பழம், இருப்ப = இருக்க, காய் = காயை, கவர்ந்தற்று = விரும்பினாற் போன்றது.

(1) படிறு = வஞ்சனை; செம்பொருள் கண்டார் = அறத்தினை யுணர்ந்தார்; ஆல் — அசைநிலை; வாயென வேண்டாது கூறினார் தீய சொற்பயிலாமை வேண்டுதற்கு; இதனான் இன்சொல்லிலக்கணங் கூறப்பட்டது.

(பரிமே ) இன்சொல்லிலக்கணம் கூறாமலே விளங்குமாதலானும், மேலே கூறப்பட்ட மனைக்குடவர் பொருள் இவ்வதிகாரத்திற்கு னும் பரிமேலழகர்கூற்று ஆராய்தற்பாலது.

சென்றன.

பொருளை விசேடித்து நின்ற பண்புகள் உவமைக்கண்ணுஞ் (பரிமே.). அவ்வாறு கூறவில்லை மணக்குடவர்.

## 11. செய்ந்நன்றியறிதல்.[1]

செய்ந்நன்றியறிதல் என்பதற்குப் பிறர் தமக்குச் மையை எப்போதும் நினைத்திருத்தல் என்பது பொருள்.

செய்த நன்

தாம் பிறர்க்கு உதவி செய்யாமலிருக்கும்போது தமக்கு அவர் செய்த உதவி மிகப் பெரிது ; வேண்டிய காலத்தில் செய்த உதவி சிறிதாயினும் அதுவும் பெரிது ஆகும் ; பிரதிப்பிரயோஜனத்தை எதிர்பாராது செய்தவரின் உதவியும் மிகப்பெரிது; உதவப்பட்டார் உதவியின் பயனை ஆராய்ந்தால் அவ்வுதவி மிகச் சிறிதாயினும் மிகப் பெரிதாக நினைப்பர் ; உதவியின் அளவு உதவப்பட்டாரின் தகுதிக் குத் தக்காவாறே ஆகும்; ஆபத்தில் உதவியவருடைய சிநேகத்தையும் குற்றமில்லாதவரின் சிநேகத்தையும் விடக்கூடாது ; ஆபத்திற் செய் யப்பட்ட உதவியை எழு பிறப்புக்களிலும் பெரியோர் மறவார் ; பிறர் நமக்கு நன்மையையும் தீமையையுஞ் செய்தால் நாம் தீமையை மறந்து நன்மையை மறவாமல் இருக்கவேண்டும்; கொலை போன்ற தீச் செயலும் அவர் செய்த ஒரு நற்செயலை நினைப்பின் நீங்கி விடும்; எவ்வ கைப்பட்ட பாவத்தைச் செய்தாருக்கும் பிராயச்சித்தம் இருக்க, செய்ந்நன்றி மறந்தார்க்குப் பிராயச்சித்தமே இல்லை; எனக் கூறினர்.

**101** [2]செய்யாமற் செய்த வுதவிக்கு

வையகமும்
1 வானகமு மாற்ற லரிது.

பொ. செய்யாமல் செய்த உதவிக்கு=(தாம் பிறருக்கு) உதவி செய்யாமல் இருக்கும்போது (அவர்) செய்த உதவிக்கு, வையகம் உம்=இவ்வுலகமும், வானகம் உம்=சுவர்க்கமும், ஆற்றல்=சமமாயிருத்தல், அரிது=இல்லை.

வேறு எவ்வாறு உள்ள நன்றி மிகப் பெரிது எனின்,

102 [3,4] காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினு
2 ஞாலத்தின் மாணப் பெரிது.

பொ. காலத்தினால்=வேண்டிய காலத்தில், செய்த=செய்யப்பட்ட, நன்றி=உபகாரம், சிறிது எனினும்=சிறிதாக இருந்தாலும், (அது), ஞாலத்தின்=பூமியைக் காட்டிலும், மாணப் பெரிது=மிகப் பெரிது, (ஆகும்).

(1) cf. कृतज्ञता.

(2) செய்யாதார் (மணக். பாடம்).செய்யாமைச்செய்தவுதவியென்று பாடமோதி, மறித்துதவமாட்டாமையுள்ளவிடத்துச் செய்தவுதவியென்றுரைப்பாருமுளர். (பரிமே.). அப்பாடத்திலும் செய்யாமை என்பதைச் செய்யாமல் என்ற பொருளதாகக் கொளல் கூடும். cf. அடை சினைமுதல் வென முறை மூன்று மயங்காமை (தொல். சொல் 26)

(3) காலத்தினால்—ஒருவனுக்கு இறுதி வந்த எல்லைக்கண். (பரிமே.)

(4) காலத்தினாலென்பது வேற்றுமைமயக்கம். (பரிமே.)

7



மேலும்,

103 பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
3 னன்மை கடலிற் பெரிது.

போ. (ஒருவர்), பயன் = பயனை, தூக்கார் = ஆராய்ந்துபாராமல் செய்த, உதவிநயன் = உதவியின் நன்மையை, தூக்கின் = ஆராய்ந்து பார்த்தால், நன்மை = அந்நன்மை, கடலின் = சமுத்திரத்தைக்காட்டிலும், பெரிது.

உதவியின் பயனை அறிய ஆற்றலுள்ளார் அதன் அளவை எவ்வாறு கொள்ளுவர் எனின்,

104 தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
4 கொள்வர் பயன்றெறி வார்.[1]

போ. தினைத்துணை நன்றி = தினையளவுபோன்ற மிகச்சிறிய நன்மையை, (ஒருவர்), செயினும் = செய்தாலும்,

அதனை, பயன்

றெரிவார் = நன்றியின் பயனை நன்கு அறிய ஆற்றலுடையவர்,

பனைத்துணை ஆ = பனையளவு போன்று மிகப்பெரிது ஆக, கொள்வர்.

அவ்வாறு கொள்ளுதற்கு வேறு காரணமும் யாது எனின்,

**105**

**5**

உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

போ. உதவி = உபகாரம்,

உதவிவரைத்தன்று = உபகாரத்தின் அளவை அளவாகக்கொண்டதன்று ; உதவிசெயப்பட்டார்

சால்பின்வரைத்து = உதவிசெயப்பட்டவருடைய பெருந்தன்மையின் அளவை அளவாகக்கொண்டது.

ஆகலின்,

**106** மறவற்க மாசற்றார் கேண்மை

துறவற்க

6 துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

போ. துன்பத்துள் = ஆபத்துக்காலத்தில், துப்பாயார் நட்பு = உதவியவர்சிநேகத்தை, துறவற்க = விடாமலிருக்கவேண்டும்; மாசற்றார்கேண்மை = குற்றமில்லாதவரின் சிநேகத்தை, மறவற்க = மறக்காமலிருக்கவேண்டும்.

(1) பயன்றெரிவார் = அக்கருத்தின் பயன்றெரிவார் (பரிமே.)

51

பெரியோர் அவற்றை மறப்பரோ எனின்,

107/7 எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு

போ. பயன் தெரிவார் = உபகாரத்தின் பயனை ஆராய்வார்,
தங்கண் = தம்மிடத்தில்,
விழுமந்துடைத்தவர்நட்பு = துன்பத்தைப் போக்கியவருடைய சிநேகத்தை, எழுமை = ஏழு பிறப்புக்களிலும்,
எழுபிறப்பும் = ஏழுவகைப்பட்ட

பிறப்புக்களிலும், உள்ளுவர் = நினைப்பர்.

பயன்றெரிவார் என்பது அதிகரித்தது.

ஒருவரே நன்மை தீமை இவ்விரண்டையும் செய்தால், தான் யாது செய்யவேண்டும் எனின்,

108 [1]நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
8 அன்றே மறப்பது நன்று.



போ. நன்றி = ஒருவர் செய்த உபகாரத்தை, மறப்பது, நன்று = நல்லதில்லை; நன்றல்லது = (அவர் செய்த) அபகாரத்தை, அன்றே = அப்பொழுதே, மறப்பது, நன்று = நல்லது.

ஏன் எனின்,

109 கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
9 வொன்றுநன் றுள்ளக் கெடும்.[2]

போ. கொன்றன்ன = கொல்லுதலை ஒத்த, இன்னா = தீச்செயலை, செயினும் = செய்தாலும், அவர், செய்த, ஒன்று நன்று = ஒரு உபகாரத்தை, உள்ள = நினைக்க, (அது), கெடும் = போக்கப்படும்.

1. நன்றி மறத்தலின் பயனை மாபாரதம் கூறியது காண்க
cf. कुतः कृतघ्नस्य यशः कुतः स्थानं कुतः सुखम्।
अश्रद्धेयः कृतघ्नो हि कृतघ्ने नास्ति निष्कृतिः॥ (म.भा.उद्यो.107,10)
(2) cf. पूर्वोपकारी यस्ते स्यादपराधे गरीयसि।

उपकारेण तत्तस्य चन्तव्य मपराधिनः ॥ (म.भा.वन.28,27)

52

செய்ந்நன்றியில்லாதார்க்குப் பிராயச்சித்தம்

உண்டோ எனின்

**110** எந்நன்றி கொன்றார்க்கு

முய்வுண்டா முய்வில்லை

**10** செய்ந்நன்றி கொன்ற மகற்கு [1]

பொ. எந்நன்றிகொன்றார்க்கும் = எவ்வகைப்பட்ட அறத்தைச் சிதைத்தவர்க்கும், உய்வு = பிராயச்சித்தம், உண்டாம் = இருக்கின்றதாம்; செய்ந்நன்றிகொன்ற மகற்கு = செய்ந்நன்றி மறந்தார்க்கு, உய்வு = பிராயச்சித்தம், இல்லை.

---

## 12. நடுவுநிலைமை.[2]

நடுவுநிலைமை என்பதற்குப் பக்ஷபாதமின்மை அல்லது ஓரவஞ் சனையில்லாமை என்பது பொருள்.

ஒருவர் நமக்குச் செய்த நன்றியை மறவாதிருக்கவேண்டும் எனக் கூறியபின்னர்,

அவருக்கும் மற்றொருவருக்கும் விவாதம் வர, தம்மை மத்தியஸ்தராக வேண்டுங்காலத்து, ஒருவர் செய்த நன்றியை நினைத்து ஒரு பக்கமாகத் தீர்மானங் கூறுதல் தவறு என்பதை உணர்த்த, செய்ந்நன்றியறிதலின் பின்னர் நடுவுநிலைமையைக் கூறினர்.

நடுவுநிலைமை என்ற பொருளில் தகுதி, தகவு, செப்பம், நடு, கோடாமை, ஒருபாற்கோடாமை என்ற சொற்களையும் வழங்குகின்றனர்.

(1) cf. ब्रह्मघ्ने च सुरापे च चोरे भग्नव्रते तथा ।
निष्कृतिर्विहिता सद्भिः कृतघ्ने नास्ति निष्कृतिः ॥
(म.भा.शा.771,11 रामा.किष्किधा 34,12)

ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கு—மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்—குரவர்த்தப்பிய கொடுமை யோர்க்கும்—வழுவாய் மருங்கிற் கழுவாயுமுள வே—நிலம்புடை பெயர்வ தாயினுமொருவன்— செய்தி கொன்றோர்க் குய்தியில் லென்— றறம்பாடின்றே யாயிழை கணவ (புறநா. 34).

(2) cf. मध्यस्थता.

நடுவுநிலை தனக்கும் தன்
வமிசத்தாருக்கும் ஆக்கத்தைத்
தரும்; அந்நிலையில் இருக்கின்றவர் ஏழையாய்
இருந்தாலும் அவரை ஏழையாக உலகத்தார்
எண்ணமாட்டார்; சுகமும் துக்கமும் மனி
தர்க்கு இயற்கையாகலான்
நடுவுநிலையிலிருப்பதே மேலோர்க்கு
அணி; தற்போது ஆக்கத்தைத் தருவதாக
இருப்பினும் நடுவுநிலை
யின்மையைக் கொள்ளக்கூடாது; நடுவுநிலையில்
இல்லாமல் கெட்ட
காரியங்களைச் செய்தால் அவன் நிச்சயமாய்க்
கெடுவான் என்று ஒவ்
வொருவரும் அறியவேண்டும்; தக்கார் தகவிலர்
என்பதை அவர்கள்
சந்ததியால் அறியக்கூடும்; சபையில் இருவர்
வாதமிடும்போது, அவரிடம் சமமான
எண்ணத்தோடு இருந்து அவரது வாதத்தை
ஆராய்ந்து சீர்தூக்குங்கோல்போல்
இருக்கவேண்டும்; மனத்தள்
கோணல் இல்லாமல் இருப்பின் சொற்கள்
இருபொருள்பட வாரா;
வணிகர்க்கு நடுவுநிலை அவர் பிறருடைய

பொருளைத் தம் பொருள்
போல் நினைத்தலே; பலவித மக்களிடத்தில்
முறைப்படி நடுவுநிலையி
விருப்பின் அவ்வறமே எல்லாவற்றிலுஞ்
சிறந்தது ; எனக்
கூறினர்.

**111** செப்ப முடையவ னாக்கஞ்
சிதைவின்றி
**1** யெச்சத்திற் கேமாப் புடைத்து.

பொ. செப்பம்=நடுவுநிலையை,
உடையவனாக்கம்=உடையவ
னுடைய செல்வம், சிதைவு இன்றி=அழிவு
இல்லாமல், எச்சத்
திற்கு (உம்)=சந்ததிகளுக்கும், ஏமாப்பு
உடைத்து=ஆதாரமா
யிருக்குந்தன்மையை உடையது.

அந்நிலையிலுள்ளோர் தாழ்ந்த நிலையில்
இருப்பின், மற்றவர்
அவரை எப்படி நினைப்பர் எனின்,

**112** கெடுவாக [1]வையா துலக
நடுவாக

2 நன்றிக்கட் டங்கியான் ருழ்வு.[2]

போ. நடு = நடுநிலையில், ஆக = இருந்து, நன்றிக்கண் = அறத்தின்கண், தங்கியான்றுழ்வு = இருப்பவனுடைய வறுமையை, உலகம் = உலகத்தார், கெடு ஆக = வறுமை ஆக, வையாது = நினைக்கமாட்டார்.

1. உலகம் வையாது (cf தொல்.
2. செல்வமென்று கொள்ளுவர்

சொல். 57)
என்பது குறிப்பெச்சம் (பரிமே).

54

அந்நிலை மனிதர்க்கு எவ்வாறு ஆகும் எனின்;

113 [1]கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
3 கோடாமை சான்றோர்க் கணி.

போ. உலகத்திற்கு = உலகத்திலுள்ள மக்கட்கு, கேடும் = துன்பமும், பெருக்கமும் = ஆக்கமும், இல் அல்ல = இல்லை என்பது இல்லை. (ஆகையால்), சான்றோர்க்கு = மேலானவர்க்கு, நெஞ்சத்

அக்கோடாமை = நடுவுநிலை, அணி = ஆபரணம், (ஆகும்.)

உலகம் என்பது அதிகரிக்கப்பட்டு நான்காம்வேற்றுமையாக மாற்றப்பட்டது.

தற்போது நடுநிலையின்மை கொள்ளலாமா எனின்,

ஆக்கத்தைத் தரின், அதனைக்

114 நன்றே தரினு நடுவிகந்தா[2]மாக்கத்தை
4 யன்றே யொழிய விடல்.

பொ. நடு = நடுநிலைமையை, இகந்து = ஒழித்தலால், ஆம் = உண்டாகும், (ஆக்கம்) = செல்வம், நன்றே = நன்மையையே, தரினும் = கொண்டுவந்தாலும், ஆக்கத்தை = அவ்வாக்கத்தை, அன்றே = அப்பொழுதே, ஒழியவிடல் = ஒழித்துவிடவேண்டும்.

ஏனெனில்,

115 [3]கெடுவல்யா னென்ப தறிகதன்

னெஞ்ச

5 நடுவோரீஇ யல்ல செயின்.

போ. தன் = தன்னுடைய, நெஞ்சம் = மனத்தால், நடு

ஓரீஇ = நடுநிலையை

ஒழித்து, அல்ல = நன்றல்லவற்றை, செயின் = செய்தால், யான்,

கெடுவல் = நிச்சயமாய்க் கெடுவேன், என்பதை, அவரவர், அறிக = அறியவேண்டும்.

(1) இப்பிறப்பிலுள்ள கேடு பெருக்கம் இவ்விரண்டும் வரும் என்பது அறியத்தக்கது. அவற்றைத் தன்முயற்சியால்

ஊழான்

தடுப்பது

பெரும்பாலும் இல்லை.

(2) "இகத்தலான் என்பது இகந்தெனத்திரிந்து நின்றது" எனப் பரிமேலழகருரையில் உள்ளது; செய்து என்ற வாய்பாட்டுவினையெச்சம் காரணப்பொருளிலும் வருமாகையால் அஃது அவரது கூற்று என்பது ஆராய்தற்பாலது.

(3) அல்லீற்றுத்தன்மையொருமை துணிவுப்பொருளில் வருமென்பதை வீரசோழியத்திற் காண்க.



நன்று, அவரவர் என்பன அதிகரித்தன.

நடுநிலையில் ஒருவர் இருக்கின்றார் இல்லை

என்பது எதனால் அறியப்படும் எனின்,

**116** தக்கார் தகவில ரென்ப தவரவ
**6** ரெச்சத்தாற்[1] காணப் படும்.

போ. *தக்கார் = நடுநிலையில் உள்ளவர், தகவிலர் = நடுநிலையில் இல்லாதவர், என்பது, அவரவரெச்சத்தால் = அவரவருடைய ஸந்ததியால், காணப்படும் = அறியப்படும்.*

*சபையில் ஒருவர் எவ்வாறு இருக்கவேண்டும் எனின்,*

**117** சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
**7** கோடாமை சான்றோர்க் கணி.[1]

போ. *கோல் = தூக்குங் கோல், சமன்செய்து = (இருபுறமும்) சமனாகச் செய்யப்பட்டு, சீர் = சமமான நிறையை, தூக்கும்போல் தூக்கிக்காட்டுகின்றதுபோல், அமைந்து = (வாதிகள் இருவரிடமும்) சமமான எண்ணத்தோடு இருந்து, ஒருபால் = ஒரு பக்கத்தில்,*

கோடாமை = நடுநிலைதவறாமை, சான்றோர்க்கு = மேலோர்க்கு,

அணி = ஆபரணம், (ஆகும்.)

(1) எச்சத்தால் என்பதற்கு ஆவாரத்தொழிலினானே என மணக்குடவருரையில் பொருள் உளது. "இது தம்மளவிலே நிற்பதல்லது தம்மக்களையும் விடாதென்பது கூறிற்று" என அதற்குப் பின்னர் உள்ளமையால் "எச்சத்தால் என்பதற்கு மக்களானே என்றுரையிருக்கலாமென்பது விளங்குகின்றது" எனக்கூறுகின்றனர் அவ்வுரைபதிப்பாளர். "நன்மக்களது உண்மையானும் இன்மையானும்" எனப் பொருள் கூறினர் பரிமேலழகர்.

(2) "உவமையடையாகிய சமன்செய்தலும் சீர்தூக்கலும் பொருட்கண்ணும், பொருளடையாகிய அமைதலும் ஒருபாற்கோடாமையும் உவமைக்கண்ணும் கூட்டி...உரைக்க" எனப் பரிமேலழகருரையில் உள்ளது. சமன் செய்தலும் அமைதலும் ஒரே பொருளைக் கொண்டமையாலும், சீர்தூக்கலும் ஒருபாற்கோடலும் ஒரே கருத்தைக் கொண்டமையாலும், இஃது அவர்கூற்றுதானா என்பது ஆராய்தற்குரியது.

cf. விரிசீர்த்
தெரிகோல் ஞமன்ன் போல வொருதிறம்
பற்ற லிலியரோ (புறநா. 6, 8—9)
ஞமன்கோ லன்ன செம்மைத் தாகி (மதுரைக். 4 1)
ஓர்வுற் றொருதிற மொல்காத நேர்கோல்
அறம்புரி நெஞ்சத் தவன் (கலித். 42, 14—15).

---

56

மேலும்,

**118/8** சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின்.

போ.

*உட்கோட்டமின்மை = மனக்கோணலின்மையை, ஒரு தலையா = நிச்சயமாக, (ஒருவன்), பெறின் = அடைந்தால், செப்பம் நடுநிலைமை, (சொற்கோட்டம்)*[1] *= சொல்லின் கோணலை, இல்லது = உடைத்தாயிராது.*

*வணிகர்க்கு நடுநிலை என்பது யாது எனின்,*

**119/9**

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம்[2] பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.

போ. *பிறவும் = பிறருடைய பொருள்களையும், தமபோல் = தம்முடைய பொருள்கள்போல், பேணி = போற்றி, செயின் = செய்தால், அஃதே, வாணிகம் செய்வார்க்கு = வியாபாரிக்கு, வாணிகம் = உயர்ந்த*

வாணிகம், (ஆகும்.)

முறைப்படி நடுநிலையில் இருந்தால் அவ்வொன்றுமே போதுமோ எனின்,

**120** தகுதி யெனவொன்று நன்றே

பகுதியாற்

**10** பாற்பட் டொழுகப் பெறின்.

பொ. பகுதியான் = மக்கட்பகுதிக்குள், பால் = முறையோடு, பட்டு = பொருந்தி, ஒழுகப்பெறின் = நடத்தப்பட்டால், தகுதிஎன நன்றே = நடுநிலை என்ற அறமே,

ஒன்றும் = ஒப்பற்றதாகும்.

(1) சொற்கோட்டம் என்பது கூறுந்தன்மை.

இருபொருள்படச் சொற்களைக்

(2) வாணிகம் = இலாபம் (மணக்.)

(3) பகுதியான்—ஏழாம்வேற்றுமைப்பொருளில் வந்தது.

# 13. அடக்கமுடைமை.

அடக்கமுடைமை என்பதற்கு மனமும் இந்திரியங்களும் அடங்கியிருக்குந் தன்மையை உடைத்தாயிருத்தல் என்பது பொருள்.

அடக்கம் இல்லாதிருந்தால் நடுவுநிலைமை

உண்டாகாதாகலின்,

அதன் பின்னர் அடக்கமுடைமையைக் கூறினர்.

அடக்கம் என்ற பொருளில் செறிவு,

பணிதல் என்ற சொற்

களையும் ஆசிரியர் வழங்கினர்.

மக்களுக்கு அடக்கத்தைக்காட்டிலும்

மேலான செல்வம்

இல்லை; அது கீர்த்தியைத் தரும்; அது

மலையைக்காட்டிலும் பெரிது; அறக்கடவுள் தானே

அடக்கமுடையானுக்கு மேன்மையை உண்டு

பண்ணும்; எழு பிறப்புக்களிலும் அது பயனைத்

தரும்; அஃது

எல்லோரிடத்திலும் இருக்கவேண்டுமாயினும்

செல்வமுடையாரிடத்

தில் இருப்பின் அச்செல்வம் பிரகாசிக்கும் ;
இந்திரியங்கள் எல்லா வற்றையும்
அடக்கமுடியாவிட்டாலும் நாக்கையாவது
அடக்கவேண்
டும் ; பல சொற்களுள் ஒன்றுவது தீய
சொல்லாயிருந்தால், அது
பிறருக்கு வருத்தத்தைத் தரும் ; அச்சொல்லால்
உண்டாகும் புண்
ஆருது ; அடக்கம் சுவர்க்கத்தையும்,
அடையச் செய்யும்; எனக் கூறினர்.

அடக்கமின்மை நரகத்தையும்

**121**
**1**

காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூங் கில்லை வுயிர்க்கு.

பொ. அடக்கத்தை, பொருள்ஆ = பொருள்ஆக, காக்க = பாதுகாத்தல்வேண்டும். உயிர்க்கு = மக்களுக்கு, அதனின் = அதைக்காட்டிலும், ஊங்கு = மேலான, ஆக்கம் = செல்வம், இல்லை.

அடக்கம் எதைத் தரும் எனின்,

**122** செறிவறிந்து[1] சீர்மை பயக்கு
மறிவறிந்[2]
**2** தாற்றி னடங்கப் பெறின்.

பொ. அறிவு = புத்தியால், அறிந்து = ஆராய்ந்து, ஆற்றின் நல்லவழியில், உயிர் = மனிதன், அடங்கப்பெறின் = இந்திரியங்களைச் செலுத்துவானாயின், செறிவு = (அந்த) அடக்கம், அறிந்து = (பிறரால்) அறியப்பட்டு, சீர்மை = கீர்த்தியை, பயக்கும் = உண்டு பண்ணும்.

உயிர்க்கு என்பது அதிகரிக்கப்பட்டு, முதல்வேற்றுமையாக மாற்றப்பட்டது.

மேலும்,

**123** நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
**3** மலையினு[3] மாணப் பெரிது.

பொ. நிலையின் = வர்

ஸ்ரமதர்மத்தினின்றும், திரியாது = தவறாமல், அடங்கியான்றோற்றம் = இந்திரியங்களை அடக்கியவனுடைய உயர்ச்சி, மலையினும் = மலையின் உயர்ச்சியைக்காட்டிலும், மாண = மிக, பெரிது.

மேலும்,

124 கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
4 யறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

பொ. கதம் = கோபத்தை, காத்து = போக்கி, கற்று = (நூல்களை) ஆராய்ந்து, அடங்கலாற்றுவான் செவ்வி = இந்திரியங்களை அடக்குவானுடைய நன்மையை, அறம் = தர்மக்கடவுள், ஆற்றின் = அவன் வழியில், நுழைந்து = சென்று, பார்க்கும் = செய்யநினைக்கும்.

(1) அறிந்து—செயப்பாட்டுவினைப்பொருளில் வந்தது.

(2) cf. यस्तु विज्ञानवान्भवति युक्तेन मनसा सदा।
तस्येंद्रियाणि वश्यानि सदश्वाइव सारथेः ॥
(कठोपनिषत् 3,3,6)

(3)
அறிவு = அறியப்படுவன—சுவைஒளி ஊறு ஓசை நாற்றம்(மணக்.)
= அடங்குதலே நமக்கு அறிவு ஆவது (பரிமே.)
மலை—ஆகுபெயர்,

## 59

மேலும்,

**125** ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி

**5** னெழுமையு மேமாப் புடைத்து.[1]

*பொ, ஆமைபோல், உயிர் = மனிதன், ஒருமையுள் = ஒரு பிறப்பில், ஐந்து = ஐந்து ஞானேந்திரியங்களையும், அடக்கல் ஆற்றின் = அடக்கினால், அஃது, எழுமையும் = ஏழுபிறப்புக்களிலும், ஏமாப்பு உடைத்து = க்ஷேமம் தருதலை உடைத்து.*

*உயிர் என்பது முன்போல் அதிகரித்தது.*

*அது யாரிடத்தில் நன்றாய்ப் பிரகாசிக்கும் எனின்,*

126 எல்லார்க்கு நன்றும் பணித லவருள்ளுஞ்
6 செல்வர்க்கே 'செல்வந் தகைத்து.

பொ. பணிதல் = அடக்கம், எல்லார்க்கும், நன்று ஆம் = நல்லது ஆகும்.
அவருள்ளும் = அவர்களுக்குள்ளும், செல்வர்க்கே = பணக்காரர்களுக்கே, செல்வந் தகைத்து = மிகச் சிறந்தது.

இந்திரியங்களுள் எதனை அடக்கவேண்டுவது அவசியம் எனின்,

127 யாகாவா ராயினு நாகாக்க
காவாக்காற்
7
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

பொ. ஒருவர், யா = எல்லாவற்றையும், காவாராயினும் = அடக்கமுடியாமல் இருப்பினும், நா = நாக்கை, காக்க = அடக்கவேண் டும்; காவாக்கால் = அடக்காவிட்டால், சொல்லிழுக்கு = சொற்குற்றத் தோடு, பட்டு = பொருந்தி, சோகாப்பர் = துன்பம் அடைவர்.

சொல் ஆற்றலால்மாத்திரம் நல்ல பொருளை உணர்த்தினால் போதுமோ, கருத்தாலும் அவ்வாறே உணர்த்தவேண்டுமோ எனின்,

128/8 ³ஒன்றானுந் தீச்சொற் பொருட் பயனுண்டாயி னன்றாகா தாகி விடும்.

(1) cf. यथा संहरते चायं कूर्मोगानीव सर्वशः।
इंद्रियाणींद्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥
(म.भा.) (2) மிகவும் நன்மையுடைத்து (மணக்.) யுடைத்து (பரிமே.)

செல்வஞ் சிறப்பினை

(3) 'ஒரு சொல்லேயாயினும் கேட்டாருக்கு இனிதாயிருந்து தீய சொல்லின் பொருளைப் 'பயக்குமாயின்' (மணக்.) உண்டு ஆயினும்

60

பொ. ஒன்றானும் = ஒரு சொல்லாலும், தீச்சொற்பொருட் பயன் = தீயசொற்களின் பொருளால் உண்டாம் பயன், உண்டு ஆயின், = உண்டானால், (அது), நன்று ஆகாது ஆகிவிடும் = கெட்டதாய் ஆகிவிடும்.

சொல் கருத்துவகையாலும் தீமையை உணர்த்தக்கூடாது என்பது கருத்து.

நெருப்பாற் பட்ட புண்ணுக்கும்
ணுக்கும் பேதம் யாது எனின்,

தீச்சொல்லாற் பட்ட புண்

129
9

தீயினுற் சுட்டபு [1]ணுள்ளாறு மாறாதே
[2]நாவினுற் சுட்ட வடு[3]

பொ. தீயினல் = நெருப்பால், சுட்ட = சுடப்பட்ட, புண், உள் = உள்ளிடத்தில், ஆறும் = தீரும். நாவினல் = நாக்கினல் வந்த சொல்லால், சுட்ட = சுடப்பட்ட, வடு = புண், ஆறாது = தீராது (ஏ—அசை).

ஆகலின்,

130
10

அடக்க [4]மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்.[5,6]

பொ. அடக்கம், அமரருள் = தேவர்களுள், உய்க்கும் =

செலுத்தும். அடங்காமை, ஆரிருள் = நெருங்கிய இருளோடுகூடிய நரகத்தில், உய்த்துவிடும் = செலுத்தும்.

என்பது ஆனும் எனக் குறைந்தது என்றும், தாயின் என்ற பொருளில் வந்தது என்றும் உண்டாயின் என்பது உடைத் கொள்ளவேண்டும். 'தீயவா கிய சொற்களின் பொருள்களாற் பிறர்க்கு வருந்துன்பமொன்றாயினும் ஒருவன் பக்கலுண்டாவதாயின் (பரிமே.) இக்கருத்து அடுத்த குறளாலும் கொள்ளப்படுகின்றமையின் கூறியதுகூறல் என்பதற்கு ஒருவாறு இடன் கொடுக்கும். 'ஒன்றாயினும் தீச்சொற்படும் பொருளினது பயன் பிறர்க் குண்டாவதாயின்' என்ற பரிமேலழகருரைத்தொடரில் ஒன்றாயினும் என் பதற்குப் பிரதியாக ஒன்றும் என்றிருத்தல் வேண்டுமோ என்பது ஆராய் தற்பாலது.

(1) உள் = மனத்தின்கண் (பரிமே.)
(2) நா—ஆகுபெயர்.
(3) cf. निरोहेदायुधैश्छिन्नं संरोहेद्दग्धमग्निना ।
वाक्क्षतं च न संरोहेदाशरीरं शरीरिणाम् ॥ [म.भा.आदि.73,25]
(4) அமரன் = अमरः (5) ஆரிருள் = अंधं तमः இச்சொற்கு ஸம்ஸாரம் என்ற பொருளுங் கூறலாம். (6) உய்த்துவிடும் — விடு என்பது துணைவினை.

# 14. ஒழுக்கமுடைமை.

ஒழுக்கமுடைமை என்பதற்கு ஒழுக்கத்தோடிருத்தல் என்பது பொருள். ஒழுக்கம் என்பதற்குத் தருமசாஸ்திரங்களால் விதிக்கப் பட்ட முறைப்படியும் பெரியோர்களால் நடக்கப்பட்ட முறைப்படியும் நடத்தல் என்பது பொருள்.

*பிறனில்விழையாமை முதலிய தர்மங்களைக் கொள்ளவேண்டும் எனத் தனித்தனியாகக் கூறுவதற்கு முன்னர் பொதுவாக அவற் றைக் கொள்ளுதலால் உண்டாம் பயனையும் அவற்றிற்கு மாறுபா டாக நடப்பதால் வருங் குற்றத்தையும் கூறுவதற்குப் பிறனில் விழையாமை முதலிய அதிகாரங்களுக்கு முன்னரும், அவ்வாறு நடத் தல் அடக்கமுடையவர்க்கே எளிதாகலின் அடக்கமுடைமை என்ற அதிகாரத்தின் பின்னரும் இவ்வதிகாரத்தை ஆசிரியர் கூறினர்.*

*ஒழுக்கமுடைமை மேன்மையையும் ஒழுக்கந்தவறுதல் தீராப் பழியையும் தரும்; நல்லொழுக்கம் இன்பத்திற்கும், தீயொழுக்கம் துன்பத்திற்குங் காரணம் ஆகும்; ஒழுக்கமுடைமை நல்ல பிறப்பை யும் ஒழுக்கந்தவறுதல் தீய பிறப்பையுந் தரும்; பிராமணன் வேதத்தை மறந்தாலும் பின்னர்க் கற்றுக்கொள்ளலாம் ஒழுக்கம் குன்றின் கெடுவான்; பொறாமையுடையவன் தன் மக்களால் சிறப்பு அடையாததுபோல ஒழுக்கங்குன்றியவன் தன் மக்களால் உயர்வு அடையமாட்டான்; ஒழுக்கந்தவறுதலால் வருகின்ற கேடுகளை நினைத்து மனவலியுடையார் ஒழுக்கத்தினின்றுந் தவறமாட்டார்; ஒழுக்கமுடையார் வாயிலிருந்து மறந்தும் தீய சொற்கள் வாரா; உலகத்திலுள்ள பெரியோரது ஒழுக்கத்தின்படி நடக்கத் தெரியாத வர் நூல்களைப் படித்திருந்தாலும் அவற்றைப் படியாதவரே ஆவர்; அவ்வொழுக்கத்தின் பயனே மறுமைக்குத் துணை ஆகும்; இக்கார ணங்கள்பற்றி ஒழுக்கத்தை உயிரைக்காட்டிலும் சிறப்பாகப் போற்ற வேண்டும் எனக் கூறினர்.*

**131** ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
**1** னெய்துவ ரெய்தாப் பழி.

பொ. (ஒருவர்), *ஒழுக்கத்தின் = ஒழுக்கத்தால், மேன்மை = உயர்வை, எய்துவர் = அடைவர்; இழுக்கத்தின் = ஒழுக்கந் தவறு கையால், எய்தாப்பழி = தீராப்பழியை, எய்துவர் = அடைவர்.*

மேலும்,

**132/2** [1]நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும்.

(1) நன்றி—ஆகுபெயர்; நன்றி = முத்தி (மணக்.) நன்றி என்பதற்கு அறம் என்ற பொருளைக்கொண்டு, 'நன்றிக்கு வித்தாகும்' என்றவிடத்து

62

பொ. நல்லொழுக்கம், நன்றிக்கு = நற்செயலால் வருகின்ற இன்பத்திற்கு, வித்து ஆகும் = காரணம் ஆகும். தீயொழுக்கம், என்றும் = எப்பொழுதும், இடும்பை = துன்பத்தை, தரும் = உண்டு பண்ணும்.

மேலும்,

**133/3**

ஒழுக்க முடைமை குடிமை[1] யிழுக்க
மிழிந்த பிறப்பாய்[2] விடும்.[3,4]

பொ. ஒழுக்கமுடைமை, குடிமை = நல்லகுடிப்பிறப்பிற்குக் காரணம், (ஆகும்); இழுக்கம் = ஒழுக்கந்தவறுதல், இழிந்த பிறப்பு = தாழ்ந்த பிறப்புக்குக் காரணம், ஆய்விடும் = ஆகும்.

மேலும்,

**134** 'மறப்பினு மோத்துக்
கொளலாகும் பார்ப்பான்[5]
**4** பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.'[7]

இன்பம் பயக்கும் என்பதையும், 'தீயொழுக்கம் இடும்பை தரும்' என்றவிடத்து பாவத்திற்குக் காரணமாகும் என்பதையும் வருவித்துப் பொருள் கூறினர் பரிமேலழகர். நன்றி என்பதை ஆகுபெயராய்க்கொள்ளின் அக்கருத்து வருதல் நோக்கற்பாலது.

(1) குடிமை—ஆகுபெயர்.

(2) பிறப்பு—ஆகுபெயர்.

— (3) cf. स्वभावनियतं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् । (भ.गी. 18,47)

परधर्मो भयावहः (भ.गी.3,35)

(4) ஒருவன் இழிந்த குலத்தானாயினும் ஒழுக்கமுடையவனாக உயர்குலத்தனும்; அதனைத் தப்பி ஒழுகுவானாயின், உயர்குலத்தனாயினும் இழிகுலத்தானாயேவிடும். (மணக்.)

(5) மறப்பினும் என்ற உம்மையால் மறவாதிருத்தலே பெரும்பான்மை என்பது அறியப்படும்.

(6) பார்ப்பான் என்ற சொல் பார்த்தல் வினையிலிருந்து வந்ததாகக் கொள்வர் பலர். அவ்வாறாயின் அதற்கு மேற்கோள் ऋषिर्दर्शनात्, ऋषिः पश्यको भवति என்பன ஆகும். பார்ப்பனரெல்லோரையும் இருடிகளாகக் கொள்வது நேரிதன்றாகலான், பார்ப்பான் என்பது பார்ப்பனன் என்ற சொல்லின் திரிபெனவும், பார்ப்பனன் என்பது ब्राह्मणः என்பதின் தற்பவமெனவும் கொள்ளலாம் என்பது என் கருத்து.

(7) யார்யார்க்கும் ஒழுக்கம் தவறினும் பிராமணனுக்கு ஒழுக்கம் ஒருகாலும் தவறக்கூடாது என்ற கருத்தை ஆசிரியர் இக்குறளால் வெளியிடுதல்

நோக்கத்தக்கது.

63

பொ. பார்ப்பான் = பிராமணன், ஒத்து = வேதத்தை, மறப்பினும், கொளல் ஆகும் = (மறுபடியும்) ஓதிக்கொளல் தகும். பிறப்பொழுக்கம், குன்ற = குன்றுதலால், மேலும், (அவன்), கெடும் = கெடுவான்.

135 அழுக்கா றுடையான்க
ணாக்கம்போன் றில்லை
5 யொழுக்க மிலான்க ணுயர்வு.

பொ. ஒழுக்கமிலான்கண் = ஒழுக்கமில்லாதவனிடத்தில், உயர்வு = (மக்களால் வரும்) சிறப்பு, அழுக்காறுடையான்கண் பொறாமையுடையவனிடத்தில், ஆக்கம்போல் = (மக்களால் வருஞ்) சிறப்புப்போல், இல்லை.

ஈண்டு ஆக்கம் என்பது மக்களாக்கத்தைக் குறிக்குமென்பது 'கொடுப்ப தழுக்கறுப்பான்

சுற்ற முடிப்பதூஉமுண்பதூஉ மின் றிக் கெடும்'
என்ற குறளால் அறியப்படுதலின், உயர்வும்
மக்களால்
வரும் உயர்வையே குறித்தது ஆகும்.
ஆகலின்,

136
6

ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து.

பொ. உரவோர் = மனோதைரியமுள்ளவர்,
இழுக்கத்தின் =
ஒழுக்கந்தவறுதலால், ஏதம் படுபாக்கு =
குற்றம் அடைதலை,
அறிந்து ஒழுக்கத்தின் = ஒழுக்கத்தினின்றும்,
மேலும்,
ஒல்கார் = நீங்கார்.

137 ஒழுக்க முடையவர்க்
கொல்லாதே[1] தீய
7 வழுக்கியும் வாயாற் சொலல்.

போ. ஒழுக்கம் உடையவர்க்கு, வழுக்ியும் = மறந்தும், வாயால் தீய சொலல் = வாயால் கெட்ட சொற்களைக் கூறுதல் ஒல்லாது = நேராது. (ஏ.—அசை.)

(1) ஒல்லாவே என்ற பாடத்தைக்கொண்டு "தீயசொற்களாவன பிறர்க்குத் தீங்கு பயக்கும் பொய்ம்மை முதலியனவும், வருணத்திற்கு உரியவல்லனவுமாம்; அவற்று பன்மையாற் சொல்லுதற்குரிய பலவாயின; சொலல் சாதி யொருமை" எனக் கூறினர் பரிமேலழகர் சாதி யொருமையாயின் ஒல்லாதே என்ற பாடமே இருத்தல்வேண்டும். அப் பாடத்தையே மணக்குடவர் கொண்டுள்ளார். "வாயால் என வேண்டாது கூறினார்" எனக் கூறினர் பரிமேலழகர். உலகவழக்கு அவ்வாறிருப்பதை நோக்கி ஆசிரியர் கூறினர் எனின் குற்றம் என்னை?

## 64

தர்மசாஸ்திரங்களிலிருந்து மாத்திரம் ஒழுக்கத்தின் இலக்கணம் அறியமுடியாதோ எனின்,

**138** / **8** உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

போ. உலகத்தோடு = உலகத்திலுள்ள பெரியவரோடு, ஒட்ட = பொருந்த, ஒழுகல் = நடக்கலை, கல்லார் = தெரிந்துகொள்ளாதவர், பல கற்றும் = பல நூல்களைப் படித்திருந்தாலும், அறிவிலாதார் = புத்தியில்லாதவர், (ஆவர்).

தர்மசாஸ்திரங்களாற் கூறப்பட்டவைபோல பெரியோருடைய ஆசாரத்தையும் ஒழுக்கமாகக் கொள்ளவேண்டும் என்பது கூறப்பட்டது.

அவ்வொழு க்கத்தின்

பயன் மறுமைக்கு யாது செய்யும் எனின்,

139/9 'பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித் தேரினு மஃதே' துணை.

பொ. (ஒருவர்), ஒழுக்கம் = ஒழுக்கத்தை, பரிந்து = வருத்தப்பட்டும், ஓம்பி = போற்றி, காக்க = காத்தல்வேண்டும், தெரிந்து = ஆராய்ந்து, ஓம்பி = போற்றி, தேரினும் = நிச்சயித்தா லும், அஃதே = அவ்வொழுக்கத்தின் பயனே, (ஏ—பிரிநிலை.) துணை, (ஆகும்).

140/10

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும்.

பொ. ஒழுக்கம், விழுப்பம் = சிறப்பை, தரலான் = கொடுத்த

லால், ஒழுக்கம் = அவ்வொழுக்கத்தை, உயிரினும் = உயிரைக் காட்டினும், ஓம்ப = பாதுகாத்தல், படும் = பொருந்தும்.

(1) cf. साधूनां पुनराचारो गरीयान् धर्मलक्षणः । [म.भा.अनु.45,5]

(2) 'பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம்' என்பது அநுவாதம். பரிந்தும் என்றவிடத்து 'உம்' தொக்கது.

(3) அஃது— ஆகுபெயர்.

# 15.

## பிறனில்விழையாமை.

---

பிறனில்விழையாமை என்பதற்குப் பிறனுடைய மனையாளை விரும்பாமை என்பது பொருள். இல்லறவொழுக்கத்துள் பிறனில்விழையாமை சிறந்ததாகலின் ஒழுக்கமுடைமையின் பின்னர் இதனைக் கூறினர்.

பிறனில் என்ற பொருளில் பிறன்பொருளாள், பிறன்கடை, பிறனியலாள், பிறன்மனை, பிறற்குரியாள், பிறன்வரையாள்[1] என்ற

சொற்களை ஆசிரியர் வழங்கினர்.
தர்மசாஸ்திரங்களும்
அர்த்தசாஸ்திரங்களும் பிறன்மனை
யாளை விரும்பி ஒழுகுதலைப்பற்றிக் கூறவில்லை;
காமத்தில் ஈடுபட்
டவர்களுள் பிறன்மனையாளை
விரும்புவரைக்காட்டிலும் அறிவினர்
இல்லை; நம்பினவரின் மனையாளிடம் தவருக
நடப்பவர் செத்தவ
ரைக்காட்டிலும் வேறல்லர்; ஆராயாது
பிறன்மனைவியோடு சேர் பவன் மிக்க
பெருமையுடையவன் ஆயினும் அப்பெருமையை
இழப்
பான்; பிறனில்விழைதல் எளிது என அதைச்
செய்கின்றவன் எப்
பொழுதும் பழியை அடைவன்; அவனிடம்
பகை, பாவம், அச்சம்,
பழி இவை நான்கும் குடிகொண்டிருக்கும்;
பிறன்மனைவியை
விரும்பாதவனே தர்மத்தோடு இருக்கும்
கிருஹஸ்தன் ஆவான்;
பிறன்மனைவியைப் பாராமல் இருத்தலே

மேன்மையான அறமும்
ஒழுக்கமும் ஆகும்; பிறன் மனைவியோடு
சேராதவரே நன்மைக்கு
உரியர்; எந்த பாவச்செயலைச் செய்தாலும்,
பிறன் மனைவியை
விரும்பாமை நன்று; எனக் கூறினர்.

**141** பிறன்பொருளாட்

பெட்டொழுகும் பேதைமை

1 தறம்பொருள் கண்டார்க ணில்.

[ஞாலத்

போ. பிறன்பொருளாள் =
பிறனுடைய மனைவியை,
பெட்டு = விரும்பி, ஒழுகும்,

பேதைமை = அறிவீனம், ஞாலத்து =
பூமியில், அறம்பொருள்கண்டார்கண் =
தர்மசாஸ்திரங்களையும்
அர்த்தசாஸ்திரங்களையும் ஆராய்ந்தவரிடத்தில்,
இல் = இல்லை.

(1) பிறற்குரியாள் என்பது பொருள்.

பிறனெல்லைக்கண் நிற்பாள்.

காமசாஸ்திரத்தை ஆராய்ந்தவரிடத்தில்

உண்டோ எனின்,

**142** அறன்கடை[1] நின்றரு
ளெல்லாம் பிறன்கடை
**2** நின்றாரிற் பேதையா ரில்.

பொ. அறன்கடை = பிரவிர்த்திதர்மத்தில் கடையாயுள்ள காமத்தின்கண், நின்றருள் எல்லாம் = இருக்கின்றவர் எல்லாருள்ளும், பிறன்கடை நின்றாரின் = பிறன்மனைவியிடஞ்சென்றாரைக் காட்டிலும், பேதையார் = அறிவினர், இல் = இல்லை.

நம்பியவரின் மனைவியிடத்தில் தவறாக நடப்பவர் யாரை ஒப்பார் எனின்,

**143** விளிந்தாரின் வேறல்லர் மன்ற
தெளிந்தாரிற்
**3** றீமை புரிந்தொழுகு வார்.

போ. தெளிந்தாரில் =

நம்பியவருடைய மனைவியிடத்தில், தீமை புரிந்து ஒழு
குவார் = தீச்செயலைச் செய்து நடப்பவர், மன்ற =
நிச்சயமாக, விளிந்தாரின் = செத்தவரைக்காட்டிலும்,
வேறு, அல்லர்.

அவர் சீக்கிரத்தில் சாவர் என
மகாபாரதத்திற் கூறியது காண்க.[2]

(1) "அறத்தினீக்கப்பட்டமையின் அறன்கடை யென்றார்" என்று கூறி, அறன்கடை என்பதற்குக் காமங் காரணமாகப் பாவத்தின்கண் எனப் பொருள் கூறினர் பரிமேலழகர். அச்சொற்குக் காமத்தின்கண் எனவே பொருள் கூறினர் மணக்குடவர்.

(2) cf. परदारा न गन्तव्याः सर्ववर्णेषु कर्हिचित्।
नहीदृशमनायुष्यं लोके किञ्चन विद्यते ॥ [म.भा.अनु.161,21]

அறம்பொருளின்பங்களாய பயன் உயிர்
எய்தாமையின் பிணத்தோடொப்பர் என்பர்
உரைகாரர்களிருவரும். முன்னருள்ள சுலோகத்தில்
अनायुष्यं என்ற சொல்லை நோக்கின் சீக்கிரத்தில் சாவர்
என்பதே கருத்தாகலாம். அவர் நீண்டகாலம்
நரகத்திலுமிருப்பர் என்பதை

यः स्वदारान् परीत्यज्य पारक्यां सेवते स्त्रियम् ।
निरयान्नैव मुच्येत यावदाभूतसंप्लवम् ॥
[म.भा.आदि.103,7] என்ற சுலோகம் கூறும்.

மிக்க பெருமையுடையவன் அவ்வாறு இருப்பின் குற்றம் யாது எனின்,

**144**/**4** எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந் தேரான்[1] பிறனில் புகல்.[2]

போ. எனைத்துணையர் ஆயினும் = எவ்வளவு மேம்பட்டவராய் இருந்தாலும், பிறனில்புகல் = பிறன் மனைவியோடு சேர்தலான் உண்டாகும் குற்றத்தை, தினைத்துணையும் தேரான் = சிறிதளவும் ஆராயாதவன், என் ஆம், எவ்வாருக ஆவன்?

பிறனில்விழைதலான் வரும் பயன் யாது எனின்?

**145** எளிதேன வில்லிறப்பா னெய்துமேஞ் ஞான்றும்
**5** விளியாது நிற்கும் பழி.

போ. எளிது என, பிறனில் = பிறனுடைய மனைவியை, இறப்

பான் = நெறிகடந்து செல்பவன்,
என்ஞான்றும் = எப்பொழுதும்,
விளியாது நிற்கும் பழி = தீராது நிற்கும் நிந்தையை, எய்தும் =
அடைவான்.

பிறன் என்பது அதிகரித்தது.

மேலும்,

146 பகைபாவ[3] மச்சம் பழியென நான்கு
6 மிகவாவா மில்லிறப்பான் கண்.

போ.

பிறனில்லிறப்பான்கண் = பிறன்மனைவியிடத்தில் நெறிகடந்து செல்பவனிடத்தில், பகை பாவம் அச்சம் பழி என
நான்கும் = பகை பாவம் பயம் குற்றம் என்ற நான்கும், இகவா
ஆம் = நீங்காவாம்.

உண்மையான கிரஹஸ்தன் யார் எனின்,

147 அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்

7 பெண்மை நயவா தவன்.

எனைத்துணையர், தேரான் — ஒருமைபன்மைமயக்கம்; தேரான் என்பதை முற்றுவினையெச்சமாகக்கொண்டு, ஆம் என்பதைப் பிறனில் புகல் என்பதற்குப் பயனிலையாக்கினர் உரைகாரர்கள்.

2. பிறனில் புகல்—ஆகுபெயர்.

3. cf. पापम्.

## 68

போ. பிறனியலாள்பெண்மை = பிறன்மனைவியின் சேர்க்கையை, நயவாதவன் = விரும்பாதவனே, அறனியலான் = தர்மத்தின் இயற்கைப்படி, இல்வாழ்வான் = கிருஹஸ்தன், என்பான் = எனப்படுவான்.

மேலும் உண்மையான கிரஹஸ்தனிடம் யாது இருக்குமெனின்,

148 பிறன்மனை நோக்காத[1]
பேராண்மை சான்றோர்க்
8
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

போ. பிறன்மனை = பிறன்மனைவியை, நோக்காத = பாராத, பேராண்மை = பெருந்தன்மை, சான்றோர்க்கு

= மேலான இரஹஸ்
தர்களுக்கு; அறன் ஒன்றோ = தர்மமும், ஆன்ற
ஒழுக்கு = மேலான
ஒழுக்கமும், (ஆகும்.)
மேலும்,

149 [1]நலக்குரியார் யாரெனி னாமநீர்[3]
வைப்பிற்
9 [4]பிறற்குரியா டோடோயா தார்.

பொ. நலக்கு = நன்மைக்கு,
உரியார் = தகுந்தவர், யார்,
எனின் = என்று கேட்டால், நாமநீர்வைப்பில் =
அஞ்சத்தக்க நீரை
யுடைய கடல் சூழ்ந்த பூமியில்,
பிறற்குரியாடோள் தோயாதார் =
பிறன்மனைவியோடு புணராதார், (ஆவர்).

பல பாவச்செயல்களைச் செய்கின்றவன்
பிறனில்விழைதலைச்
செய்யலாமோ எனின்,

150 அறன்வரையா னல்ல செயினும்
பிறன்வரையாள்
10 பெண்மை நயவாமை நன்று.

பொ. (ஒருவன்), அறன் = தர்மத்தை,
வரையான் = செய்

யாது, அல்ல = பாவச்செயல்களை,
செயினும் = செய்தாலும், பிறன்
வரையாள்பெண்மை = பிறன் மனைவியோடு
சேர்தலை, நய
வாமை = விரும்பாமலிருத்தல், நன்று = நல்லது.

(1) நோக்காத — உட்கொள்ளாத (பரிமே.)
(2) "நலத்திற்கு என்பது நலக்கு எனக் குறைந்துநின்றது" என்பர் பரிமேலழகர். "குற்றிய லுகரக் கின்னே சாரியை" (தொல். எழுத். 158) என்ற சூத்திரத்தில் ஆசிரியர் தொல்காப்பியனார் வழக்கை நோக்கின், நகரவீற்றுச்சொல் அத்துச்சாரியை பெறுதும் இருத்தல் கூடும் என்பது அறியப்படும். நலக்குரியார் என்பதற்கு விரும்புதற்குரியார் எனப் பொருள் கூறினர் மணக்குடவர்.
(3) நினைத்தலைத் தருகின்ற நீர் (மணக்.)
(4) cf. परदारप्रयोक्तारस्ते वै निरयगामिनः [म.भा.अश्वमे॰106;89]

# 16 பொறையுடைமை.

பொறையுடைமை என்பதற்குப் பிறர் தமக்குச் செய்யுங் குற்றத்தைப் பொறுத்திருக்குந் தன்மையோடு இருத்தல் என்பது பொருள்.

பிறனில்விழையாமைக்கு எவ்வளவு மனவமைதி வேண்டுமோ அவ்வளவு மனவமைதி,

பிறன் தனக்குப் பெருந்தீங்கு செய்த பொழுது அதனைப் பொறுத்திருப்பதற்கு வேண்டுமாகலின் பிறனில்விழையாமைக்குப் பின்னர்ப்

பொறையுடைமையைக் கூறினர். பொறை என்ற பொருளில் பொறுத்தல், தகுதி என்ற சொற்களையும், பொறுத்தார் என்ற பொருளில் நோற்பார், நோற்கிற்பவர் என்ற சொற்களையும் வழங்கினர்.

தமக்குத் தீங்கு செய்தாரை பூமியைப்போல் பொறுக்கவேண்டும்; பொறுத்தலைக்காட்டிலும் அவர் செய்த தீங்கை மறத்தல் நன்று; அவர் செய்த தீங்கிற்காக அவரிடத்தில் தர்மமல்லாதவற்றைச் செய்யக்கூடாது; மிக்க தீங்கு செய்தாரைத் தன் பொறுமையால் வெல்லவேண்டும்; அஃதே நிறைந்த வலிமை; நடுவுநிலைமையைத் தவறாது வைத்துக்கொள்ள உதவும்; உலகம் அவ்வாறுள்ளவரைப் போற்றும்; எப்பொழுதும் புகழைத் தரும்; அவ்வாறு பொறுமையுள்ள இல்லறத்தார் துறவறத்தாரைக்காட்டிலும் பரிசுத்தமானவர்; தவஞ் செய்யும் முனிவரைக் காட்டிலும் அவர் பெரியவர் எனக் கூறினர்.

151/1 அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வாரைப் பொறுத்த றலை.[1]

பொ. அகழ்வாரை = தோண்டுபவரை, தாங்கும், நிலம் போல = பூமிபோல, தம்மை, இகழ்வாரை, பொறுத்தல், தலை = சிறந்தது.

பொறுத்தலைக் காட்டிலும் சிறந்தது உண்டோ எனின்,

**152/2** [1]பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று.

(1) cf தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்குஞ் செம்மல்
இக்குடிப் பிறந்தோர்க் கெண்மை (புறநா. 43, 18-9)
(2) பொறுத்த லிறப்பினை யென்றும் நன்று என்பது அறுவாதம்.

70

பொ. என்றும் = எப்பொழுதும், இறப்பினை = (பிறர் தமக்குச் செய்த) அடாத காரியத்தை, பொறுத்தல், நன்று . அதனை மறத்தல், அதனினும் = அதைக் காட்டி லும், நன்று = சிறந்தது.

தீங்கு செய்தவர்க்குத் தீச்செயலைச்

செய்யலாமா எனின்,

**153** திறனல்ல தற்பிறர் செய்யினு
[1]நோநொந்
**3** தறனல்ல செய்யாமை நன்று.

போ. தன் = தனக்கு, பிறர், திறனல்ல = செய்யத் தகாத காரியங்களை, செய்யினும் = செய்தாலும், (அவருக்கு அதனால் வரும்), நோ = வருத்தத்திற்கு, நொந்து = வருத்தப்பட்டு, அற னல்ல = தர்மமல்லாத காரியங்களை, செய்யாமை, நன்று = நல்லது.

தீங்கு செய்தாரை நாம் எதனால் வெல்லவேண்டும் எனின்,

**154** மிகுதியான் மிக்கவை
செய்தாரைத் தாந்தந்
**4** தகுதியான் வென்று விடல்.[2]

போ. மிகுதியான் = செல்வம் முதலியவற்றின் அதிகத்தால், மிக்கவை = அக்கிரமமான காரியங்களை, செய்தாரை, தாம், தம் = தம்முடைய, தகுதியான் = பொறுமையால், வென்றுவிடல் = வெல்ல வேண்டும்.

*அதன் பயன் மறத்தல் அதனைக்காட்டிலும் நன்று எனத் தாரதம்யம் காட்டு*

*வது ஆகும். அவ்வாறு கூறாது அதனை மறத்தல் நன்று எனக் கூறியிருப்பின், 'நன்றல்ல தன்றே மறப்பது நன்று' (குறள் 108) என்றவிடத்துக் கூறியதையே ஈண்டும் ஆசிரியர் கூறினர் எனக் கொள்ளவேண்டியிருக்கும்.*

(1) *அவற்றைத் தொகுத்து (மணக்.)*

*தானுஞ் செய்தால் அவர்க்கு உளதாம் நோவுக்கு*

(2) cf. यः परेषां नरो नित्यमतिवादांस्तितिक्षते ।
देवयानि विजानीहि तेन सर्वमिदं जितम् ॥
[म.भा.आदि.73,1]



*அவ்வாறு பொறுத்தலை எவ்வாறு கருதலாம் எனின்,*

**155** [1]இன்மையு ளின்மை
[2]விருந்தொரால் வன்மையுள்
**5** வன்மை [3]மடவார்ப் பொறை.

பொ. *மடவார்ப்பொறை = மூடர்களின்*

அக்கிரமச்செயல்களைப் பொறுத்தல்,
வன்மையுள்வன்மை = சிறந்த வலிமை, (ஆகும்).
விருந்து ஒரால் = (அவற்றை) அறியாமை,[4]
இன்மையுள் இன்மை = கீழ்ப்பட்ட வலியின்மை,
(ஆகும்.)

பிறர் நமக்குச் செய்யும் தீச்செயல்களை அறியாது இராமல், அறிந்து அவற்றைப் பொறுத்தல்வேண்டும் என்பது கருத்து.

பொறுமையின் பயன் யாது எனின்,

**156** நிறையுடைமை நீங்காமை
வேண்டிற் பொறை
**6** போற்றி [5]யொழுகப் படும்.
[யுடைமை

பொ. நிறையுடைமை = நடுவுநிலையிலிருந்து, நீங்காமை = நீங்காமையை, ஒருவன், வேண்டின், பொறையுடைமை = பொறுத்தலை, போற்றி, ஒழுக = நடத்தல், படும் = பொருந்தும்.

மேலும்,

**157** ஒறுத்தாரை யொன்றாக வையாரே

வைப்பர்
7 பொறுத்தாரைப் பொன்போற்
பொதிந்து.[1]

போ. (உலகத்தார்),
பொறுத்தாரை=பொறுமையுடையாரை,
பொன்போல், பொதிந்துவைப்பர்

=சேர்த்துவைத்துப் போற்றுவர்.

(1) இன்மை=வலியின்மை (மணக்.); வறுமை (பரிமே.)
(2) விருந்து=புதுமை = கேட்டறியாதது; ஓரால் = நீக்காமை பொறுமை (மணக்.) விருந்தினர்; ஓரால்=நீக்குதல் (பரிமே.) விருந்தொராலை உடைமையுளின்மையாக (குறள் 90)க்கூறிய ஆசிரியர் அதனை இன்மை புளின்மையாகக் கூறுவாரா என்பது ஆராய்தற்குரியது,
(3) மடவார்—ஆகுபெயர்.
(4) விருந்து ஓரால்=கேட்டறியாததை நீக்காமை=கேட்டறியாததோடு இருத்தல்=அறியாமை.
(5) ஒழுக என்பது படும் என்பதற்கு எழுவாயாகும். இவ்வாறு வினையெச்சங்கள் தொழிற்பெயர்ப்பொருளில் வருதல் பல மொழிகளிலும் காணலாம். cf. *To walk is healthy.*
(7) cf. பொறையெனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்
(கலித். 133,14)

72
ஒறுத்தாரை=(பொறுக்காமல் தீங்கு செய்தாரை)த் தண்டித்தவரை, ஒன்று ஆக=ஒரு பொருள் ஆக, வையார்=மதிக்கமாட்டார்.

மேலும்,

**158**
**8**

ஒருத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
[1]பொன்றுந் துணையும் புகழ்.

பொ. ஒருத்தார்க்கு = தண்டித்தவர்க்கு, ஒரு நாளை = ஒருநாளைக்கே, இன்பம், ஆகும். பொறுத்தார்க்கு, நிலம் = உலகு, பொன்றுந்துணையும் = அழியும்வரை, புகழ், (ஆகும்).

நிலம் என்பது முதற் குறளிலிருந்து அதிகரித்தது.

மேலும்,

**159** துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
**9** யின்னாச்சொ னோற்கிற் பவர்.

பொ. இறந்தார்வாயின்னாச்சொல் = நெறியைக் கடந்தவரின் வாயிலிருந்து வரும் கடுஞ்சொற்களை, நோற்கிற்பவர் = பொறுப்பவர், துறந்தாரின் = துறந்தார்போல,

தூய்மை = பரிசுத்தத்தை, உடை யர் = உடையவர் (ஆவர்).

மேலும்,

**160**

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
10 மின்னாச்சொ னோற்பாரின் பின்.

பொ. பிறர், சொல்லும், இன்னாச்சொல் = கடுஞ்சொற்களை, நோற்பாரின் பின் = பொறுத்தவர்க்கு அடுத்தபடி தான், உண்ணாது = சாப்பிடாது, நோற்பார் = தவஞ்செய்வார், பெரியர், (ஆவர்).

(1) தாம் சாமளவும் (மணக்.) உலகமழியுமளவும் (பரிமே.). நிலம் என்பதை அநுசரித்ததாகக் கொள்ளலாமாகலின், '' உலகென்னுஞ் சொல் வருவிக்கப்பட்டது'' என்ற பரிமேலழகர்தொடர் ஆராய்தற்குரியது.

---

## 17. அழுக்காறாமை.

அழுக்காறுமை என்பதற்குப் பொறுமையின்மை என்பது பொருள்.

பிறர் தமக்குச் செய்யுந் தீங்கைப் பொறுத்தல் எவ்வாறு சிறந்ததோ அவ்வாறே பிறர் செல்வம், மக்கள், கல்வி முதலியவற்றால் தம் மைக்காட்டிலும் மேலானவராய் இருப்பின் அவரைக்கண்டு பொறு மைப்படாமல் இருப்பதுஞ் சிறந்ததாகையால், ்பின் பின்னர் அழுக்காறுமையைக் கூறினர்.

பொறையுடைமை

அழுக்காறு என்ற பொருளில் அவ்வியம் என்ற சொல்லையும் அழுக்காறுமை என்ற பொருளில் அழுக்காறிலாதவியல்பு, அழுக் காற்றினன்மை என்ற சொற்களையும் வழங்கினர்.

ஒருவன் அழுக்காறுமையைத் தர்மமார்க்கமாகக் கொள்ளவேண்டும்; அவன் அடையக்கூடிய பொருள்களுள் அதற்கு ஒப்பானது வேறு ஒன்றும் இல்லை; அழுக்காறு அவனுக்கு அறத்தையும் ஆக் கத்தையுங் கொடுக்காது; அது ஒன்றே அவனுக்குக் கேட்டைத் தருவதற்குப் போதும்; அவனைவிட்டு இலக்குமி நீங்கித் தமக் கையை நெருங்கச் செய்வாள்; அது

அவனுடைய செல்வத்தையும் மறுமையின்பத்தையும் கெடுக்நம் ; ஒருவனுக்கு மற்றொருவன் கொடுக்கும் பொருளைக்கண்டு பொறுமைப்படுகிறவனுடைய பந் துக்கள் உடுப்பதற்குத் துணியும், உண்பதற்குச் சோறும் இல்லாது அழிவர் ; பொறுமையால் பெரியார் ஆனவரும் பொறுமையின்மையால் பெருமையை விட்டு நீங்கியவரும் இல்லை ; பொறுமையுடையோன் நல்ல நிலையிலும், பொறுமையில்லாதவன் கெட்டநிலையிலும் இருப்பின் அதற்குக் காரணம் ஆராய்ந்து அறியவேண்டும் ; அழுக் காற்றினல் விளையும் தீ ங்கை நினைத்து, அதனுல் பாவச்செயல்களை நல்லோர் செய்யார்; எனக் கூறி முடித்தனர்.

**161**
**1**

ஒழுக்காறுக் கோள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு.

பொ. ஒருவன், தன் = தன்னுடைய, நெஞ்சத்து = மனத்தில், அழுக்காறிலாத வியல்பு = பொறாமையின்மையை, ஒழுக்காறு ஆக = தர்மமார்க்கமாக, கொள்க = கொள்ளவேண்டும்.

ஏன் அவ்வாறு கொள்ளவேண்டும் எனின்,

162 விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு

2 மழுக்காற்றி னன்மை பெறின்.

பொ. (ஒருவன்), யார்மாட்டும் = எவரிடத்தும், அழுக்காற்றி னன்மை = பொறாமையின்மையை, பெறின் = அடைந்தால், விழுப் பேற்றின் = அடையப்படும் சிறந்த பொருள்களுள், ஒப்பது = ஒத்த பொருள், இல்லை.

அஃது = அதனை,

ஒருவன் என்பது அதிகரித்தது.

அழுக்காறு இருப்பின் யாது நிகழும் எனின்,

163 [1]அறனாக்கம் வேண்டாதா னென்பான்

3 பேணு தழுக்கறுப் பான்.

[பிறனுக்கம்

பொ. *பிறனுக்கம் = பிறனுடைய ஆக்கத்தை,*
*பேணுது = மதிக்*
*காமல், அழுக்கறுப்பான் = பொறாமையோடு*
*கூடியிருப்பவன்,*
*அறன் = தர்மத்தாலுண்டாகும்*
*மறுமைப்பயனையும், ஆக்கம் =*
*செல்வம் முதலிய இம்மைப்பயனையும்,*
*வேண்டாதான் என்பான் =*
*வேண்டாதவன் என்று கூறப்படுவான்.*

*பொறாமையுள்ளவனுக்கு இம்மை மறுமை*
*இரண்டிலும் சிறப்பு*
*இல்லை யென்பது கருத்து.*

*கேடும் விளைவிக்குமோ எனின்,*

**164**

**4**

அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.[2]

பொ. *அழுக்காறு = பொறாமையை,*

உடையார்க்கு = உடைய

வர்க்கு, ஒன்னார் = பகைவர், கேடு = கேட்டினை, ஈன்பது = உண்டு

(1) அறனாகிய வாழ்வு (மணக்.)

(2) ஈன்பது ஏழாம் வேற்றுமை (தொல். சொல். 105). இரண்டாம் வேற்றுமையாகவுங் கொள்ளல் தகும். "ஒன்னார் வழுக்கியுங் கேடீன்பது" என்பதற்கு அழுக்காறு பகைவரை யொழிந்துங் கேடு பயப்பதொன்றாகலின்" என உரைகூறினர் பரிமேலழகர். அவ்வாறு கொள்ளின் 'வழுக்கியும்' என்றவிடத்து உம்மை சிறக்காது.

75

பண்ணுவதின்கண், வழுக்கியும் = தவறினாலும், அது = அவ்வழுக் காறே, கேடு ஈன்பது = கேட்டினைத் தருவதின்கண், சாலும் = போதும்.

கேடீன்பது என்பது இருமுறை அந்நுவயிக்கப்பட்டது.

மேலும் என்ன நிகழும் எனின்,

165 அவ்வித் தழுக்கா றுடையானைச்

செய்யவ

5 டவ்வையைக் காட்டி விடும்.

பொ. அழுக்காறு உடையானை = பொறுமையுடையவனை, செய்யவள் = இலக்குமி, அவ்வித்து = பொறுக்காது, (அவனுக்கு), தவ்வையை = தமக்கையை, காட்டி = நெருங்கும்படி செய்து, விடும் = நீங்குவாள்.

மேலும்,

166 [1]அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
6 தீயுழி யுய்த்து விடும்.

பொ. அழுக்காறு என = பொறுமை யென்று சொல்லப்படு கின்ற, ஒரு பாவி = ஒப்பில்லாத பாவி, திரு = ஐசுவரியத்தை, செற்று = போகச்செய்து, தீயுழி = நரகத்தின்கண், உய்த்துவிடும் = செலுத்தும்.

மேலும்,

167 கொடுப்ப [2]தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
7 முண்பதூஉ மின்றிக் கெடும்.

போ. கொடுப்பது = (ஒருவன் மற்றொருவனுக்குக்) கொடுப்பதை, அழுக்கறுப்பான் சுற்றம் = பொறாமைப்படுகின்றவனுடைய பந்துக்கூட்டம், உடுப்பதும் = உடுக்குந் துணியும், உண்பதும் = உண்ணும் உணவும், இன்றி = இல்லாமல், கெடும் = அழியும்.

(1) திருவைப்போக்கித் தீயுழியுய்க்குந்தன்மை அழுக்காறு, பாவி இவ்விருவரிடமும் இருத்தலின், பண்பாகிய அழுக்காற்றினைப் பண்பியாகிய பாவியோடு உருவகப்படுத்தினர்.

(2) அழுக்காற்றினாலே விலக்குமவனது சுற்றம் (மணக்.)

---

## 76

### பொறாமையால் மேன்மையடைந்தவர்

உண்டோ எனின்,

$$\frac{168}{8}$$

அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

போ. அழுக்கற்று
மேன்மையடைந்தவரும்,

= பொறுமைகொண்டு, அகன்றாரும் =
இல்லை. அஃது இல்லார் = பொறுமையைக்

கொள்ளாதவர், பெருக்கத்தின் = நல்லநிலையிலிருந்து,
நீங்கியவரும், இல் = இல்லை.

தீர்ந்தாரும் =

பொறுமைகொண்டவர் நல்ல நிலையிலும், பொறுமையில்லாதவர் கெட்ட நிலையிலும் காணப்படுகின்றனரே, அதற்குக் காரணம் யாது எனின்,

**169** அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ்

செவ்வியான்
**9** கேடு நினைக்கப் படும்.

போ. அவ்வியநெஞ்சத்தானாக்கமும்
மனத்தையுடையவனது ஐசுவரியமும்,

= பொறுமைகொண்ட
செவ்வியான் கேடும் =
பொறுமையில்லாதவனுடைய கெட்ட நிலையும்,
ஆராயப்படும்.

நினைக்கப்படும் = அவ்வாக்கத்திற்கும்

கேட்டிற்கும் பொருமையும் பொருமை யின்மையுங் காரணம் ஆகா; முற்பிறப்பிற் செய்த பயன்களே ஆகும் என்பது கருத்து.

செயல்களின்

ஆகலின்,

**170**
**10**

அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து.

பொ. (நினைப்பவர்) = ஆராய்வோர், இழுக்காற்றின் = அக் கெட்டவழியினால், ஏதம் படுபாக்கு = தீமை வருதலை, அறிந்து, அழுக்காற்றின் = பொருமையால், அல்லவை = தீச்செயல்களை, செய் யார் = செய்யமாட்டார்.

நினைக்கப்படும் என்றதிலிருந்து

நினைப்பவர் என்பது பெறப்

படாது.

# 18. வெஃகாமை[1]

வெஃகாமை என்பதற்குப் பேராசையின்மை அல்லது பிறர் பொருளுக்கு ஆசைப்படாமை என்பது பொருள். பொறாமை பேராசையைக் கொண்டுவிடுமாகலான், அழுக்காறுமையின் பின்னர் வெஃகாமையைக் கூறினர்.

நடுவுநிலையிலிருந்து தவறி பிறர்பொருளைக் கொள்ள ஒருவன் ஆசைப்பட்டால், அது அவனுக்குப் பல துன்பங்களைக் கொண்டு வருவதுடன் அவன் குடியையும் கெடுக்கும்; தர்மமார்க்கத்திலுள்ளவனும், பிறர்பொருளைக் கொள்ள ஆசைப்பட்டு தீச்செயல்களைச் செய்யின் கெடுவான்; அவ்வாறு தீச்செயல்களைச் செய்கின்றவன் எவ்வளவு நூல்களைப் படித்திருந்தபோதிலும்

அவனறிவு பயனில்லை;
நடுநிலையிலிருந்து தவறாதவர்
பிறர்பொருளுக்கு ஆசைப்பட்டு
தீச்செயல்களைச் செய்யார்; பேரின்பம்
வேண்டுபவர் சிற்றின்
பத்தை நீக்கி அதர்மமான செயல்களைச் செய்யார்;
இந்திரியங்களை அடக்கியவர் வறுமையிலும்
பிறர்பொருளை வெஃகார்; பிறர்
பொருளிற்கு ஆசைப்படுதல் தீயபயனை
விளைவிக்கின்றமையால் அத
னால் வரும் ஆக்கத்தை விரும்பவேண்டாம்;
வெஃகாமையே தன்
செல்வத்தின் குறையாமைக்குக்
காரணம் ஆகும்; வெஃகாமையே
தர்மமென்று அறிந்தாரிடத்தில் இலக்குமி தானே வருவாள்;
வெஃகுதல் மரணத்தையும் வெஃகாமை வெற்றியையும் கொடுக்கும்;
எனக் கூறி முடித்தனர்.

**171** நடுவின்றி நன்பொருள் வெஃகிற்
குடிபொன்றிக்[2]
**1** குற்றமு மாங்கே[3] தரும்.

பொ. (ஒருவன்), நடு இன்றி = நடுநிலையிலிருந்து நீங்கி, நன் பொருள் = (பிறர்க்குரிய) நல்ல பொருளை, வெஃகின் = விரும்பினால்,

(1) cf. अभिद्रोहोऽभ्यसूयाच परार्थेषु च वै स्पृहा ।

एवमाधशुभं कर्म मनसा पापमुच्यते ॥ [म.भा.अनु.231,8,9]

(2) பொன்றி—பிறவினைப் பொருளில் வந்தது; அவ்வாறு கொள்ளின் "பொன்றவென்பது பொன்றி யெனத் திரிந்து நின்றது; செய்து என்பது சொல்லெச்சம்" என்ற பரிமேலழகர்தொடர் வேண்டுவதின்று. சிவஞானமுனிவர்கருத்தும் அதுவேயாகும்.

(3) ஆங்கே=அவ்விடத்தே (மணக்.)

78

(அது), குடி=(அவனுடைய) குடியை
பொன்றி=கெடுத்து,
ஆங்கே=அப்பொழுதே,
குற்றமும்=துன்பங்களையும், தரும்=
கொண்டுவிடும்.

அருளை அடைவதற்காகப் பிறன்பொருள் வெஃகினும் குற்
றமோ எனின்,

2

அருள்வெஃகி [1]யாற்றின்க ணின்ருன்[2] பொருள்
பொல்லாத சூழக் கெடும். [வெஃகிப்

பொ. அருள்=அருளை, வெஃகி=விரும்பி, ஆற்றின் கண் நின்ருன்=தர்மவழியில் இருப்பவனும், பொருள் = (பிறனுடைய) பொருளை, வெஃகி=விரும்பி, பொல்லாத=பாவச்செயல்களை, சூழ=நினைக்க, கெடும்=கெடுவான்.

வெஃகுவானுக்குப் படிப்பால் பயன் உண்டோ எனின்,

173
3

அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

பொ. (ஒருவன்), பொருள்=பொருளை, வெஃகி=விரும்பி, யார்மாட்டும் = எவரிடத்திலும், வெறிய = கடுஞ்செயல்களை; செயின்=செய்தால், அஃகி அகன்ற அறிவு=நுணுக்கமாய்ப் பறந்து செல்லும் அறிவு, என் ஆம்=என்ன ஆகும்?

ஒரு பயனையுந்
தாராது என்பது கருத்து.

பொருள் என்பது அதிகரித்தது.

வெஃகி தீச்செயல்களை யார் செய்யார்

எனின்,

**174**
**4**
படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.

பொ. நடுவன்மை = நடுநிலையின்மையை, நாணுபவர் = அஞ்சுபவர், படுபயன் = வருகின்ற பயனை, வெஃகி = விரும்பி, பழிப்படுவ = பழியோடு பொருந்திய செயல்களை, செய்யார் = செய்யமாட்டார்.

(1) அறநெறியில் (மணக்.) இல்லறத்தின்கண் (பரிமே)
(2) உம்மை தொக்கது.

79

பின்னரும் யார் செய்யார் எனின்,

**175** சிற்றின்பம் வெஃகி யறனல்ல

செய்யாரே
5 மற்றின்பம் வேண்டு பவர்.

பொ. மற்றின்பம்=பேரின்பத்தை (மோக்ஷத்தை), வேண்டு பவர்=வேண்டுகின்றவர், சிற்றின்பம்=சிற்றின்பத்தை, வெஃகி= விரும்பி, அறனல்ல=பாபச்செயல்களை, செய்யார்=செய்யமாட்டார் (ஏ—அசை).

இன்னும் யார் செய்யார் எனின்,

**176**
**6**

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

பொ. புலம்=இந்திரியங்களை, வென்ற=அடக்கிய, புன்மையில்காட்சியவர்=குற்றமற்ற அறிவையுடையவர், இலம் என்று= தாம் ஏழை என்று, பொருள்=பொருளை, வெஃகுதல்=பேராசைப் படுதலை, செய்யார்=செய்யமாட்டார்.

பொருள் என்பது அதிகரித்தது.

ஆகலின் வெஃகுதலால் வரும் ஆக்கத்தை

விரும்பலாமா எனின்,

**177** வேண்டற்க வெஃகியா மாக்கம்
விளைவயின்

**7** மாண்டற் கரிதாம் பயன்.[1]

பொ. பொருள் = (பிறனுடைய) பொருளை, வெஃகி = விரும்பி, ஆம் = ஆகும், ஆக்கம் = ஆக்கத்தை, (ஒருவன்); வேண்டற்க = விரும்பவேண்டாம். (ஏனெனில்), (அவ்வெஃகுதல்), பயன் = பயனை, விளைவயின் = தருங்கால், மாண்டற்கு = மாட்சிமைப்படுதற்கு, அரிது ஆம் = இல்லை ஆகும்.

பொருள் என்பது அதிகரித்தது.

(1) பின்னனுபவிக்குங்கால் அவ்வாக்கத்தின் (பரிமே.)

பயன் நன்றாதலில்லை.

80

வெஃகாமையின் பயன் யாது எனின்,

178

அஃகாமை[1] செல்வத்திற் கியாதெனின்
8 வேண்டும் பிறன்கைப் பொருள்.
[வெஃகாமை

பொ. செல்வத்திற்கு, அஃகாமை = சுருங்காமலிருத்தற்குக் காரணம், யாது எனின், பிறன், வேண்டும் = விரும்பும், கைப் பொருள் = கைப்பொருளை, வெஃகாமை = விரும்பாமை, (ஆகும்).

மேலும்,

179
9

அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு.

பொ. அறன் = தர்மத்தை, அறிந்து, வெஃகாவறிவுடையர், பிறர்பொருளை விரும்பாத அறிவையுடையவரை, திரு = இலக்குமி, திறன் = தகுதியை, அறிந்து, தானே அடைவாள்.

ஆங்கே = அப்பொழுதே, சேரும் =

ஆகலின்,

**180**

**10**

இறலீனு மெண்ணாது வெஃகின் 'விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு.[3]

பொ. எண்ணாது = ஆராயாமல், (ஒருவன்) வெஃகின் = (பிறர் பொருளை) ஆசைப்பட்டால், (அது), இறல் = கேட்டை, ஈனும் = தரும். வேண்டாமை என்னும் செருக்கு = வெஃகாமை என்னும் பெருமிதம், விறல் = சிறப்பை, ஈனும் = தரும்.

(1) அஃகாமை—ஆகுபெயர்.
(2) விறல் = வெற்றி (பரிமே.)
(3) செருக்கு—ஆகுபெயர் (பரிமே.)

---

# 19. புறங்கூறாமை



புறங்கூறாமை[1] என்பதற்கு ஒருவர் இல்லாதவிடத்தில் அவரைப்பற்றிக் குற்றங் கூறாமலிருத்தல் என்பது பொருள்.

ஒருவனுடைய போஷை மற்றவர்களை ஒருவர்க்கொருவர் பகைவராக்குவதற்கு அவர்களைப்பற்றிப் புறங்கூறச் செய்யும். ஆகவின் வெஃகாமையின் பின்னர் புறங்கூறாமையை ஆசிரியர் கூறினர்.[2]

புறங்கூற்று என்ற பொருளில் முன்னின்று பின்னோக்காச் சொல்[3] என்பதை வழங்கினர்.

ஒருவன் தர்மமில்லாத காரியங்களைச் செய்தாலும் புறங்கூறான் எனப் பெயரெடுத்தல் சிறந்தது; எதிரில் நகைத்து புறத்தில் தூற்றுதல் தீச்செயல்களைச் செய்தலைக்காட்டிலும் தீது; புறங்கூறி வாழ்தலைக்காட்டிலும் இறத்தல் நல்ல பயனைத் தரும்; எதிரில் ஒருவன் தாக்ஷிண்யமில்லாமற் பேசினும் அவனைப் புறங்கூறாது இருத்தல் வேண்டும்; ஒருவனது புறங்கூறுந்தன்மையால் அவன்மனம் தர்ம மார்க்கத்தில் இல்லை என்பது அறியப்படும்; பிறனைப் புறங்கூறுவான் தானும் புறங்கூறப்படுவான்; சந்தோஷம் உண்டாகுமாறு சொல்லி நட்போடிருக்கும் தன்மையை அறியாதவர்

புறஞ் சொல்லி நட்பினரைப் பிரிப்பர்;
நட்பினரைப் புறங்கூறுபவர் அயலாரை எதுதான்
செய்யமாட்டார்; புறங்கூறுபவனுடைய
பாரத்தைத் தன் கடமை என்றே பூமி
பொறுக்கின்றுளோ; பிறர்குற்றத்தைக் காண்பவன்
தன் குற்றத்தையுங் கண்டால் அத்தீச்செயலைச்
செய்ய மாட்டான்; எனக் கூறி முடித்தனர்.

**181** [4]அறங்கூறு னல்ல செயினு
மொருவன்
1 புறங்கூறு [5]னென்ற லினிது.

(1)புறங்கூறுதல்என்பதும் பைசுன்யம்என்பதும் ஒருபொருட்கிளவி,
(2) மொழிக்குற்றம் மனக்குற்றமடியாக வருதலான், இஃது அழுக்காறுமை வெஃகாமைகளின் பின் வைக்கப்பட்டது. (பரிமே.)
(3) முன்னே நின்று எதிர்முகம் நோக்கவொண்ணுத சொல். (மணக்.) எதிர் இன்றிப் பின்வருங் குற்றத்தை நோக்காத சொல். பின் ஆகுபெயர். சொல்வான்றெழில் சொன்மேலேற்றப்பட்டது (பரிமே.) எதிரில் இல்லாது பின்னர் அவனுல் நோக்கப்படாத சொல் எனக் கூறின் அமையும்.
(4)
(5)

11

அறனென்று சொல்லுவதுஞ் செய்யாது (பரிமே.)
என்றல்—செயப்பாட்டுவினைப்பொருளில் வந்தது.

போ. ஒருவன், அறம் = தர்மத்தை, கூறான் = (பிறர்க்குச்)
சொல்லாமல், அல்ல = பாவச்செயல்களை, செயினும் = செய்தாலும்,
புறங்கூறான் = புறங்கூறமாட்டான், என்றல் = என்று சொல்லப்
படுதல், இனிது = சிறந்தது.

புறங்கூறாமை தீச்செயல்களைச்
செய்வதைக்காட்டிலும் சிறந்த
தாயினும், புறங்கூறுதல் அவற்றைச் செய்வதினும்
தீதா எனின்,

182 அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
2 புறனழீஇப் பொய்த்து நகை.

போ. (ஒருவன்), அறன் = தர்மத்தை, அழீஇ = இல்லை
என்று கூறி, அல்லவை = அதர்மச்செயல்களை, செய்தலின் = செய்
தலைக்காட்டிலும், புறன் = (மற்றொருவனது) பின்புறத்தில்,
அழீஇ = குற்றங்கூறி, பொய்த்து நகை = (எதிரில்) பொய்யாகச்
சிரித்தல், தீது = கெட்டது (ஏ—அசை).

ஒருவன் என்பது அதிகரித்தது.

புறங்கூறி வாழ்தல் சிறந்ததா இறத்தல் சிறந்ததா எனின்,

**183**
**3**

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத[1]
[2]லறங்கூறு மாக்கந் தரும்.[3]

போ. ஒருவன், புறங்கூறி, பொய்த்து = எதிரில் பொய்யாக நடித்து, உயிர்வாழ்தலின் = உயிரோடு இருப்பதைக்காட்டிலும், சாதல் = இறத்தல், அறம் = தர்மநூல்கள். கூறும் = சொல்லும், ஆக்கம் = நன்மையை, தரும்.

ஒருவன் என்பது அதிகரித்தது, நம்மைக் கடுமையாகப் பேசியவனைப் புறங்கூறலாமா எனின்,

**184** கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ்
**4** [4]முன்னின்று பின்னோக்காச்

(1) சாதல்—நல்குரவினுற் சாதல் (மணக்.)
(2) அறம்—ஆகுபெயர்.
(3) தரும்—தொல்காப்பியனுர்கொள்கைக்கு மாறுபாடாகப் படர்க்கைக்கண் வந்தது. (தொல். சொல். 29)
(4) முன்னின்று =முன் நின்று (மணக்.); முன் இன்று (பரிமே.) இன்றி என்பது இன்று ஆகத் திரிந்தது (தொல் எழுத். 238)
பின்னேக்காச்சொல் — எதிர்முகம் நோக்கவொண்ணுத சொல் (மணக்.) பின்வருங்குற்றத்தை நோக்காத சொல் (பரிமே.)

## 83

பொ. ஒருவன், கண் =(மற்றொருவன்) எதிரில், நின்று=

இருந்து, கண்அற = தாக்ஷிண்யமில்லாமல, சொல்லினும்=சொன்னுலும், முன்னின்று பின்னோக்காச் சொல்= புறங்கூற்றை, சொல் லற்க=சொல்லாமல் இருத்தல்வேண்டும்.

ஒருவன் என்பது அதிகரித்தது.

ஒருவன் தர்மத்தைச் சொல்லினும் புறங்கூறுவான் ஆயின் அவன்மனம் தர்மமார்க்கத்தில் இல்லை என்பது எதனுல் அறியப் படும் எனின்,

**185** அறஞ்சொல்லு நெஞ்சத்தா
னன்மை[1] புறஞ்
**5** புன்மையாற் காணப் படும்.
[சொல்லும்

பொ. *அறஞ்சொல்லுநெஞ்சத்தானன்மை = தர்மத்தைச் சொல்லுகின்றவனின் மனத்தின் நன்மை, புறஞ்சொல்லும் புன்மை யான் = புறங்கூறும் அற்பத்தனத்தால், காணப்படும் = அறியப்படும். (நன்மை என்பது நன்மை-யின்மையைக் குறிக்கும்).*

*பிறனைப் புறங்கூறுபவனுக்கு ஏதேனுங் கேடு உண்டோ எனின்,*

**186**
**6**

பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
[2]திறன்றெரிந்து கூறப் படும்.

பொ. *பிறன்பழி = பிறனுடைய குற்றத்தை, புறம் = புறத் தில், கூறுவான் = கூறுபவன், தன்பழியுள்ளும் = அவன் குற்ற ங்க*

ளுள்ளும், திறன் = நன்ருக, தெரிந்து = ஆராயப்பட்டு, படும் = புறங்கூறப்படுவான்.
புறம் கூறப்

புறம் என்பது முற்கூறளிலிருந்து இருமுறை அதிகரித்தது

புறங்கூறுவான் யாது செய்வான் எனின்,

**187** பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி நட்பாட றேற்ரு தவர்.[3] **7**

(1) அன்மை எனப் நன்மை எனப்பிரித்து, அது

பிரித்தனர் மணக்குடவரும் பரிமேலழகரும். எதிர்மறைப்பொருளை உணர்த்திற்று எனக் கொள்ளல் தகும். "அறத்தை நினைக்கின்ற மனமுடையனல்லாமை" (மணக்.) "அறனை நன்றென்று சொல்லினும், அது தன்மனத்தாலுச் சொல்லுகின்றானல்லன் என்பது" (பரிமே.)

(2) திறன் — வேறுபட (மணக்.) திறமுடையவற்றை (பரிமே.)

(3) கேளிரையும் பிரிப்பரென்ற கருத்தான் அயலாரோடும் என்பது வருவித்துரைக்கப்பட்டது. (பரிமே.)



பொ. நக = சந்தோஷப்படுமாறு, சொல்லி = பேசி,

நட்பாடல், சினேகிதரோடு உறவாடுவதை, தேற்றுதவர் = அறியாதவர், பக = பிளவு உண்டாகுமாறு, புறஞ்சொல்லி = புறங்கூறி, கேளிர் = நண்பரை, பிரிப்பர் = பிரித்துவிடுவர்.

புறம் என்பது அதிகரித்தது.

நட்பினரைப் புறங்கூறுவார் மற்றும் யாது செய்வார் எனின்,

**188** துன்னியார் குற்றமுந் தூற்று மரபினு

8 [1]ரென்னைகொ லேதிலார் மாட்டு.

பொ. துன்னியார்குற்றமும் = நண்பர்களின் குற்றத்தையே, புறம் தூற்றும் மரபினர் = புறத்தில் தூற்றுகின்ற தன்மையை உடையவர், ஏதிலார்மாட்டு = அயலாரிடத்தில், என்னைகொல் = எதுதான் (செய்யார்)?

புறம் என்பது அதிகரித்தது.

புறங்கூறுபவனை என் பூமி பொறுத்திருக்கின்றது எனின்,

**189**
**9**

அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை.

பொ. வையம் = பூமி,
புறனோக்கிப் புன் சொ ல்லுரைப்பான்
பொறை = புறங்கூறுவானுடைய பாரத்தை, அறன்
நோக்கி = (தன் னுடைய) தர்மம் எனக் கருதி,
ஆற்றுங்கொல் = பொறுக்கின்றதோ?

எவன் புறங்கூறுன் எனின்,

190/10 ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங்
காண்கிற்பிற் றீதுண்டோ மன்னு முயிர்க்கு.

பொ. உயிர் = மக்கள், ஏதிலார்குற்றம்போல் = பிறர்குற்றங்களைப்போல், தங்குற்றம் = தம்முடைய குற்றங்களை,
காண்கிற்பின் = கண்டுணர்ந்தால், மன்னும் உயிர்க்கு = நிலைபெறும் மக்கட்கு, தீது = புறங்கூறுதல் என்ற தீச்செயல், உண்டோ? (இல்லை என்பது கருத்து)

(1)
லெச்சம்.

பாஞ்ஞனஞ் செய்வரோ (மணக்.) செய்வது என்பது சொல் என்னர்கொல் என்று பாடமோதி எவ்வியல்பினாரவர் என் றுரைப்பாரு முளர். (பரிமே.)

(2) புறங்கூறலாகிய தங்குற்றம் (பரிமே.)

(3) தீது=தீமை (மணக்.) துன்பம் (பரிமே.)

# 20.
## பயனில்சொல்லாமை[1]

---

பயனிலசொல்லாமை என்பதற்குத் தமக்கும் பிறர்க்கும் பய னில்லாதவற்றைக் கூறுதிருத்தல் என்பது பொருள்.

சொற்குற்றம் நான்கனுள்[2] ஒன்று புறங்கூறுதல், மற்றொன்று பயனிலகூறுதல். ஆகலின் புறங்கூறாமையின் பின்னர் பயனில சொல்லாமையைக் கூறினர்.

பலரும் வெறுக்குமாறு பயனில்லாத

சொற்களைக் கூறுவான்
எல்லாராலும் இகழப்படுவான்; அவ்வாறு
அவற்றைக் கூறுதல் நண்ப
ரிடத்தில் அவர் விரும்பாத செயல்களைச்
செய்தலினுந் தீது; அஃதே
அவன் நீதியிலன் என்பதை அறிவிக்கும்;
அஃது அவனை நற்
குணங்களினின்றும் நீக்கும்; ஆகலின் அவனை
மகன் எனக் கூறாமல்
மக்களுள் பதர் எனக் கூறல்வேண்டும்; சான்றோர்
பயனிலவற்றைக்
கூறின் புகழையும் வீடுபெறுதலையும் இழப்பர்
; அவர் பெரும்
பயனில்லாதவற்றைக் கூறார்; அவற்றை
மறந்துங்கூறார்; அவர்
ஒருக்கால் நயனில்லாதவற்றைக் கூறினும் கூறல்
தகும், பயனில்லாத
வற்றைக் கூறாமலிருத்தல் வேண்டும்; சொன்னால்
பயனுடையவற்
றைக் கூறுக பயனில்லாதவற்றைக் கூறாமலிருக்க;
எனக் கூறினர்.

**191** பல்லார்³ முனியப் பயனில
சொல்லுவா

1 னெல்லாரு மெள்ளப் படும்.

போ. பல்லார் = பலர், முனிய = வெறுக்கும்படி, பயனில = பய னில்லாத சொற்களை, சொல்லுவான் = கூறுகின்றவன், எல்லாரும் = எல்லோராலும், எள்ளப்படும் = இகழப்படுவான்.

(1) பயனிலசொல்லுதல் என்பதும் ஒருபொருட்கிளவி.

அஸத்ப்ரலாபம் என்பதும்

(2) cf. असत्प्रलापं पारुष्यं पैशुन्यमनृतं तथा।
चत्वारि वाचा राजेन्द्र न जल्पेत न चिन्तयेत् ॥

(3) பல்லார் = அறிவுடையார் பலர்

[म.भा.शांति.&मनु.12,6]

(பரிமே.)

86

அவ்வாறு கூறுதல் எனைக்காட்டிலுந் தீது எனின்,

192 பயனில பல்லார்முற் சொல்ல

னயனில

2 நட்டார்கட் செய்தலிற் றீது.

பொ. பயனில = பயனில்லாதவற்றை,
பல்லார்முன் = பல
ருக்கு முன்னர், சொல்லல், நட்டார்கண் =
நண்பரிடத்தில், நய
னில = நீதியில்லாத செயல்களை,
செய்தலின் = செய்தலைக்காட்டிலும்,
தீது = கொடியது.

அஃது எதனை அறிவிக்கும் எனின்,

193 நயனில னென்பது சொல்லும்
பயனில

3 பாரித் துரைக்கு முரை

பொ. பயனில = பயனில்லாதவற்றை,
பாரித்து = விரித்து,
(ஒருவன்), உரைக்கும் உரை = சொல்லும்
சொல்லே, (அவன்),
நயன் இலன் = நீதியை உடைத்தாயிருக்கவில்லை,
என்பது = என்
பதை, சொல்லும் = அறிவிக்கும்.

மேலும் அது என்ன செய்யும் எனின்,

194 நயன்சாரா நன்மையி னீக்கும்
பயன்சாராப்

**4** பண்பில்சோற் பல்லா ரகத்து.

பொ. *பல்லாரகத்து = பலரிடத்தில், பயன்சாராப்பண்பில் சொல் = பயனொடு பொருந்தாத வீண்சொற்கள், சொல்லுவானை, நயன் = நீதியோடு, சாரா = பொருந்தாது, நன்மையின் நற்குணங் களினின்றும், நீக்கும்.*

சோல்லுவான் *என்பது முதற்குறளிலிருந்து அதிகரிக்கப் பட்டு இரண்டாம் வேற்றுமையாக மாற்றப்பட்டது.*

*ஆகலின் அவனை எப்படிக் கூறல்வேண்டும் எனின்,*

**195** பயனில்சோற் பாராட்டு வானை

மகனெனல்[1]

**5** மக்கட் பதடி யெனல்.[2]

(1) *எதிர்மறைவியங்கோள்*
(2) *விதிவியங்கோள்.*



பொ. *பயனில்சொல் = பயனற்ற சொற்களை, பாராட்டு வானை = அடிக்கடி கூறுவானை,*

மகன் எனல்=மகன் என்று சொல்லக்கூடாது; மக்கட்பதடி=மக்களுள் பதர், எனல்=என்று கூற
வேண்டும்.

சான்றோர் பயனில்லாதவற்றைக் கூறின் பயன் யாது எனின்,

**196** சீர்மை [1]சிறப்பொடு நீங்கும் பயனில
**6** நீர்மை யுடையார் சொலின்.

பொ. நீர்மையுடையார் = நடுநிலையிலுள்ள சான்றோர், பய
னில = பயனில்லாத சொற்களை,
சொலின்=சொன்னால், (அவர்க
ளுடைய), சீர்மை=கீர்த்தி, சிறப்பொடு =
வீடுபெறுதலோடு,
நீங்கும்.

இம்மையில் கீர்த்தியையும், இறந்தபின்னர் வீடுபெறுதலையும் இழப்பர் என்பது கருத்து.

ஆகலின் சான்றோர் அவற்றைக் கூறுவாரா எனின்,

7

அரும்பய னாயு மறிவினர் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்.

பொ. அரும்பயன் = மேலான பயனை, ஆயும் = ஆராயும், அறிவினர் = அறிவோடுகூடிய சான்றோர், பெரும்பயன் இல்லாத சொல் = பெரும் பயனற்ற சொற்களை, சொல்லார் = கூறமாட்டார்.

அவற்றை ஒருக்கால் மறந்துஞ்

சொல்லுவாரோ எனின்,

198/8 பொருடீர்ந்த பொச்சாந்துஞ்
மாசறு காட்சி யவர்.

சொல்லார் மருடீர்ந்த

பொ. மருடீர்ந்த மாசறுகாட்சியவர் = மயக்கமில்லாத சுத்தமான அறிவையுடையவர், பொருடீர்ந்த = அர்த்தமில்லாத சொற்களை, பொச்சாந்தும் = மறந்தும், சொல்லார் = சொல்லமாட்டார்.

(1) சிறப்பு = நன்கு மதிக்கற்பாடு (பரிமே.)

88

நீதியொடு பொருந்தாத சொற்கள்,
பயனில்சொற்கள் இவற்றுள் ஒன்றைக்

கூறவேண்டின், எவற்றைக் கூறல்வேண்டும் எனின்,

**199** நயனில சொல்லினுஞ் சொல்லுக
சான்றோர்
**9** பயனில சொல்லாமை நன்று.

பொ. *சான்றோர், நயன் இல = நீதியோடு பொருந்தாத சொற்களை, சொல்லினும் = சொன்னாலும், சொல்லுக; பயன் இல = பயனற்ற சொற்களை, சொல்லாமை, நன்று = நல்லது*

*ஆகலின்,*

**200** சொல்லுக சொல்லிற்[1] பயனுடைய
சொல்லற்க. **10** சொல்லிற்[2] பயனிலாச்
சொல்.

பொ. *ஒருவன், சொல்லின் = சொன்னால், பயன் உடைய = பயனுள்ள சொற்களைச் சொல்லுக; சொல்லின் = சொன்னால், பயனிலாச்சொல் = பயனற்ற சொற்களை, சொல்லற்க = சொல்லாமலிருக்கவேண்டும்.*

---

(1, 2) சொல்லின்=சொல்லுவனாயின் (மணக்.)
; சொற்களின் :
(பரிமே.) முற்குறளில் சொல்லினும் என்பதை இருவரும் வினையெச்சமாகவே கொண்டமையான், ஈண்டும் சொல்லின் என்பதை மணக்குடவர் போல் வினையெச்சமாகக் கொள்ளுதலே சிறக்கும்.

## 21. தீவினையச்சம்.

தீவினையச்சம் என்பதற்குக் கெட்ட செயல்களைச் செய்வதற்குப் பயப்படுதல் என்பது பொருள்.

சொற்குற்றங்களை நீக்கவேண்டும் எனக் கூறிய பின்னர் உடம் பால் செய்யப்படுங் குற்றங்களை நீக்கவேண்டுமென்பதற்குத் தீவினை யச்சத்தைப் புறங்கூறாமை பயனிலசொல்லாமை இவற்றின் பின்
னர்க் கூறினர்.

தீச்செயல்களைச் செய்ய தீவினையார் அஞ்சமாட்டார் பெரியோர் அஞ்சுவர் ; அவை செய்தவனுக்குக் கேட்டினையே விளைவிப்பதால் நெருப்பைக்காட்டிலும் அவற்றினிடம் பயப்படவேண்டும் ; மறந்தும் பிறனுக்குக் கேடு செய்தால் அறக்கடவுள்

அவனைவிட்டு நீங்கும்;
தீச்செயலின் பயன் ஒருவனது நிழல்போல் அவனைவிட்டு நீங்காது;
அதுபின்னர் அவனைக் கொல்லும்; வறுமை காரணமாகத் தீச்செயல்
களைச் செய்தால் பின்னரும் வறுமையே வரும்;
தன்னிடத்தில்
தானே அன்புடையன் பிறனுக்குக் கேடு செய்யக்கூடாது; தனக்கு நோய் வர வேண்டாதவன் பிறனுக்குக் கேடு செய்யாமலிருத்தல் வேண்டும்; கேடு செய்தார்க்கும் கேடு செய்யாதிருத்தலே அறிவிற்குச் சிறப்பு; என்றுங் கூறி கேடு செய்யாதவனுக்கு ஒருகாலும் கேடு வாராது எனக் கூறினர்.

**201** தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
**1** தீவினை யென்னுஞ் செருக்கு.[1]

பொ. தீவினை என்னும் செருக்கு = தீச்செயல் என்ற மயக்கத்தின் காரியத்தை, தீவினையார் = முற்பிறப்பில் செய்த தீவினையையுடையவர், அஞ்சார் = பயப்படமாட்டார்; விழுமியார் = பெரியோர், அஞ்சுவர் = பயப்படுவர்.

தீச்செயல்களின் பயன் யாது,

**202** தீயவை தீய பயத்தலான் றீயவை

2 தீயினு மஞ்சப் படும்.

(1) செருக்கு—ஆகுபெயர்,

12



பொ. தீயவை=தீச்செயல்கள்,

தீய=கெட்டபயனை, பயத்த
லான்=உண்டுபண்ணுதலால்,
தீயவை=தீச்செயல்கள், தீயினும்=
நெருப்பைக்காட்டிலும், அஞ்சப்படும்=
பயப்படப்படும்.

மேலும்,

203/3 மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

பொ. (ஒருவன்), மறந்தும்,
பிறன்கேடு=பிறனுக்குக் கேட்
டினை, சூழற்க=செய்ய நினைத்தல் கூடாது;
சூழின்=நினைத்தால்
சூழ்ந்தவன் கேடு=நினைத்தவனுக்குக் கேட்டினை,
அறம்=அறக்
கடவுள், சூழும்=நினைக்கும்.

அறக்கடவுள் கேடு நினைத்தவனை விட்டு

நீங்கும் என்பது கருத்து.

தீச்செயலின் பயன் அவனிடம் எவ்வாறு இருக்கும் எனின்,

**204** தீயவை செய்தார் கெடுத லிழறன்னை
**4** வீயா தடியுறைந் தற்று.

பொ. தீயவை=கெட்ட செயல்களை, செய்தார், கெடுதல்= கெட்டுப்போதல், நிழல், தன்னை, அடியுறைந்தற்று=அடியில் தங்கினாற் போன்றது.

தீச்செயல்களின் பயன் அவனை விடாது நின்று என்ன செய்யும் எனின்,

**205**
**5**

எனைப்பகை யுற்றரு முய்வர் [1]வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.

பொ. எனைப்பகை = எவ்விதமான பகையை, உற்றாரும் = அடைந்தவரும், உய்வர்=பிழைப்பர். வினைப்பகை=தீவினைப்பயனாகிய பகை, வீயாது=விடாது, பின் சென்று, அடும்=கொல்லும்.

வறுமையால் தீவினையைச் செய்தால் யாது பயன் எனின்,

206 [1]இலனென்று தீயவை
செய்யற்க செய்யி
6 னிலனாகு மற்றும் பெயர்த்து.

(1) பகை என்ற சொல்லோடு தீவினையையே குறிக்கும்.

தொகைப்பட்ட வினை என்ற சொல்

(2) இலம் (மணக். பா.) இலன் என்றது தன்மை யொருமையாயின், அன்னிற்று த்தன்மையொருமை தொல்காப்பியத்திற் கூறப்படாமையின்,



பொ. இலன் என்று = நான் ஏழையாயிருக்கின்றேன் என்று, தீயவை = கெட்ட செயல்களை, செய்யற்க = செய்யக்கூடாது; செய்யின் = செய்தால், பெயர்த்து = மறுபடியும், இலன் = ஏழை, ஆகும் = ஆவான்.

எவன் பிறர்க்குத் தீங்கு செய்யக்கூடாது எனின்,

**207** தன்னைத்தான் காதல னாயி
னெனைத்தொன்றுந்
**7** துன்னற்க தீவினைப் பால்.

பொ. (ஒருவன்), *தன்னை, தான், காதலன் ஆயின் = விரும்பு வான் ஆயின், தீவினைப்பால் = தீச்செயலின் பகுதியுள், எனைத்து ஒன்றும் = எவ் வகைப்பட்ட ஒன்றனையும், துன்னற்க = செய்ய வேண்டாம்.*

*மற்றும் யார் செய்யக்கூடாது எனின்,*

**208** தீப்பால தான்பிறர்கட் செய்யற்க
நோய்ப்பால
**8** தன்னை யடல்வேண்டா தான்.

பொ. *தன்னை, நோய்ப்பால = நோய்ப்பகுதிகள், அடல் வேண்டாதான் = வருத்தப்படுத்த வேண்டாதான், தான், பிறர் கண் = பிறரிடத்தில், தீப்பால = தீப்பகுதிப்பட்ட செயல்களை, செய் யற்க = செய்யவேண்டாம்.*

*தனக்குக் கேடு செய்தவர்க்குத் தான் கேடு எனின்,*

செய்யலாமோ

209 [1]அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
9 செறுவார்க்குஞ் செய்யா விடல்.

பொ. செறுவார்க்கும்=பகைவர்க்கும், தீய=கொடிய செயல்களை, செய்யாவிடல்=செய்யாதிருத்தல், அறிவினுள் எல்லாம்= அறிவு எல்லாவற்றுள்ளும், தலை=சிறந்தது, என்ப=என்று கூறுவர், (பெரியோர்).

இந்நூல் அதற்குப் பிற்பட்டது என்பதற்கு இஃதுமொரு சான்றாகும். அச்சொற்குத் தான் என்றதை எழுவாயாகக்கொள்ளின் தன்மையொருமை, எனக் கொள்ளல்வேண்டாம்; ஆயினும் 'இரப்பனிரப்பாரை........... (குறள். 1067) என்னுமிடத்து இரப்பன் என்பதைத் தன்மையொருமையாகவே கொள்ளவேண்டியுளது. அதனையொட்டி ஈண்டுந் தன்மையொருமையாகக் கொள்ளின் குற்றமாகாது.

(1) அறிவு—அறிவின் காரியம் (ஆகுபெயர்)

92

தீவினை

செய்யாதோர்க்குக் கேடு வாராதோ எனின்,

210 அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
10 தீவினை செய்யா னெனின்.

பொ. மருங்கு = எல்லை, ஓடி = கடந்து, தீவினை = கொடிய செயல்களை, (ஒருவன்), செய்யான் எனின், (அவன்), அருங் கேடன் = கேடில்லாதவன், என்பது = என்பதை, அறிக = அறிய வேண்டும்.

## 22. ஒப்புரவறிதல்.

ஒப்புரவறிதல்[1] என்பதற்கு உலகிற்கு உபகாரஞ் செய்யு முறையைத் தெரிந்துகொள்ளுதல் என்பது பொருள்.

தர்மசாஸ்திரங்களில் விலக்கப்படுவனவற்றைக் கூறிய பின்னர் செய்யவேண்டியவற்றுட் சிறந்த ஒப்புரவு ஈகை இவ்விரண்டைப்பற் றியும் இரண்டு அதிகாரங்களில் ஆசிரியர் கூறினர்.

ஒப்புரவு என்ற பொருளில் கடப்பாடு, வேளாண்மை, ஒத்தது, நயன், பெருந்தகை என்ற சொற்களை வழங்குகின்றனர்.

மேகம்போல் பிரத்தியுபகாரத்தை
எதிர்பாராது உலகத்தா ருக்கு உபகாரஞ்
செய்யவேண்டும்; தாம் சம்பாதிக்கும் பொருள்
எல்லாம் தகுந்தவர்க்கு உபகாரஞ் செய்தற்கு;
உபகாரஞ் செய்வ
தைப்போல் சிறந்தது இவ்வுலகம்
சுவர்க்கம் இரண்டிலும் இல்லை; உப
காரஞ் செய்கின்றவன் உயிரோடிருப்பவனேயன்றி
உபகாரஞ் செய்
யாதவன் பிணத்திற்கு ஒத்தவன்; உபகாரஞ்
செய்பவனுடைய
செல்வம் ஊருணியின் நீர்போன்றது; அவனிடம்
பொருள் இருப்
பின் அஃது ஊரின் உட்புறத்திலுள்ள பழங்கள்
போன்றது; அச்
மசல்வம எலலாவுறுபபுககளாலும மருநதாய
உதவுகனற மரம
போன்றது; வறுமையடைந்தாலும் தங்கடமையை
யறிந்தோர் உப

(1) ஒப்புரவறிதலாவது இல்லென இரந்துவந்தார் யாவர்க்கும் வரை

யாது கொடுக்கு மாற்றவிலரெனினும் தம்மளவிற்றும் தம் வருவாயளவிற்

93

காரஞ் செய்யாமல் இருக்கமாட்டார் ; அவருடைய எழ்மை பிறர்க்கு உபகாரஞ்செய்ய முடியாமையே; உபகாரஞ்செய்வதால் கேடு வரின்

அக்கேட்டை தன் உடைப்பொருளை விற்றுவது கொள்ளவேண்டும் ;

எனக் கூறினர்.

**211** கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்

1 டென்றாற்றுங் கோல்லோ வுலகு.

போ. மாரிமாட்டு = மேகத்தினிடத்தில், உலகு = உலகத்தார்,

என்ன கைம்மாறு = எவ்வகைப்பட்ட பிரத்தியுபகாரத்தை, ஆற்றுங்

கொல் = செயவார் ? (அதுபோல)

கடப்பாடு = உபகாரம், கைம்

மாறு = பிரத்தியுபகாரத்தை, வேண்டா = எதிர்பாராது இருத்தல் வேண்டும்.

சம்பாதித்த பொருள் எல்லாம் எதற்கு எனின்,

**212**
**2**

தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு.[1]

பொ. (ஒருவன்), தாள் ஆற்றி = முயற்சியைச் செய்து, தந்த = சம்பாதித்த, பொருள் எல்லாம், தக்கார்க்கு = தகுதியுடையவர்க்கு, வேளாண்மை = உபகாரத்தை, செய்தற்பொருட்டு = செய்வதற்கு, (ஆகும்).

உபகாரஞ் செய்வதைவிடச் சிறந்தது எங்கேனும் உண்டோ எனின்,

**213** புத்தே ளுலகத்து மீண்டும் [2]பெறலரிதே
**3** யொப்புரவி னல்ல பிற.

பொ. ஒப்புரவின் = உபகாரத்தைக்காட்டிலும், பிறநல்ல = வேருன நல்ல செயல்களை, புத்தேளுலகத்தும் = சுவர்க்கத்திலும்,

கும் ஏற்கத் தக்கார்க்குத் தக்கனவறிந்து கொடுத்தல் (மணக்.) உலகநடையினை யறிந்து செய்தல். (பரிமே.) மணக்குடவர் கூறியபொருள் ஒருவகையில் ஈகையின்பாற் படுமாகலானும், பரிமேலழகர் கூறிய பொருள் ஒருவகையில் ஒழுக்கத்தின்பாற் படுமாகலானும் ஒப்புரவு என்பதற்கு உலகிற்குச் செய்யும் உபகாரம் எனக் கொள்ளுதல் சிறக்கும்.

(1) பொருட்டு—நான்காம்வேற்றுமைச்சொல்லுருபு.

(2) பெறற்கரிதே (மணக். பா.)



ஈண்டும் = இவ்வுலகத்திலும், பெறல் = பெறுதல், அரிது = இல்லை. (ஏ — அசை).

உபகாரஞ் செய்பவனுக்குஞ் செய்யாதவனுக்கும் மாறுபாடு யாது எனின்,

**214** ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்

4 செத்தாருள் வைக்கப் படும்.

பொ. ஒத்தது = உபகாரஞ் செய்தலை, அறிவான் = அறிந்த வனே, உயிர் வாழ்வான் = உயிரோடு கூடியவன், (ஆகும்). மற்றை யான் = உபகாரஞ் செய்தலை அறியாதவன், செத்தாருள் = இறந்தவருள், வைக்கப்படும் = வைக்கப்படுவான்.

உபகாரஞ் செய்பவனுடைய செல்வம் எது போன்றது எனின்

215 ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்[1]

5 பேரறி வாளன் திரு.

பொ. உலகு = உலகத்தார், அவாம் = விரும்புகின்ற, பேரறி வாளன் திரு = பேருபகாரஞ் செய்யவேண்டுமென்ற அறிவைக் கொண்டவனுடைய செல்வம், ஊருணி = ஊரார் குடிக்கும் நீரை யுடைய குளம், நீர்நிறைந்தற்று = நீரால் நிறைந்தது போன்றது.

ஊருணிநீரால் எவ்வாறு ஊரார் இன்பம் அடைவரோ அவ் வாறே பேருபகாரியின் செல்வத்தால் இன்பமடைவர் என்பது கருத்து.

மேலும்,

**216** பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற்
செல்வ
**6** நயனுடை யான்கட் படின்.[2]

பொ. செல்வம், நயனுடையான்கண் = உபகாரியிடத்தில் படின் = உண்டானால், பயன்மரம், உள்ளூர் = ஊரின் உட்புறத்தில் பழுத்தற்று = பழுத்தது போன்றது.

(ஆல் — அசை)

(1) உலகத்தாரெல்லாராலும் நச்சப்படுகின்ற (மணக்.) உலகநடையை விரும்பிச்செய்யும் (பரிமே.)

(2) cf. முன்னூர்ப் பழுனிய கோளி யாலத்துப்
புள்ளார் யாணர்த் தற்றே யென்மகன்
வளனுஞ் செம்மலு மெமக்கு. (புறநா. 254, 7—9)

95

மேலும்,

**217** மருந்தாகித் தப்பா மரத்தற்றாற்
செல்வம்
**7** பெருந்தகை யான்கட் படின்.

பொ. செல்வம்=பெருந்தகையான்கண் = உபகாரியிடத்தில், படின்=உண்டாயின், மருந்து ஆகி, தப்பாமரத்தற்று=வெளிப் படையாக நின்று பயனில் தப்பாத மரத்தைப்போன்றது. (ஆல்—அசை)

உபகாரஞ்செய்பவர்க்குக் காலபலன் சரியாயில்லாவிடின் அவர் யாது செய்வர் எனின்,

**218** இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
**8** கடனறி காட்சி யவர்.

பொ. கடனறிகாட்சியவர்=கடமையை அறிந்த அறிவுடையார், இடனில் பருவத்தும் = வசதியில்லாக்காலத்தும், ஒப்புரவிற்கு= உபகாரஞ் செய்தற்கு, ஒல்கார்= தளரமாட்டார்.

அவர்க்கு வறுமை என்பது யாது எனின்,

**219**
**9**

நயனுடையா னல்கூர்ந்தா ளுதல் செயுநீர்[1]
செய்யா தமைகலா வாறு[2].

பொ. நயனுடையான்=பேருபகாரி,

நல்கூர்ந்தான் ஆதல் = வறுமையுற்றான் ஆகுதல், செயும் நீர = செய்யப்படும் நீர்மை யுடையனவற்றை, செய்யாது = செய்யாமல், அமைகலா வாறு = வருந்துகின்றவிடத்தில்தான், ஆகும்).

உபகாரஞ்செய்வதால் கேடு வரின் யாது செய்வது எனின்,

**220**
**10**

[3]ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து[4].

பொ. ஒப்புரவினால் = உபகாரஞ் செய்வதால், கேடு = துன்பம், வரும் எனின், அஃது, ஒருவன், விற்று = (தன் பொருளை) விற்று கோட்டக்கது உடைத்து = கொள்ளத்தக்கதை உடையது.

(1) செயனீர்மை (மணக். பா.)
(2) அமையமாட்டாத வியல்பாம் (மணக்.) பாம் (பரிமே.)

வருந்துகின்ற வியல்

(3) ஒப்புரவினன் (மணக். பா.)
(4) தன்னைவிற்றாயினும் (பரிமே.)

# 23. ஈகை.

ஈகை என்பதற்குத் தானம்[1] என்பது பொருள்.

தன்னைக்காட்டிலும் சிறந்தோர்க்கும் தனக்கு ஒப்பானவர்க்கும் தனக்கு இழிந்தோர்க்கும் உடல், வாக்கு, பொருள் இவற்றால் செய்யும் உபகாரத்தைப்பற்றிக் கூறும் ஒப்புரவறிதல் என்ற அதிகாரத் திற்குப் பின்னர், வரும் புண்ணியங்கருதி வறியார்க்குப் பொருள் முதலியவற்றைக் கொடுப்பதைக் கூறும் ஈகை என்ற அதிகாரத்தை ஆசிரியர் கூறினார்.

பிறரிடமிருந்து கொள்ளுதல் நல்லது எனினும் அதனைக் கொள்ளாமையும், ஈகை மறுமையில், நன்மையைக் கொடாது எனினும் அதனைக்கொள்ளுதலும், நல்லன ; வறியார்க்கே ஈதல் வேண்டும் ; தான் வறியன் என்று கூறுமுன்னமே தன்னிடம் ஒன்றுமில்லை எனக் கூறாது, அவன் மறுபடியும் பிறரிடம் சென்று இலன் எனக் கூறுவாறு, அவனுடைய வறுமையைத் தானும் பிறரிடம் சொல்லாது, ஈதல் பெருங்குடியிற் பிறந்தானிடத்தே

உள்ளது ; இரந்தவருடைய இனிய முகத்தைக் காணும் வரையில் ஈதல் வேண்டும் ; பசியை அடக்குபவரைக் காட்டிலும் பசியைப் போக்குபவரே சிறந்தார் ; பசித்தார்பசியைத் தீர்த்தலே தான் தேடிய பொருளைவைக்கும் இடம் ; பிறர்க்குக் கொடுத்துத் தான் உண்பவனுக்கு பசி வாராது ; பிறர்க்கு ஒன்றுங் கொடாது இருத்தல் பெற்றவரின் இனிய முகத்தைப் பார்க்காததால் ;

பொருளை நிரப்புவதற்காகப் பிறர்க்குக் கொடாது தானே அநுபவித்தல் யாசித்தலைக்காட்டிலும் கீழ்ப்பட்டது ; ஒருவனால் தானம் பண்ண முடியாவிடத்து விரும்பப்படாத பொருள்களுள் முதன்மையான சாவும் விரும்பப்படும் எனக் கூறினர்.

221 நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
1 மில்லெனினு மீதலே நன்று.

பொ. கொளல்=(பிறர் கொடுப்பதை) ஏற்றுக்கொள்ளுதல், நல்லாறு = நல்லமார்க்கம், எனினும் = என்று கூறப்படினும், (அது),

(1) ஒருபொருளின் கண்ணுள்ள தன்னுரிமையை நீக்கி அதனைப் பிறர்க்கு உரித்தாக்குதற்குத் தானம் என்று பெயர்.

தீது = கெட்டது; மேல் உலகம் = மறுமை, இல்
எனினும் = இல்லை
என்று கூறப்படினும், ஈதலே, நன்று = நல்லது.
ஈதலின் இலக்கணம் யாது எனின்,

**222** [1]வறியார்க்கொன் றீவதே
யீகைமற் றெல்லாங்
2 குறியெதிர்ப்பை நீர துடைத்து.

பொ. வறியார்க்கு = ஏழைக்கு,
ஒன்று = ஒன்றை, ஈவதே,
ஈகை (ஆகும்); மற்று எல்லாம் = வேறெல்லாம்,
குறியெதிர்ப்பை
நீரது = அளவு குறித்து வாங்கி
அவ்வாங்கியவாறே கொடுத்தலின்
தன்மையை, உடைத்து =
உடைத்தாயிருக்கின்றது.

எவ்வாறு ஈதல்வேண்டும் என்றும், அது
யாரிடம் இருக்கும்
என்றும் வினவின்,

**223** [2]இலனென்னு மெவ்வ
முரையாமை யீதல்

3 குலனுடையான் கண்ணே யுள.

போ. இலன் என்னும் எவ்வம் உ
ரையாமை = தான் (கொடுப்
போன்) பொருளில்லாதவன் என்னும் இழிவைக் கூறாமல், இலன்
என்னும் எவ்வம் உரையாமை = யாசிப்பவன் தான் இலன் என்ற
இழிவைக் கூறுவதற்கு [3]முன்னமே, இலன் என்னும் எவ்வம்
உரையாமை = யாசிப்பவன் மறுபடியும் இலன் என்ற இழிவைப்
பிறரிடம் சொல்லாதவாறு[4], இலன் என்னும் எவ்வம் உரை

(1) दरिद्रायैव दातव्यं न समृद्धाय तु पाण्डव ।
[म.भा.अश्वमे.103,12]

இரப்போர்க் கீத றண்டா மாசித றிருக்கை (பதிற்று. 76)

(2) இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க
லாற்றாக்காற் றன்மெய் துறப்பான் (கலித். 43; 26—27)

(3)

cf. இல்லது நோக்கி யிளிவரவு கூறுமுன்
அல்லது வெஃகி வினைசெய்வார் (பரிபாடல். 10,

87—88)

முன்ன முகத்தி னுணர்ந்தவ

ரின்மை தீர்த்தல் வன்மையானே (புறநா.
3, 25-26)

இரவலர் புன்க ணஞ்சும்—

(4)

புரவெதிர் கொள்வனைக் கண்டனம் (பதிற்று. 57)
cf நிற்பாடிய வலங்கு செந்நாப்
பிறரிசை நுவலாமை
யோம்பா தீயு மாற்ற லெங்கோ (புறநா.
22; 31-33)

இரவி னானே யீத்தோ னெந்தை
யன்றை ஞான்றினோ டின்றி னூங்கு
மிரப்பச் சிந்தியேன் (புறநா. 376,
16-18)

98
யாமை = யாசிப்பவன் தன்னிடம் இல்லை
என்னும் இழிவைக் கூறினன் எனக்

கூருமையும், ஈதல்=கொடுத்தலும், குலனுடை
யான்கண்ணே=பெருங் குடியிற்
பிறந்தானிடத்திலே, உள.

இரக்கப்படுதலும் எதுவரையிலும் இன்னாது
எனின்,

**224** இன்னா திரக்கப் படுத லிரந்தவ
**4** ரின்முகங் காணு மளவு.

பொ. இரந்தவரின்முகம்=யாசிப்பவருடைய
மலர்ந்த முகத்
தை, காணுமளவு=காணும் வரையில்,
இரக்கப்படுதல், இன்னாது=
இனியது அன்று.

பிறர்பசியைப் போக்குதல்
எதைக்காட்டிலும் சிறந்தது எனின்,

**225** ஆற்றுவா ராற்றல் பசியாற்ற
லப்பசியை
**5** மாற்றுவா ராற்றலிற் பின்.

பொ. ஆற்றுவாராற்றல்=வலியுடையாரு
டைய சக்தி, பசி=
பசியை, ஆற்றல்=பொறுத்தல், ஆகும்;
(அது), அப்பசியை,

மாற்றுவாராற்றலின் = போக்குகின்றவரின்
சக்திக்கு, பின் = பின்
னரே, நன்று.

நன்று என்பது முதற்குறளிலிருந்து
அதிகரித்தது.

வறுமையுற்றார்பசியைத் தீர்த்தல்
எவ்வாறு கருதப்படும்

எனின்,

**226** [1]அற்றா ரழிப்சி தீர்த்த
லஃதொருவன்

**6** பெற்றான் பொருள்வைப் புழி.

பொ. அற்றாரழிபசி = வறுமையுற்றாருடைய
கொடியபசியை,

தீர்த்தல் = போக்கல் வேண்டும். அஃது,
பொருள் பெற்றான் =

பொருளை அடைந்தவனாகிய ஒருவன்,
பொருள்வைப்புழி =

பொருளைச் சேகரித்துவைக்குமிடம், ஆகும்.

(4' cf. यो दद्यादपरिक्लिष्टमन्नमध्वनि वर्तते ।
आर्तायाहृष्टपूर्वाय स महद्धर्ममाप्नुयात् ॥

[म.भा.अनु.98,14]

ब्राह्मणायाभिरूपाय यो दद्यादन्नमर्थिने ।
निदधाति निधिं श्रेष्ठं पारलौकिकमात्मनः ॥

[म.भा.अनु.98,10]

உண்டி கொடுத்தோ ருயிர்கொடுத்தோரே (புறநா, 18-19)

99

பொருள் என்பது
இடைகழிதீபநியாயத்தால் பெற்றுன்,
வைப்புழி என்ற இரண்டனோடும் கூட்டப்பட்டது.

பிறர்பசியைத் தீர்த்தவனுக்குப் பசி வருமா எனின்,

227 பாத்தூண் மரீஇ யவனைப்
பசியென்னுந்
7 தீப்பிணி தீண்ட லரிது.

பொ. ஊண் = உணவை, பாத்து = பகுத்து, மரீஇயவனை =
சாப்பிட்டவனை, பசி என்னும்
தீப்பிணி = பசி என்ற கொடிய
வியாதி, தீண்டல் = நெருங்குதல், அரிது = இல்லை.

அவ்வாறிருக்க ஏன் சிலர் ஈகையின்றி இருக்கிறார் எனின்,

**228** [1]ஈத்துவக்கு மின்ப மறியார்கொ
ருமுடைமை
**8** வைத்திழக்கும் வன்க ணவர்.

பொ. தாம், உடைமை = பொருளை, வைத்து = சேகரித்து வைத்து, இழக்கும், வன்கணவர் = கொடியவர், ஈத்து = பிறர்க்குக் கொடுத்து, உவக்கும் = மகிழும், இன்பம் = இன்பத்தை, அறியார் கொல் = அறியமாட்டரோ?

அவ்வின்பத்தை அறியாமையே ஈகையின்மைக்குக் காரணம் என்பது கருத்து.

பொருளைச் சேகரிக்கத் தாமே உணல் எவ்வாறு எனின்,

**229** இரத்தலி னின்னது மன்ற
நிரப்பிய[2]
**9** தாமே தமிய ருணல்.

பொ. நிரப்பிய = சேகரித்துவைப்பதற்காக, தாமே, தமியர் உணல் = தனியே சாப்பிடுதல், இரத்தலின் = யாசிப்பதைக் காட்டிலும், மன்ற = நிச்சயமாக, இன்னது = கொடியது.

ஈகை செய்வதற்கு முடியாமல் இருப்பின்

எது சிறந்தது

எனின்,

230 சாதலி னின்னாத தில்லை யினிதது
10 மீத லியையாக் கடை.[3]

பொ. சாதலின் = சாதலைக்காட்டி லும், இன்னாதது = கொடி

யது, இல்லை. அதுஉம் = அதுவும், ஈதல் இயையாக்கடை = ஈதல்

முடியாதவிடத்து, இனிது, (ஆகும்).

(1) கொடுத்த கொடையினால் பெற்றவர்க்கு வரும் முகமலர்ச்சியைக் கண்டறியாரோ (மணக்.)

(2) தேடிய உணவுகளை (மணக்.)

(3) cf. ஈத லிரந்தார்க்கொன் றாற்றாது வாழ்தலிற்
சாதலுங் கூடுமோ மற்று (கலித். 61, 11-12)

# 24. புகழ்.

புகழ் என்பதற்குக் கீர்த்தி என்பது பொருள்.

இல்லறத்தில் இருப்பார்க்கே புகழ் உண்டாமாகலாலும்,

அஃதும் ஈகையுடையார்க்கே சிறப்பாக உண்டாகின்றமையாலும்,

இல்லறவியலின் இறுதியிலும் ஈகையின் பின்னரும் இவ்வதிகாரத்
தை ஆசிரியர் கூறினர்.
புகழ் என்ற பொருளில் இசை என்ற சொல்லையும் வழங்கினர்.
அடையவேண்டிய பொருளுள் சிறந்ததான புகழோடு வாழ்வதற்கு
ஈதலே காரணம் ஆகும் ; புகழ்வாரெல்லாம் ஈவாரையே புகழ்கின்றார்;
உலகத்தில் உயர்ந்த புகழ் ஒன்றே அழியாது நிற்கும் ; தேவர்களைப்
போற்றாது புகழுடையாரையே சுவர்க்கம் போற்றும் ; ஆக்கத்தைப்
போல் புகழை உண்டாக்கும் கேடுஞ் சாவும் சமர்த்தர்களுக்கே நிகழும்;
பிறந்தால் புகழ் உண்டாவதற்குக்காரணத்தோடு பிறத்தல்வேண்டும்;
புகழ் உண்டாகும்படி வாழாதவர் தம்மை நோவா து தம்மை இகழ்
வாரை நோவது தவறு ; புகழின்மை வசையே ஆகும் ; புகழில்லா
தாரைப் பொறுக்கும் பூமியில் நல் விளைவு குன்றும் ; வசையின்றி

வாழ்வாரே வாழ்வார் இசையின்றி வாழ்வாரே வாழாதவர்; எனக்
கூறினர்.

**231** [1,2] ஈத லிசைபட வாழ்த லதுவல்ல

**1** தூதிய மில்லை வுயிர்க்கு.

பொ. ஈதல் = ஈகையின் பயன், இசைபட வாழ்தல் = புகழ்
பொருந்துமாறு வாழ்தல், (ஆதம்), உயிர்க்கு = மக்கட்கு; அதுவல்
லது = அப்புகழில்லாத வேறொன்றும், ஊதியம் = இலாபம், இல்லை.

உலகத்தில் யாரிடத்தில் இருக்கும் புகழைப் பெரும்பாலும்
கூறுகின்றார் எனின்,

**232** உரைப்பா

**2** ரீவார்மே

லுரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீற்றும் புகழ்[3].

(1) புகழ்பட வாழ்தலாவது கொடுத்தல்; அக்கொடையா னல்லது உயிர்க்கு இலாபம் வேறொன்றுமில்லை. (மணக்.) வறியார்க்கீக, அதனாற் புகழுண்டாக வாழ்க, அப்புகழல்லது மக்களுயிர்க்குப் பயன் பிறிதொன்

தில்லையாகலான். (பரிமே)

(2) ஈதல்—ஆகுபெயர்.

(3) இரப்போர்க் கீஇயாமையிற் றொன்மை மாக்களிற் றொடர்பறி யலரே (புறநா. 165-4-5)

## 101

பொ. உரைப்பார் = பெருமையாகப் பேசுகின்றவர்கள்,

உரைப்பவை எல்லாம் = பேசும் பொருள்களெல்லாம், இரப்பார்க்கு=யாசிப்பவர்க்கு, ஒன்று=ஒன்றை, ஈவார்மேல்=கொடுப்பவர்மேல், நிற்கும்=நிலைத்திருக்கும், புகழ்=புகழே, (ஆகும்). (ஏ—தொக்கது.)

உலகத்தில் அழியாது நிற்கும் பொருள் யாது எனின்,

**233** [1]ஒன்று வுலகத்
துயர்ந்த புகழல்லாற்
**3** பொன்றாது நிற்பதொன் றில்.[2]

பொ. உலகத்து=உலகத்தில், உயர்ந்த புகழல்லால்=மேலான புகழைத் தவிர்த்து, ஒன்றுஆ=ஒப்பில்லாதது ஆக, பொன்றாது நிற்பது=அழியாமல் இருப்பது, ஒன்று=வேறு ஒன்றும், இல்=

இல்லை, (உம்மை தொக்கது).

பூமியில் புகழ்பட வாழ்பவர்க்கு யாது பயன் எனின்,

**234**

நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்

**4** போற்றாது புத்தே ளுலகு.

போ. நிலவரை = பூமியின் எல்லையில், (ஒருவன்), நீள்புகழை = பலநாள் தங்கும் புகழை உண்டாக்குஞ் செயல்களை, ஆற்றின் = செய்தால், புத்தேளுலகு = சுவர்க்கம், புலவரை = தேவர்களை, போற்றாது = கௌரவிக்காது.

ஈகை முதலியவற்றாற் புகழையடைந்து பின்னர் சுவர்க்கத்திற்கு வந்தவர், புகழின்றிச் சுவர்க்கத்திற்கு வந்தவரைக் காட்டினும் சிறந்தவர் என்பது கருத்து.

ஆக்கம் ஒன்றைத் தவிர்த்து புகழிற்குக் காரணமாக வேறு ஏதா

வதும் இருப்பின், அது யாரிடம் இருக்கும் எனின்,

(1) இணையின்றாக வோங்கிய (பரிமே.) "ஒரு வார்த்தையாகச் சொல்லின் எனவும், ஒருதலையாகப் பொன்றாது நிற்பதெனவும் உரைப்பாரு முளர்" (பரிமே.)

(2) cf. இமையத்துக்
கோடுயர்ந் தன்ன தம்மிசை நட்டுத்
தீதில் யாக்கையொடு மாய்தறவத் தலையே (புறநா. 214)

(3) நீள்புகழ்—ஆகுபெயர்.

(4) தேவரை (மணக்.) ஞானிகளை (பரிமே.) ஞானிகள் சுவர்க்கத்திற்குப் போகாது பிரம்மலோகத்திற்கே போவதாலும், சுவர்க்கத்தில் இருப்பவர் தேவர்களே யாதலாலும், புலவர் என்பதும் விபுதா: என்பதும் ஒருபொருட்கிளவியாதலாலும் மணக்குடவர்பொருளே சிறக்கும்.



## 235/5

நத்தம்போற் கேடு[1] முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது.[2],[3]

பொ. நத்தப்போல் = ஆக்கம்போல், உளது ஆகும் = புகழை உண்டுபண்ணும், கேடும் = துன்பமும், சாக்காடும் = சாவும், வித்தகர்க்கல்லால் = பெரிய சமர்த்தர்களுக்கு

அன்றி வேறொருவர்க்
கும், அரிது = இல்லை

ஆகலின் புகழோடுதான் பிறக்கவேண்டுமோ எனின்,

**236** தோன்றிற் புகழோடு தோன்றுக
அஃதிலார்த்
**6** தோன்றலிற் றோன்றாமை நன்று.

பொ. உலகத்து = உலகத்தில், தோன்றின் = பிறந்தால், புகழொடு = புகழிற்குக் காரணமானதோடு, தோன்றுக = பிறக்கவேண்டும்; அஃதிலார் = அது இல்லாதவர், தோன்றலின் = பிறத்தலைக் காட்டிலும், தோன்றாமை = பிறவாமை, நன்று = நல்லது.

புகழ் உண்டாம்படி வாழாதவர் யாரை நொந்துகொள்ள வேண்டும் எனின்,

**237** புகழ்பட வாழாதார் தந்நோவார்
தம்மை
**7** யிகழ்வாரை நோவ தெவன்.

பொ. புகழ் பட = புகழ்உண்டாகும்படி, வாழாதார் = வாழாத
வர், தம் = தங்களை, நோவார் = நோவாமல், தம்மை இகழ்வாரை,
நோவது = நொந்துகொள்வது, எவன் = எதற்காக?

(1) சாக்காடு

கேடு புகழினைக் கொடுத்தது சிபி முதலியோரிடத்திலும், புகழினைக் கொடுத்தது ததீசி முதலியோரிடத்திலும் காண்க.

(2) ஆக்கம்போலக் கல்லது அரிது (மணக்.) புளதாகுஞ் சாக்காடும்

கேடும் உளதாணற்போலச் சாதலும் வல்லவர் புகழுடம்பிற்கு ஆக்கமாகும் கேடும் புகழுடச் சதுரப்பாடுடையார்க்கல்லதில்லை. (பரிமே.)
போலென்பது ஈண்டுரையசை. (பரிமே.)

(3) கேடுஞ் சாக்காடும் அரிது என்றவிடத்து ஒருமைபன்மைமயக்
கம். தனித்தனியாக அரிது என்பதனோடு கேடும், சாக்காடும் என்பன
வற்றைக் கூட்டல்வேண்டும் என்பது கருதி அவ்வாறு ஆசிரியர் கூறினர்.

புகழின்மையை எவ்வாறு உலகம் கூறும் எனின்,

**238** வசையென்ப வையத்தார்க் கெல்லா
மிசையென்னு

**8** மெச்சம் பெறாஅ விடின்.

போ. இசை என்னும் எச்சம் = புகழ் என்ற
தன் சாவுக்குப்
பின்னர் எஞ்சியிருக்கும் பொருள்,
போனல், (அதனை), வையத்தார்க்கு

பெறாவிடின் = உண்டாகாமற்
எல்லாம் = பூமியிலுள்ள மக்க
ளுக்கு எல்லாம், வசை = குறைவு,
என்ப = என்று கூறுவர் (பெரியோர்).

புகழில்லாதாரைப் பொறுத்த பூமியில்
விளைபொருள்கள் நன்றாய் விளையுமா எனின்,

**239** வசையிலா வண்பயன் குன்று
மிசையிலா

**9** யாக்கை பொறுத்த நிலம்.[1]

போ. இசையிலாயாக்கை = புகழோடு பொருந்தாத உடலை, பொறுத்த = தாங்கிய, நிலம் = நிலத்தின்கண், வசையிலாவண் பயன் = குற்றமில்லாத நல்ல விளைச்சல், குன்றும் = குறையும்

ஆகலின்,

**240** வசையொழிய வாழ்வாரே வாழ்வா
**10** வாழ்வாரே வாழா தவர்.[2]

ரிசையொழிய

போ. வசை ஒழிய

வாழ்வாரே = புகழின்மையைப்போக்கி வாழ்பவரே, வாழ்வார், (ஆவர்); இசை ஒழிய வாழ்வாரே = புகழைப் போக்கி வாழ்பவரே, வாழாதவர், (ஆவர்).

(1) நிலம் என்பதைக் குன்றும் என்பதற்கு எழுவாயாகக் கொள்ளின் வசையிலாவண்பயன் என்பதை எழாம்வேற்றுமையாகக் கொள்ளல் தகும். அவ்வாறிருப்பினும் "குன்றுமென இடத்துநிகழ்பொருளின் றொழில் இடத்தின்மே னின்றது" என்ற பரிமேலழகர் கூறிய தொடரன்னாலே ஆதாரமாகக் கொண்டது என்னலாம்.

(2) cf. வசைநீக்கி யிசைவேண்டியும் (புறநா. 359, 11)

# துறவறவியல்.

இல்லறமல்லாதது துறவறம் ஆகும். அந்நிலையில் இருப்போர்
¹நைஷ்டிகபிரம்மச்சாரி, பற்றற்ற கிரஹஸ்தன், வானப்பிரஸ்தன், ஸந்
நியாஸி இந்நால்வரும் ஆவர். பெரும்பாலும் முன் இல்லறத்தில் இருந்
தவரே பின் வானப்பிரஸ்தர், ஸந்நியாஸி ஆவர். இல்லறத்தில்
நுழையாது ஸந்நியாஸி ஆவதும் உண்டு. வானப்பிரஸ்தர் மனைவி
மக்களோடும் அவரின்றியும் இருப்பது உண்டு. மனைவிமக்களை
விட்டு மோக்ஷத்தை அடைதற்குரிய சாதனங்களைப் பெற்றவரே
ஸந்நியாஸி ஆவர். பெரும்பாலும் வானப்பிரஸ்தருக்குரிய அரு

ளுடைமை, புலான்மறுத்தல், தவம், கூடாவொழுக்கம், கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னாசெய்யாமை, கொல்லாமை ஆகிய கடமைகளை ஒன்பது அதிகாரங்களிற் கூறி, அதற்குப் பின்னருள்ள நாலு அதிகாரங்களிற் பெரும்பான்மையும் ஸந்நியாஸியின் கடமைகளை ஆசிரியர் கூறினார். துறவறத்தைப்பற்றிக் கூறும் இவ்வியலுக்குத் துறவியல் என்பது பெயர்.

விரதம்.

தன்னால் கொள்ளப்படவேண்டுவனவும் நீக்கப்படவேண்டுவனவும் விரதம் ஆகும்.

---

## 25 அருளுடைமை.

---

அருள் என்பதற்குப் பிராணிகள் எல்லாவற்றின்மேலும் காட்டக்கூடிய தயை என்பது பொருள்.

அது நிவிருத்திமார்க்கத்தில் இருப்போநுக்குச் சிறந்த குணமாகக் கூறப்பட்டது.

(1) ஆயுள் முழுவதும் மணம்புரியாது நூல்களைக் கற்றுக்கொண்டு ஆசிரியர், தாய்தந்தையர், இவர்களுக்குப் பணிசெய்துகொண்டு தவநிலையில் இருப்பவர் நைஷ்டிகப்பிரமச்சாரி ஆவர்,

(2) cf. सर्वभूतदया धर्मो निवृत्ते: परमस्सदा [म.भा.अनु.211,18]

## 105

இல்லறத்தால் இவ்வுலகில் அதன்பின்னர் துறவறத்திற்குச் அடையக் கூடிய புகழைக் கூறி சிறந்த அருளைப்பற்றிக் கூறத் தொடங்கினர்.

அருளே சிறந்த செல்வம்; அதே வீடு பெறுதற்குத் துணையாகலான் அதனை அடையவேண்டும்; அருளுடையார் நரகத்திற்குப் போகார்; அவர்க்கு அந்நரகத்தை அடைவிக்கக்கூடிய தீவினைகள் இரா; இவ்வுலகத்திலும் அவருக்குத் துன்பம் இல்லை என்பதற்குப் பூமியே ஸாக்ஷி; அருளில்லாதார்க்கு வீடு இல்லை; அவர் ஒருகாலும்

ஆக்கத்தை அடையார்; அவர் செய்யும் மற்ற அறங்களெல்லாம் பயனற்றன ஆகி ஞானமில்லாதவன் வீடுபெறுவது போலும் ஆகும்; அவ்வருளை அடைதற்குச் சாதனம் நம்மைக் காட்டிலும் எளியவரிடத்தில் நாம் நடக்கும்போது நம்மைக்காட்டிலும் பெரியோர் நம்மிடத்தில் எவ்வாறு நடக்கவேண்டும் என நினைக்கின்றோமோ அதனை நினைவிற்குக் கொண்டுவருதலே ஆகும்; எனக் கூறினர்.

**241** அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்

**1** பூரியார் கண்ணு முள.

[செல்வம்

பொ. செல்வத்துள் = செல்வங்களுள், அருட்செல்வம் = அருள் ஆகிய செல்வமே, செல்வம் = சிறந்த செல்வம்; பொருட் செல்வம் = பொருளாகிய செல்வம், பூரியார்கண்ணும் = கீழோரிடத்திலும், உள.

அருட்செல்வமே என்றவிடத்து ஏகாரம் தொக்கது.

ஏன் அவ்வாறு எனின்,

**242**
**2**

நல்லாற்ரு ஞடி யருளாள்க பல்லாற்ருற் பொ.
[1]றேரினு மஃதே துணே. அருள் =

நல்லாற்ருன்[2] = நல்ல
அருளே, ஆள்க =

வழியில், நாடி = இருந்து,
தன்வசப்படுத்தல் வேண்டும்:
(எனெனில்), பல்லாற்ருன்[3] = பலவழிகளாலும், தேரினும் = ஆராய்ந்தாலும், அஃதே = அதுவே, துணே = வீட்டிற்குத் துணே[4] (ஆகும்).

(1) தேறினும் (மணக். பா.)
(2 & 3) வேற்றுமைமயக்கம்.

(4) துறவறவியலின்
நீப்பி னக்கிலேயே —பேரா

இறுதிக் குறளாகிய " ஆரா வியற்கை யவா வியற்கை தரும்" (370) என்பதில் பேரா
14



மேலும்,
243

3

[1]அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
வின்னா வுலகம் புகல்.

பொ. அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு = அருளோடுகூடிய மனமுடையார்க்கு, இருள் சேர்ந்த இன்னாவுலகம் = இருளோடு கூடிய நரகத்தை, புகல் = புகுதல், இல்லை.

என் எனின்,

244 மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
4 தன்னுயி ரஞ்சும் வினை.

பொ. மன்னுயிர் = நித்தியமான உயிர்களை, ஓம்பி = போற்றி, அருள் = அருளை, ஆள்வாற்கு = தன்வசப்படுத்துகிறவர்க்கு, தன்னுயிர், அஞ்சும் = அஞ்சுகின்ற, வினை = பாவச்செயல், இல் = இல்லை, என்ப = என்று கூறுவர் (பெரியோர்).

இவ்வுலகில் அவர்களுக்குத் துன்பம் உண்டோ எனின்,

245 அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
5 மல்லன்மா ஞாலங் கரி.[1]

போ. அருள் ஆள்வார்க்கு
லல் = துன்பம், இல்லை. (அதற்கு),

= அருளோடுகூடியவர்க்கு, அல்
வளிவழங்கு மல்லன் மா ஞாலம் =
காற்று வழங்கும் செழிப்போடுகூடிய பெரிய-
பூமியே, கரி = ஸாக்ஷி, (ஆகும்.) (ஞாலம்—ஏகாரம்
தொக்கது).

எல்லோருஞ் செய்யுங் குற்றத்தையும்
பொறுத்து அவரிடத்
தில் அருளோடு இருத்தலால், பூமி துன்பமின்றி செழித்து
விளங்குவதே அருளுடையார்க்குத் துன்பமில்லை என்பதை விளக்
கிக் காட்டுகின்றது என்பது கருத்து.

வியற்கை தரும் எனக் கூறப்பட்டமையான் தொடக்கமுடிவுநியாயத்தால்
இக்குறளில் அணி என்பது வீட்டினது துணையேயாகும்.

தொடக்கமுடிவுநியாயம் = உபக்கிரமோபஸம்ஹாரநியாயம்; அஃதா
வது தொடக்கத்தில் வரும் ஐயத்தை முடிவைக்கொண்டு போக்கிக்கொள்
வதும் முடிவில் வரும் ஐயத்தைத் தொடக்கத்தைக்கொண்டு போக்கிக்
கொள்வது மாகும்.)

(1) cf. अभयं सर्वभूतेभ्यो यो ददाति महीपते ।

स गच्छति परं स्थानं विष्णोः पदमनामयम् ॥ [म.भा.स्त्री.7,25]

(2) அருளுடையார்க்கு அல்லலின்மை உலகத்தார்மாட்டே காணப்படும். (மணக்.) அருளுடையார்க்கு இம்மையினும் ஒரு துன்பமுண்டா

107

அருளில்லாதார் எப்படி கூறப்படுவர் எனின்,

**246** [1]பொருணீங்கிப் [2]பொச்சாந்தா
ரென்ப ரருணீங்கி[2]

**6** யல்லவை செய்தொழுகு வார்.

பொ. அருள் = அருளை, நீங்கி = போக்கி, அல்லவை = அருளில்லாத பாவச்செயல்களை, செய்து ஒழுகுவார் = செய்கின்றவர், பொருள் = இல்லறத் துப்பொருள்களை, நீங்கி = நீக்கியும், பொச்சாந்தார் = மறந்தார், என்பர் = எனப்படுவர்.

இல்லறத்தை எதற்காக நீக்கினோம் என்பதை மறந்தவர் ஆவர் என்பது கருத்து.

அருளின்மைக்கு மற்றும் பயன் யாது எனின்,

**247** [3]அருளில்லார்க் கவ்வுலக மில்லை[4]
பொருளில்லார்க்

**7** கிவ்வுலக மில்லா கியாங்கு.

பொ. பொருள் இல்லார்க்கு = பணமில்லாதவருக்கு, இவ்வுலகம் = இவ்வுலகத்தின்பம், இல்லாகியாங்கு = இல்லாததுபோல, அருள் இல்லார்க்கு = அருளில்லாதவர்க்கு, அவ்வுலகம் = வீட்டின்பம், இல்லை.

அருளில்லாமையாற் கெட்டவர்க்கு மறுபடியும் உய்வு உண்டோ எனின்,

**248** பொருளற்றார் பூப்ப
ரொருகா லருளற்றா
**8** ரற்றார்மற் றாத லரிது.

காது, அதற்குக் காற்றியங்குகின்ற வளப்பத்தையுடைய பெரிய ஞாலத்து வாழ்வார் சான்று (பரிமே.)

(1) முற்பிறப்பின்கண் அருளினின்று நீங்கி அல்லாதவற்றைச் செய் தொழுகினவர் இப்பிறப்பின்கண் பொருளினின்று நீங்கி மறவிபு முடையவரென்று சொல்லுவர். இது பொருளில்லையர்மென்றது (மணக்.) உயிர்கண்மாட்டுச் செய்யப்படும் அருளைத் தவிர்ந்து தவிரப்படுங் கொடுமைகளைச் செய்தொழுகுவாரை முன்னும் உறுதிப்பொருளைச் செய்யாது தாம் துன்புறுகின்றமையை மறந்தவரென்று சொல்லுவர் நல்லோர். உறுதிப்பொருள்—அறம். (பரிமே.)

(2) நீங்கி—பிறவினைப்பொருளில் வந்தது.

(3) அருளிலார்க்கு (மணக். பா.)

(4) அருளில்லாதார் சுவர்க்கம் புகார் (மணக்.) சுவர்க்கம் புகுதல் துறவறத்திலுள்ளோர்க்கு அறநூல்களிற் கூறப்படாமை காண்க.

பொ. ஒருகால்=ஒருசமயத்தில், பொருளற்றார்=பொருளை இழந்தவர், பூப்பர்=பொருளைப் பெறுவர். அருளற்றார்=அருளை இழந்தவர், அற்றார்=அழிந்தவர் (ஆவர்); மற்று=மறுபடியும், ஆதல்=அருளோடு கூடியவர் ஆதல், அரிது=இல்லை.

அருளில்லாதார் செய்யும் மற்ற அறங்கள் எவ்வாறு எனின்,

**249**
**9**

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி[1]
னருளாதான் செய்யு மறம்.[2]

பொ. தேரின் = ஆராய்ந்தால், அருளாதான் = அருளில்லாதவன், செய்யும் அறம்=செய்கின்ற (வேறு) அறங்கள், தெருளாதான் = ஞானமில்லாதவன், மெய்ப்பொருள் = கடவுளை, கண்டற்று=கேரின்கண்ட தன்மைத்து. (ஆல்=அசை)

அருளில்லாதவன் துறவத்திற்குரிய மற்ற சக்தியில்லாதவன் ஆவன் என்பது கருத்து.

அறங்களைச் செய்ய

அருளை வருவிக்க யாது செய்யவேண்டும்

எனின்,

**250**
**10**

வலியார்முற் றன்னை நினைக்கதான்[3] றன்னின்
[4]மெலியார்மேற் செல்லு மிடத்து.

போ தன்னின் = தன்னைக்காட்டிலும், மெலியார்மேல், குறைந்தவரிடத்தில், செல்லுமிடத்து = நடக்கும்போது, வலியார் முன் = மேம்பட்டவரின்முன், தன்னை, நினைக்க = நினைத்துக்கொள்ளல்வேண்டும்.

நமக்குக் குறைந்தவரை நாம் நடத்தும்போது நமக்கு மேம்பட்டவர் நம்மை எவ்வாறு நடத்தவேண்டுமென்று நினைக்கின்றோமோ அவ்வாறு அவரை நடத்தவேண்டுமென்பது கருத்து.

(1) தேறின் (மணக். பா.)
(2) இஃது அறஞ்செய்யவும் மாட்டார் என்றது (மணக்.) அருளாதான் இடையே அறஞ்செய்தால் அதனைத் தன்னருளாமையால் தானே யழித்துவிடுமென்பதாயிற்று. (பரிமே.)
(3) தம்மை நினைக்க தாம் தம்மின் (மணக். பா.)
(4) மெலியார் எனச் சிறப்புடைய உயர்திணைமேற் கூறினாராயினும் வினையஃறிணையுங் கொள்ளப்படும். (பரிமே.)

## 26. புலான்மறுத்தல்.

புலான்மறுத்தல் என்பதற்கு மாமிசம் பது பொருள்.

## உண்ணுதிருத்தல் என்

அருளுடையார் மாமிசம் உண்ணார் என்பது திண்ணமாக லானும் பின்னர்க் கூறப்போகும் தவத்திற்கு மாமிசம் உண்ணுதல் இடையூறுதலானும் அருளுடைமையின் பின்னரும் தவத்தின் முன்னரும் புலான்மறுத்தலைக் கூறினர்.

மாமிசம் என்ற பொருளில் ஊன், புலால், உடல்சுவை என்ற சொற்களை ஆசிரியர் வழங்கினர்.

தன்னுடலின் பெருக்கத்திற்காகப் பிறவுடலின் மாமிசத்தைத் தின்பவனிடத்தில் அருள் எவ்வாறு இருக்கும்; பொருளைக் காக்காத வனுக்கு எவ்வாறு பொருளை ஆளமுடியாதோ அவ்வாறே ஊன் தின்பவர்க்கும் அருளை ஆளமுடியாது; கொலைசெய்யுங் கருவியை உடையவர்மனம் எவ்வாறு கொலையிலே செல்லுமோ அவ்வாறே ஊனைச்சுவைத்து தின்பவர்மனமும் ஊன் தின்பதிலே செல்லும்; தான் நேரிற்கொல்லாது பிறரைக்கொல்லும்படி செய்தல் அருளைப் போன்றதும் அருளிலிருந்து வேறுபட்டது மாதல்போல ஊனைத் தின்றல் புருஷார்த்தமன்று; தின்பதற்குப் பிராணிகளைக் கொல்லார் எனின் ஊனை விற்பதற்கு அவற்றைப் பிறர் கொல்லார்; ஊனைத் தின்னுதவர் வீட்டைப்பெறுவர், ஊனைத்தின்பவர் எப்போதும் நரகத்தில் இருப்பார்; ஊன் பிறபிராணியின் புண் என உணர்வார் ஊனைத் தின்னமாட்டார்; மயக்கமற்ற அறிவுடையாரும் ஊனைத் தின்னார்; இல்லறத்தார்க்கு ஆயிரம் யாகம் செய்வதால் வரும் பயனைக் காட்டிலும் ஓர் உயிரைக்கொல்லாமையால் துறவறத்தார்க்கு வரும் பயன் அதிகம்; ஊனைத் தின்னுதிருப்பவனை உலகத்தார் கைகூப்பித் தொழுவர்; எனக் கூறினர்.

**251** தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
**1** னெங்ஙன மாளு மருள்.[1]

போ. *தன் = தன்னுடைய, ஊன்பெருக்கற்கு = ஊனை வளர்த்தற்கு, தான், பிறிதூன் = வேறொன்றின் ஊனை, உண்பான் = தின்*

(1) cf. स्वमांसं परमांसेन योवर्धयितुमिच्छति ।
नास्ति क्षुद्रतरस्तस्मात् सनृशंसतरो नरः ॥ (म.भा.अनु.178,13)
[मनु.5,52, म.भा,अनु.177,14, म.भा.अनु.233,6]



*பவன், அருள் = அருளை, எங்ஙனம் = எப்படி, ஆளும் = தன்வசப் படுத்துவான்? ஆளமாட்டான் என்பது கருத்து.*

*ஊன் தின்பவர்க்கு அருளாட்சி எவ்வாறு இல்லை எனின்,*

**252** பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
**2** யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.[1]

போ. *போற்றாதார்க்கு = கவனித்துப் பாதுகாவாதவர்க்கு, பொருளாட்சி = பணத்தின் ஆட்சி, இல்லை; ஆங்கு = அப்படியே ஊன் = மாமிசத்தை, தின்பவர்க்கு, அருளாட்சி, இல்லை.*

*ஊன்சுவை யறிந்தவர் ஊன் தின்னுதலை விடுவாரா எனின்,*

**253** படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற

3 ³னுடல்சுவை யுண்டார் மனம்.

பொ. ஒன்றன் = ஒரு பிராணியினுடைய, உடல்சுவை = மாமிசத்தை, உண்டார்மனம் = சாப்பிட்டவருடைய மனம், படைகொண்டார்நெஞ்சம் போல் = கொலைக்கருவியைக் கொண்டவருடைய மனம்போல், நன்று = அருளை, ஊக்காது = நினையாது.

தான் நேரிற் கொல்லாமல் இருப்பின், அஃது அருளாகுமா எனின்,

254 ¹அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்²
4 பொருளல்ல தவ்வூன் றினல்.

பொ. அருளல்லது = அருளைப்போன்றதும் அருளினின்றும் வேறுபட்டதும் ஆனது, யாது எனின், கொல்லாமை கோறல் = நேரில் தான்கொல்லாமல் பிறரைவிட்டுக் கொல்லுதல். அவ்வூன்றினல் = அந்த மாமிசத்தைத் தின்னுதல், பொருளல்லது = புருஷார்த்தத்தைப்போன்றதும் அதனின்றும் வேறுபட்டதும், (ஆகும்).

(1) cf. अधृष्यः सर्वभूतानामायुष्मान्निरुजः सदा ।

भवत्यभक्षयन्मांसं दयावान् प्राणिनामिह ॥
[म.भा.अनु.177,41]

य इच्छेत्पुरुषोऽत्यंतमात्मानं निरुपद्रवम् ।
स वर्जयेत मांसानि प्राणिनामिह सर्वशः ॥
[म.भा.अनु.177,53]

(2) cf.

न मांसात् परमं किंचिद्रसतो विद्यते भुवि । [म.भा.अनु. 178,7]
दुष्करं च रसज्ञेन मांसस्य परिवर्जनम् । [म.भा.अनु.177,19]

(3)

அருளல்லது யாதெனின் கொல்லாமையைச் சிதைத்தல்(மணக்.) அருள் யாதெனின் கொல்லாமை, அருளல்லது யாதெனின் கோறல்; ஆகலான் அக்கோறலான் வந்த வூனைத்தின்கை [பாவம் (பரிமே)

(4) cf. धनेन क्रयिको हन्ति खादकश्चोपभोगतः ।
घातको वधबन्धाभ्यामित्येष त्रिविधो वधः ॥ [म.भा.अनु.177,41]
अस्वादयन्ननुमोदंश्च भावदोषेण मानवः ।
योऽनुमोदति हन्यन्तं सोऽपि दोषेणलिप्यते ॥ [म.भा.अनु.177,40]

111

தின்பதற்குப் பிராணிகளைக் கொல்லாமலிருந்தால் மாமிசத்தை விற்பதற்குக் கொல்லுவாரா எனின்,

255 [1]தினற்பொருட்டாற் கோல்லா[2] துலகெனின் யாரும்
5 விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

பொ. உலகு = உலகத்தார், தினற்பொருட்டு = தின்னுவதற்கு, கொல்லாது = (பிராணிகளைக்) கொல்லமாட்டார், எனின், யாரும், விலைப்பொருட்டு = விலைக்காக, ஊன் = மாமிசத்தை, தருவார், இல் = இல்லை. (இரண்டு ஆலும் அசை).

ஊன் தின்பதின் பயன் யாது எனின்,

256

[3]உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
6 வண்ணாத்தல் செய்யா தளறு.[4]

போ. உயிர்நிலை=பிராணியின் பேராவியற்கையாகிய வீடு, ஊன் உண்ணாமை=ஊனை உண்ணாமையால், உள்ளது; ஊன்= ஊனை, உண்ண=உண்டால், அளறு=நரகம், அண்ணாத்தல் செய்யாது=வாயைத் திறந்துவிடாது.

ஊனை உண்ணாமை வீட்டைத்தரும், ஊனை போதும் நரகத்தைத் தரும் என்பது கருத்து.

உண்ணுதல் எப்

யார் ஊனைத் தின்னமாட்டார் எனின்,

**257**

**7**

உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின்.

போ. புலால் = மாமிசம், பிறிதொன்றன்=வேறொன்றினுடைய, புண்; உணர்வார்=அதனை யறிந்தவர், அது= அவ்வூனை, பெறின்=அடைந்தால், உண்ணாமைவேண்டும்=உண்ணாதிருத்தலை வேண்டுவர்.

(1) cf. यदि चेत् खादको न स्यान्न तदा घातको भवेत् ।
घातकः खादकार्थाय तद्घातयति वै नरः ॥ [म.भा.अनु.177,30]

(2) கொல்லாது (மணக். பா.)

(3) ஒருசாருயிர் உடம்பின்கண்ணே நிற்றல் வேறுண்மையென்கின்ற அறத்தின்கண்ணது (பரிமே.)

(4) भक्षयन्निरयं याति नरो नास्त्यत्र संशयः [म.भा.अनु.177,43]

(5) புலாலைப் பிறிதொன்றின் (மணக். பா.)

(6) வேண்டும் என்பதற்கு உணர்வார் என்பதை எழுவாயாகக் கொள்ளின் பல்லோர்படர்க்கையில் செய்யுமென்முற்று வாராதெனத் தொல்காப்பியத்திற் கூறப்பட்டமையான், திருக்குறள் அந்நூலிற்குப் பிற்பட்டதென்பதற்கு இஃது மொரு சான்றாகும்.

(7) cf. समुत्पत्तिं च मांसस्य वधबंधौ च देहिनाम् ।
प्रसमीक्ष्य निवर्तेत सर्वमांसस्य भक्षणात् ॥ [मनु.5]

# 112

மேலும்,

258/8 'செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன்.

பொ. செயிரின் = குற்றத்தினின்று, தலைப்பிரிந்த = நீங்கிய, காட்சியார் = அறிவுடையார், உயிரின் = சீவனோடு கூடிய உடலினின்று, தலைப்பிரிந்த = நீங்கிய, ஊன் = ஊனை, உண்ணார் = சாப்பிட மாட்டார்.

ஊன் உண்ணாமையின் பயன் எத்தனையது எனின்,

259 [1]அவி[3]சொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
9 னுயிர்செகுத் துண்ணாமை நன்று.

போ. அவி = ஹவிஸ்ஸுக்களை, சொரிந்து = மிகுதியாகக் கொடுத்து, ஆயிரம் வேட்டலின் = ஆயிரம் யாகங்களைச் செய்வதைக் காட்டிலும், ஒன்றன் = ஒன்றினுடைய, உயிர் = பிராணனை, செகுத்து = போக்கி, ஊன் உண்ணாமை = மாமிசத்தை உண்ணாமை, நன்று = நல்ல பயனைத் தரும்.

இல்லறத்தார் ஆயிரம் வேள்வி செய்து அடையும் பயனைக் காட்டிலும் துறவறத்தார் ஊனுண்ணாமையால் அடையும் பயன் மேலானது என்பது கருத்து.

ஊன் என்பது அதிகரித்தது.

மேலும் ஊனுண்ணாமையின் பயன் யாது எனின்,

260 [4]கொல்லான் புலாலை
மறுத்தானைக் கைகூப்பி
10 யெல்லா வுயிருந் தொழும்.

போ. உயிர் = பிராணியை, கொல்லான் = கொல்லாமல், புலாலை மறுத்தானை = ஊனை உண்ணாதவனை, எல்லவுயிரும் = எல்லாப் பிராணிகளும், கைகூப்பி, தொழும்.

உயிர் என்பது அதிகரித்தது.

(1) cf. नभक्षयंत्यतो मांसं तपोयुक्ता मनीषिणः । [म.भा.अनु.176,11].

(2) cf. मासि मास्यश्वमेधेन यो यजेत शतं समाः ।

न खादति च यो मांसं सममेतन्मतं मम ॥

वर्षे वर्षेश्वमेधेन यो यजेत शतं समाः ।

[म.भा.अनु.177,16]

मांसानि च न खादेद्यस्तयोः पुण्यफलं समम् ॥

(3) அவி=हविः
[मनु.5,53]

(4) cf. न भक्षयति यो मांसं न च हन्यन्न घातयेत् ।
तन्मित्रं सर्वभूतानां मनुः स्वायंभुवोऽब्रवीत् ॥ [म.भा.अनु.177,12]
न भक्षयति यो मांसं विधिं हित्वा पिशाचवत् ।
स लोके प्रियतां याति व्याधिभिश्च न पीड्यते ॥ [मनु.5,59]
यो बन्धनवधक्लेशान् प्राणिनां न चिकीर्षति ।
स सर्वस्य हितप्रेप्सुः सुखमत्यंतमश्नुते ॥ [मनु.5,46]

## 27. தவம்.

தவம் என்பதற்கு உணவைக் குறைத்து இந்திரியங்களை அடக்கி மனத்தைக் கடவுளிடஞ் செலுத்துதல் என்பது பொருள்.

புலாலை மறுத்தார்க்கன்றி தவம் முடியாமையின் புலான்மறுத்தலின்பின் தவத்தைப்பற்றி ஆசிரியர் கூறினர்.

தவம் என்பதின் பொருளில் நோற்றல் என்ற சொல்லையும் வழங்கினர்.

தமக்கு வருந்துன்பங்களைப் பொறுத்தலும்

பிறர்க்குத் துன்பம்
செய்யாமலிருத்தலுமே தவத்தின் ஸ்வரூபம் ;
அத்தவம் தவஞ்
செய்வதில் பழக்கமுள்ளவர்க்கே எளிது ;
பகைவரைக் கெடுத்தலும்
வேண்டியவரை ஆக்குதலும் தவத்தார்க்கு முடியும்;
அவர் வேண்டிய
பொருளெல்லாம் அடைவர் ; தவஞ்
செய்யச்செய்ய அவர் தேஜஸ்வி
களாக ஆவர் ; அவரை எல்லாப்பிராணிகளும்
தொழும் ; அவர்க்கு
யமனைக் கடத்தலும் முடியும் ;
தவஞ்செய்யாதார் மிகுதியாக
இருத்தலான் ஏழைகள் மிகுதியாக இருக்கின்றார் ;
துறவறத்தார்க்கு
உபசரிப்பதற்காகத்தான் இல்லறத்திலுள்ளார்
தவஞ் செய்யவில்லை
போலும் ; துறவறத்திலுள்ளார்க்குத்
எனக் கூறினர்.

தவஞ் செய்வதே கடமை ;

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே[1] தவத்திற் குரு[2].

பொ. உற்ற=அடைந்த, நோய்=துன்பத்தை, நோன்றல்=பொறுத்தலும், உயிர்க்கு = பிராணிகளுக்கு, உறுகண் = துன்பத்தை, செய்யாமை=செய்யாதிருத்தலும், (ஆகிய), அற்றே=அத்தன்மைத்தே, தவத்திற்கு, உரு=ரூபம், (ஆகும்).

(1) அற்று என்பதை எழுவாயாக மணக்குடவரும், அதனைப் பயனிலையாகப் பரிமேலழகரும் கொண்டார். எழுவாயாகக் கொள்ளினே ஏகாரம் தேற்றேகாரமாதற்கு உரித்தலின் மணக்குடவர்கூற்றே சிறக்கும்.

(2) ரூப:=உருவம்=உருவு=உரு.

15

## 114

அத்தவம் செய்வது யார்க்கு எளிது எனின்,

**262**
**2**

தவமுந் தவ முடையார்க்[1] காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

பொ. தவமும், தவமுடையார்க்கு

=முன்னரே தவஞ்செய்து
பழக்கமுள்ளவர்க்கு, ஆகும் = எளிது ஆகும்; அஃதிலார் = முன்னமே பழக்கமில்லாதார், அதனை = அத்தவத்தை, மேற்கொள்வது, அவம் = துன்பத்திற்கு இடன், ஆகும்

தவத்தின் பயன் யாது எனின்,

**263** ஒன்னார்த் தெறலு முவந்தாரை
யாக்கலு
**3** மெண்ணிற் றவத்தான் வரும்.[3]

பொ. எண்ணின் = நினைத்தால், தவத்தான் = தவத்தினால், ஒன்னார் = தீங்கு செய்வாரை, தெறலும் = கெடுத்தலும், உவந்தாரை = நன்மை செய்வாரை, ஆக்கலும்,
வரும் = ஆகும்.

மேலும்,
**264**
**4**

[4]வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும்.

பொ. வேண்டிய = விருப்பியவற்றை, வேண்டியாங்கு = விரும்பியபடி, எய்தலான் = அடைதலான், ஈண்டு = இவ்வுலகத்தில், செய்தவம் = செய்யவேண்டிய தவம், (ஒருவனால்),
பட, படும் = பொருந்தும்.

முயல = முயற்சிக்கப்

(1) நல்வினை செய்தார்க்கு (மணக்).
(2) ச்யவனமுனிவர் இந்திரனைத் துன்புறுத்தி அச்வினிதேவதைகளுக்கு ஸோமயாகத்தில் அவிர்ப்பாகம் அடைவித்தல் இக்குறளுக்கு உதாரணமாகும.

(3) cf. यद्दुरापं दुराम्नायं दुराधर्षं दुरन्वयम् ।
तत्सर्वं तपसा साध्यं तपो हि दुरतिक्रमम् ॥ [म.भा.अश्वमे.51,17]

மாண்ட மனம்பெற்றார் மாசி றுறக்கத்து
வேண்டிய வேண்டியாங் கெய்துதல் வாய். (கலித். 143, 45-46)

## 115

மேலும்,

265 சுடச்சுடரும் பொன்போ
லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.[1]

போ. சுட = நெருப்பில் சுடப்பட, சுடரும் = பிரகாசிக்கும்,
பொன்போல் = தங்கம்போல், நோற்கிற்பவர்க்கு = தவத்தார்க்கு,
துன்பம் = குற்றங்கள், சுடச்சுட = மிக
எரிக்கப்பட்டு நீங்க, ஒளி =

தேஜஸ், விடும் = வெளிவிடப்படும்.

மேலும்,

266 [2]தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய

6 மன்னுயி ரெல்லாந் தொழும்.

போ. *தன்னுயிர் = தன்னுடைய உயிரை, தான் = தானாக, அறப்பெற்றானை = தன்வசப்படுத்தியவனை, ஏனைய = மற்ற, மன்னுயிரெல்லாம் = நிலைபெற்ற பிராணிகள் எல்லாம், தொழும்.*

மேலும்,

267

7

[3]கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
ணாற்ற றலைப்பட் டவர்க்கு.

போ. *நோற்றலின் ஆற்றல் = தவத்தின் பலத்தை, தலைப்பட்டவர்க்கு = அடைந்தவர்க்கு, கூற்றம் = யமனை, குதித்தலும் = நீக்கலும், கைகூடும்.*

*தவஞ்செய்வார் மிகுதியாக இல்லாமையால் யாது பயன் எனின்*

268 இலர்பல ராகிய காரண நோற்பார்

8 சிலர்பலர் நோலா தவர்.

போ. இலர்=ஏழைகள், பலர் ஆகிய காரணம்=மிகுதி ஆக இருத்தற்குக் காரணம், நோற்பார் சிலர்=தவஞ்செய்வார் சிலர் (ஆகவும்), நோவாதவர் பலர்=தவஞ்செய்யாதவர் பலர் (ஆகவும்), (இருத்தலே ஆகும்).

(1) cf. दह्यन्ते ध्मायमानानां धातूनां हि यथा मलाः ॥
(2)

तथेन्द्रियाणां दह्यन्ते दोषाः प्राणस्य निग्रहात् ॥ [मनु.5,71]
தன்னுயிரானது தானென்று கருதுங் கருத்து அறப்பெற்றவனே (மணக்.).

(3) cf. संचरन्ति तपो घोरं व्याधिमृत्युविवर्जिताः ।
स्ववशादेव ते मृत्युं भीषयन्ति च नित्यशः ॥ [म.भा.अनु.210,31]

116

அவ்வாறாயின் இல்லறத்தார் ஏன் தவத்தைச் செய்யவில்லை எனின்,

269/9 துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன் [1]மற்றை யவர்க டவம்.

போ. துறந்தார்க்கு = துறவறத்திலுள்ளவர்க்கு, துப்புரவு வேண்டி = உபசாரத்திற்காக, மற்றையவர்கள் = இல்லறத்திலுள்ளார்கள், தவம் = தவத்தை, மறந்தார்கொல் = மறந்தாரோ ?

துறந்தார்க்குக் கடமை யாது எனின்,

**270**
**10**

தவஞ்செய்வார் தங்கருமஞ்[2] செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.[3]

போ. தவம் செய்வார் துறந்தார் = தவம் செய்யும் துறந்தார், தம் கருமம் செய்வார் = தம்முடைய கடமையைச்செய்தவர் (ஆவர்). மற்று அல்லார் = மற்றவர், ஆசையுள்பட்டு = ஆசையோடுபொருந்தி, அவம் = கேட்டினை, செய்வார் = செய்தவர் ஆவர்.

துறந்தார்க்கு என்பது அதிகரிக்கப்பட்டு, துறந்தார் என மாற்றப்பட்டது.

---

## 28. கூடாவொழுக்கம்.

---

கூடாவொழுக்கம் என்பதற்குப் பொருந்தாத பது பொருள்.

ஒழுக்கம் என்

தவத்திற்குத் தகாத ஒழுக்கங்களை நீக்குதற்குத் பின்னர் கூடாவொழுக்கம் என்பதைக் கூறினர்.

தவத்தின்

கூடாவொழுக்கம் என்ற பொருளில் சொல்லையும் வழங்கினர்.
படிற்றொழுக்கம் என்ற

தவவேடம் பூண்டு தகாத ஒழுக்கத்தைக்

கொண்டவரை
அவருடலில் உள்ள ஐந்து பூதங்களும் பரிகசிக்கும்; அவரே பின்னர் தாம் என் அவ்வாறு செய்தோம் என்று வருந்தும்படி தீமையை

(1) கள் என்ற விகுதி அஃறிணையியற்பெயரிலே உறழ்ச்சியாக வருமெனத் தொல்காப்பியத்திற் கூறப்படினும் (தொல். சொல். 170), ஈண்டு உயர்திணையில் அது வழங்கப்பட்டமையின், திருக்குறள் தொல்காப்பியத்திற்குப் பிற்பட்டது என்பதற்கு இஃதும் ஒரு சான்றாகும்.
(2) கருமம் = கர்ம.
(3) ஆசையிற்பட்டு (மணக். பா.).

117

அவ்வொழுக்கம் விளைவிக்கும்; மனம் தீதாயிருக்கும்போது உயர்ந்த

தோற்றம் ஒரு பயனையுந் தாராது ; அவர்
புலித்தோலைப்போர்த்து வயலில் மேயும்
பசுவினைப்போன்றவர்; புதரில் மறைந்து பட்சிகளைக்
/ கொல்லும் வேடனைப்போன்றவர் ; வெளியில்
செம்மையாகவும்
உள்ளே கறுப்பாகவுமுள்ள குன்றியைப் போன்றவர்;
அவரைப்போல்
கொடியவர் இல்லை ; அவ்வாறு இருப்பாரே பலர் ;
கணை தோற்றத்
திற்கு நேர்மையாகவும் செயலில் கொடியதாகவும்
இருத்தலானும்,
யாழ் தோற்றத்திற்குக் கோணலாகவும்
செயலில் இனிமையைத்
தருவதாகவும் இருத்தலானும் தோற்றத்தைக்
கொண்டு மயங்காது
செயலாலே ஒருவர் தன்மையை
அறிதல் வேண்டும் ; கூடாவொழுக்
கத்தை நீக்கிய துறவறத்தார்க்கு மயிரை
நீட்டலும் மழித்தலும்
வேண்டா ; எனக் கூறினர்.

**271** [1]வஞ்ச மனத்தான்
படிற்றொழுக்கம் [2]பூதங்க
1 ளைந்து மகத்தே நகும்.

பொ. வஞ்சமனத்தான்படிற்றொழுக்கம் = கூடிய மனத்தையுடையவனுடைய குற்றமுள்ள

வஞ்சகத்தோடு

நடத்தையை,
அகத்து = உடலிலுள்ள, பூதங்கள் ஐந்தும் = ஐந்து பூதங்களாகிய ஐந்து இந்திரியங்களும், நகும் = பரிகசிக்கும்.

கூடாவொழுக்கம் தவத்தார்க்குப் பின்னர் எதனைத் தரும் எனின்,

**272** பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க[3] மெற்றெற்றென்
2 றேதம் பலவுந் தரும்.

பொ. பற்று அற்றேம் = பற்றினை நீக்கினோம், என்பார்படிற்றொழுக்கம் = என்று கூறுபவரின் கூடாவொழுக்கம், எற்று எற்று = என் செய்தோம் என் செய்தோம், என்று, (கூறும்படி), ஏதம் பலவும் = துன்பம் பலவும், தரும் = உண்டுபண்ணும்.

(1) cf. वञ्चनम्.

(2) பூதம் என்பது உயர்திணையாகத் தொல்காப்பியத்திற் கூறப் படினும், ஈண்டு கள்விகுதி கொண்டது நோக்கற்பாலது. (தொல். சொல். 57).

(3) cf. எற்றென் கிளவி யிறந்த பொருட்டே, (தொல். சொல். 263). எற்றென்பது இசைச்சொல், இது நிமைபயக்குமென்றது (மணக்.).

குற்றமுள்ள நெஞ்சத்தார்க்கு நல்ல தோற்றத்தால் பயன் உண்டோ எனின்,

**273** வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
3 [1]தானறி குற்றப்[2] படின்.

போ. தன் நெஞ்சம் = தன்னுடைய மனம், தானறிகுற்றப் படின் = தானே அறிந்த குற்றத்தின்கண் பொருந்துமானல், வானுயர்தோற்றம் = ஆகாசத்தை அளாவுமாறுள்ள தோற்றம், எவன் செய்யும் = என்ன செய்யும்?

ஒருபயனையுந் தாராது என்பது கருத்து.

கூடாவொழுக்கத்தையுடைய தவத்தார் யார்போல் இருக்கின்றார் எனின்,

**274** வலியி னிலைமையான்

வல்லுருவம்³ பெற்றம்
4 புலியின்றேல் போர்த்துமேய்ந் தற்று.

போ. வலியினிலைமையான் = மனத்திண்மையில்லாத தவத்தான், வல்லுருவம் = தவவேடங்கொள்கை, பெற்றம் = மாடு, புலியின் தோல் = புலியினது தோலை, போர்த்து, மேய்ந்தற்று = மேய்ந்ததைப் போன்றது.

மேலும்,

275 ‘தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
5 வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

போ. (ஒருவன்), தவம் = தவவேடத்தின்கண், மறைந்து, அல்லவை செய்தல் = கூடாவொழுக்கத்தைக் கொள்ளுதல், புதல் = புதரின்கண், மறைந்து, வேட்டுவன் = வேடன், புள = பறவைகளை, சிமிழ்த்தற்று = வலையிற்கட்டுதலை யொத்தது.

மேலும்,

276 புறங்குன்றி கண்டனைய ரேனு

மகங்குன்றி

6 மூக்கிற் கரியா ருடைத்து.

பொ. (அவர்), புறம் = வெளிப்புறத்தில், குன்றி = குன்றி மணியை, கண்டு = ஒத்து, அனையரேனும் = அத்தன்மையுடையரேனும், அகம் = உள்ளத்தில், குன்றிமூக்கின் = குன்றிமணியின் மூக்கைப்போல், கரியார் = கறுத்த அவரை, உடைத்து, (இவ்வுலகம்).

(1) தான்—அசை (மணக்.)
(2) குற்றம் (மணக் பா.)
(3) வல்லுருவம்—ஆகுபெயர்.
(4) தவம்—ஆகுபெயர்.

119

அவரைக்காட்டிலும் கொடியவர் உண்டோ எனின்,

277
7

நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து[1]

வாழ்வாரின் வன்கணு ரில்.

போ. நெஞ்சில் = மனத்தால், துறவார் = துறக்காது, தோற்றத்தால், துறந்தார்போல், வஞ்சித்து வாழ்வாரின் = மோசஞ்செய்து வாழ்வாரைக்காட்டிலும், வன்கணார் = கொடியோர், இல் = இல்லை.

தோற்றம் என்பது அதிகரிக்கப்பட்டு தோற்றத்தால் என மாற்றப்பட்டது.

அவ்வாறுள்ளவர் பலரா சிலரா எனின்,

278 மனத்தது மாசாக [2]மாண்டார்நீ ராடி

8 மறைந்தொழுகு மாந்தர் பலர்.

போ. மாசு = குற்றம், மனத்தது = மனத்தில் இருப்பது, ஆக, மாண்டார்நீர் = மாட்சிமைப்பட்டவருடைய நீர்மையை, ஆடி = கொண்டு, மறைந்து ஒழுகும் மாந்தர் = வஞ்சனை செய்து நடக்கும் மனிதர், பலர், (ஆவர்).

யும்

தோற்றத்தால் ஒருவரை அறியவேண்டுமோ அன்றி அவர் செயலால் அறியவேண்டுமோ எனின்,

செய்

**279** கணைகொடிது யாழ்கோடு
செவ்விதாங் கன்ன
**9** வினைபடு பாலாற் கொளல்.

பொ. கணை = அம்பு, (செயலால்) கொடிது; யாழ்கோடு = யாழின் கொம்பு, (செயலால்), செவ்விது = நல்லது; ஆங்கு அன்ன = அப்படியே, வினைபடுபாலால் = செயலோடு பொருந்திய பகுதியால், கொளல் = அறியவேண்டும்.

அவரிடம் கூடாவொழுக்கம் இல்லாவிடின் யாவை வேண்டாம் எனின்,

**280** [3]மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
**10** பழித்த தொழித்து விடின்.

பொ. உலகம் = உலகத்தார், பழித்தது = ஆகாதென்று கூறியதை, ஒழித்துவிடின் = ஒழித்துவிட்டால், மழித்தலும் = மொட்டையிடுதலும், நீட்டலும் = சடையிடுதலும், வேண்டா, (ஆகும்).

(1) தானஞ் செய்வாரை வஞ்சித்தது (பரிமே.)
(2) மாட்சிமையுடையாராய் நீரின் மூழ்கிக்காட்டி (பரிமே.)
(3) மழித்தல் ஸந்நியாஸிகளில் சிலர்க்கும், நீட்டல் வானப்பிரஸ்தர்களுக்கும் விதிக்கப்பட்டன,

# 29. கள்ளாமை.

கள்ளாமை என்பதற்கு ஒருவரையும் வஞ்சியாதிருத்தல் என்பது பொருள்.

கூடாவொழுக்கத்தை நீக்கப் பொதுவாகக் கூடாவொழுக்கம் என்ற அதிகாரத்திற் கூறி, அதன் பின்னர் கள்ளாமை, பொய்சொல்லாமை, வெகுளாமை, இன்னுசெய்யாமை, கொல்லாமை இவற்றைக் கூறினார்.

துறவறத்தில் உள்ளார் பிறரால் இகழப்படாது இருத்தல் வேண்டின் அவர் தம்மனத்திலிருந்து வஞ்சனையை நீக்கவேண்டும்; பிறர்பொருளை வஞ்சித்துக்கொள்வோம் என நினைத்தலும் தீது; அவ்வாறுகிடைத்த ஆக்கம் அழியும்; வஞ்சனையில் மிகுத்த

ஆசை நீங்காத்துன்பத்தைத் தரும்; வஞ்சனையில் நோக்கமுள்ளவரி

டத்து அருள் இராது; களவில் பேராசையுள்ளவர் பிரமாணப்படி

நடக்க ஆற்றலில்லாதவர்; பிரமாணத்தைஅறிந்தவர் வஞ்சனை செய்யார்; பிரமாணமறிந்தவர்மனத்தில் அறமும் களவறிந்தார் மனத்தில் பொய்யும் நிற்கும்; களவைத் தவிர்த்து வேறு செய்யத் தெரியாதவர் பிரமாணமற்ற செய்கைகளைச் செய்து ஆங்கே அழிவர்; வஞ்சனையுள்ளார் இம்மையிலுந் துன்பப்படுவர் வஞ்சனையில்லாதார் சுவர்க்கத்தை அடைவர்; எனக் கூறினர்.

281

[1]எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்
1 கள்ளாமை காக்கதன் னெஞ்சு.

[தோன்றுங்

போ. எள்ளாமை=பிறரால்

பழிக்கப்படாமையை, வேண்டு

வான் என்பான்=விரும்புவான் என்பவன், எனைத்து ஒன்றும்= எவ்வகைப்பட்டதையும், கள்ளாமை=வஞ்சித்து அடையாதிருக்க வினின்றும், தன் நெஞ்சு=தன்னுடைய மனத்தை,

வேண்டும்.

காக்க = காத்தல்

(1) பிறரால் இகழப்படாமை (மணக்.) வீட்டினை இகழாது (பரிமே.) வீட்டினையிகழ்தலாவது காட்சியே அளவையாவதென்றும்... சொல்லும் உலோகாயத முதலிய மயக்கநூல்களைத் தெளிந்து அவற்றிற் கேற்ப ஒழுகுதல். ஞானத்திற்கேதுவாய மெய்ந்நூற்பொருளையேனும் ஆசிரியனை வழிபட்டன்றி அவனை வஞ்சித்துக்கொள்ளின் அதுவுங் களவா மாகலின் எனைத்தொன்று மென்றார் (பரிமே.).

## 121

மேலும் என் கள்ளாமை வேண்டும் எனின்,

**282**
**2**

[1]உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

போ. பிறன்பொருளை,

கள்ளத்தால் = வஞ்சனையால், கள்வேம் = திருடுவோம், எனல் = என்பதை, உள்ளத்தால் = மனத்தால், உள்ளலும் = நினைத்தலும், தீது = கெட்டது (ஏ-அசை)

மேலும்,

**283**

[3]களவினா லாகிய வாக்க மளவிறந்[3]
3 தாவது போலக் கெடும்.

பொ. களவினால், ஆகிய, ஆக்கம், அளவு இறந்து = எல்லை கடந்து, ஆவது போல = மிகுவது போல, கெடும்.

மேலும்,

284 களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
4 [4]வீயா விழுமந் தரும்.

பொ. களவின்கண், கன்றிய காதல் = மிகுந்த ஆசை, விளைவின்கண் = பயனைத்தரும்போது, வீயாவிழுமம் = நீங்காததுன்பத்தை, தரும் = உண்டுபண்ணும்.

வஞ்சனையுள்ளவரிடத்து யாது இராது எனின்,

285
5

அருள்கருதி [5]யன்புடைய ராதல் பொருள்கருதிப் பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

(1) பிறன்பொருளை நெஞ்சினால் நினைத்தலுந் தீதாம்; ஆதலால் அதனை மறைவினாலே கள்வேமென்று முயலாதொழிக. (மணக்.) குற்றங்களைத் தந்நெஞ்சாற் கருதுதலுந் துறந்தார்க்குப் பாவம்; ஆதலால் பிறனொருவன்பொருளை அவன் அறியாவகையால் வஞ்சித்துக்கொள்வேமென்று கருதற்க. (பரிமே.) "உள்ளத்தாலென வேண்டாது கூறினார்" எனப் பரிமேலழகர் கூறினர். அவ்வாறு கூறுதலே உலகவியற்கை என்பது நோக்கத்தக்கது.

(2) களவினால் என்றவிடத்து 'ஆல்' உருபு வழங்கப்பட்டது நோக்கத்தக்கது.

(3) "அளவறிந்தென்று பாடமோதி அவர் பயன்கொள்ளுமளவறிந்து அவ்வளவிற்கு உதவாது கெடுமென்றுரைப்பாருமுளர்" (பரிமே).

(4) இது நரகம் புகுத்தும் என்றது (மணக்.)

(5) அதன்மேல் அன்புடையாரயொழுகுதல் (பரிமே.)



# 122

பொ. பிறன்பொருள் = பிறனுடைய பொருளை, கருதி = நினைத்து, பொச்சாப்பு = மறதியை, பார்ப்பார்கண் = எதிர்பார்க்கின்றவரிடத்து, அருள்கருதி = அருள்காரணமாக, அன்புடையர் ஆதல் = (பிற உயிர்களின்மேல்) அன்போடு இருத்தல், இல் = இல்லை.

பிறன் என்பது அதிகரித்தது.

களவில் பேராசையுள்ளவர் எதைச் செய்ய
ஆற்ருதவர் எனின்,

**286** [1]அளவின்க ணின்ருெழுக
**6** கன்றிய காத லவர்.

லாற்ருர் களவின்கட்

பொ. களவின்கண் = வஞ்சனையில், கன்றிய
காதலவர் = மிக்க
பேராசையுள்ளவர், அளவின்கண் நின்று = சாஸ்திர
பிரமாணப்படி,
ஒழுகல் ஆற்ருர் = நடக்கமுடியாதவர், (ஆவர்).
பிரமாணப்படி நடப்பவரிடம் வஞ்சனை
இராதா எனின்,

**287** களவென்னுங் காரறி
வாண்மை [2]யளவென்னு
**7** மாற்றல் புரிந்தார்க ணில்.

பொ. அளவு என்னும் ஆற்றல்
புரிந்தார்கண் = பிரமாணப்
படி ஒழுகல் என்ற ஆற்றலை
உடையவரிடத்தில், களவு என்னும்
காரறிவாண்மை = வஞ்சனை என்ற தீய

அறிவுடைமை, இல்=இல்லை.
ஆகலின் அளவறிந்தார் களவறிந்தார் இவ்விருவருடைய மனங்
களில் யாது நிற்கும் எனின்,

**288**
**8**

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு

பொ. அளவறிந்தார் நெஞ்சத்து= பிரமாணங்களை அறிந்த
வரின் மனங்களில், அறம்போல, களவறிந்தார் நெஞ்சில்=வஞ்சனை
யறிந்தார் மனங்களில், கரவு=பொய், நிற்கும்=நிலைபெறும்.

களவைத் தவிர்த்து வேறு செய்யத் தெரியாதவரின் நிலை யாது
எனின்,

**289**
**9**

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்று தவர்.

(1) அளவு—சோர் (மணக்.); உயிர்
நெறி (பரிமே)
முதலியவற்றை அளத்தலாகிய
(2) அளவு—ஆகுபெயர்;

123

பொ. களவல்ல=வஞ்சனையைத்தவிர்த்து, மற்றைய=வேறாகியவற்றை, தேற்றாதவர்=செய்யத்தெரியாதவர், அளவல்ல=பிரமாணங்களில் கூறப்படாதனவற்றை, செய்து, ஆங்கே=அப்பொழுதே, வீவர்=கெடுவர்.

ஆகவின் கள்வார்க்கும் கள்ளார்க்கும் மாறுபாடு யாது எனின்,

290 கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை[1] கள்ளார்க்குத்
10 தள்ளாது புத்தே ளுலகு.

பொ. கள்வார்க்கு=வஞ்சனையுள்ளவர்க்கு,

உயிர்நிலை(உம்) =
இம்மைவாழ்க்கையும், தள்ளும் = தவறும்;
கள்ளார்க்கு = வஞ்சனை
யில்லாதார்க்கு, புத்தேளுலகு(உம்)
= சுவர்க்கமும், தள்ளாது =
தவறாது.
இரண்டு உம்மைகள் தொக்கன.

---

## 30. வாய்மை.

---

வாய்மை என்பதற்கு உண்மை என்பது பொருள்.

கூடாவொழுக்கமல்லதன் மற்றொரு பிரிவாகிய வாய்மையைக் கள்ளாமையின் பின்னர் ஆசிரியர் கூறினர்.

வாய்மை என்பது பிறர்க்குத் தீமையைப் பயக்காத சொல்;
குற்றமற்ற நன்மையைப் பயக்குமாயின் பொய்ம்மையும் வாய்மையாகக்

கருதப்படும்; தன் மனம் அறிந்து பொய் சொல்லின் தன் மனமே
வருத்துமாகலான் மனம் அறிந்து பொய் சொல்லக்கூடாது; அவ்
வாறு இருப்பவனை உலகத்தா ரெல்லாரும் மனத்துள் வைத்துக்
கொள்வர்; மனமார உண்மை சொல்லுபவன் தவம் தானம் இவற்
றைச் செய்வாரைக் காட்டிலுஞ் சிறந்தவன்; பொய்கூறுமை
சிறந்த புகழினையும் மற்ற அறச்செயல்களின் பயனையும் தரும்; அப்பொய்யாமையைத் தவறாது செய்யின் வேறு அறங்களைச் செய்தல் வேண்டாம்; நீர் உடலைச் சுத்தஞ்செய்யுமாறு வாய்மை மனத்

(1) உயிர்நிலை—வீடு (மணக்.), உடம்பு (பரிமே.)



னதச் சுத்தஞ் செய்யும்: அறவறத்தார்க்கு இருளைப் போக்கும் விளக்குக்களுள் வாய்மையைக்காட்டிலும் சிறந்த விளக்கு இல்லை; வாய்மையைக்காட்டிலும் சிறந்ததாக மெய்ந்நூல்களில் ஒன்றுங் கூற வில்லை; எனக் கூறினர்.

291/1 [1]வாய்மை யெனப்படுவ தியாதெனின்
தீமை யிலாத சொலல். [யாதொன்றுந்

பொ. வாய்மை = உண்மை, எனப்படுவது = என்று கூறப்படுவது, யாது எனின் = யாது என்று கேட்டால், யாது ஒன்றும் = பிற பிராணி ஒன்றற்கும், தீமை இலாத = தீங்கைத் தாராத சொற்களை, சொலல் = சொல்லுதல், (ஆகும்).

உண்மையாயினும் தீமை பயப்பதைக் கூறக்கூடாது என்பதும் பெறப்படும்.

அவ்வாறாயின் நன்மையைப் பயக்கும் எனின்,

பொய்யைக் கூறலாமா

292/2

பொய்ம்மையும் வாய்மை யிடத்த[2] புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

பொ. பொய்ம்மையும் = பொய்யும், யாதொன்றும் = பிற பிராணி ஒன்றற்கும், புரைதீர்ந்த நன்மை = குற்றம் அற்ற நன்மையை, பயக்கும் எனின் = உண்டுபண்ணினுல், வாய்மையிடத்த = உண்மையை ஒக்கும்.

யாதொன்றும் என்பது அதிகரித்தது.

உயிர்க்கு ஆபத்து வருமளவிலும், மணத்தை நடப்பிக்கும் போதும் கூறும் பொய் மெய்யாகும் என மாபாரதத்திற் கூறியது காண்க.[3]

(1) cf. यद्भूतहितमत्यन्तं तत्सत्यमिति धारणा ।
[म.भा.वन.213,4:216,47:, म.भा.शान्ति.329,13]

(2) பொய்ம்மையும் வாய்மையிடத்த—ஒருமை பன்மை மயக்கம்.

(3) प्राणांतिके विवाहे च वक्तव्यमनृतं भवेत् ।
अनृतेन भवेत् सत्यम्.........॥ [म.भा.वन.213,3]
अनृतं नानृतं स्त्रीषु परिहासविवाहयोः ।
आत्मप्राणार्थघाते च तदेवोत्तमतां व्रजेत् ॥ [म.भा.आदि.76,26]
विवाहकाले रतिसंप्रयोगे प्राणात्यये सर्वधनापहारे ।

विप्रस्य चार्थे ह्यनृतं वदेत पंचानृतान्याहुरपातकानि ॥ [म.भा.कर्ण.72,34]
येन्यायेन जिहीर्षन्तो धर्मं पृच्छन्ति कस्यचित् ।
श्रेयस्तत्रानृतं वक्तुं सत्यादिति विनिश्चितम् ॥
[म.भा.कर्ण.72,61]

125
மனமறிந்து பொய் சொல்லாமா எனின்,

293 தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
3 றன்னெஞ்சே தன்னைச் சுடும்.

பொ. தன் நெஞ்சு = தன்னுடைய மனம், அறிவது = அறி
வதை, பொய்யற்க = மாற்றிச்சொல்லாதிருத்தல் வேண்டும்.
பொய்த்தபின் = பொய்யைக்கூறிய பின்னர், தன் நெஞ்சே = தன்
னுடைய மனமே, தன்னை, சுடும் = துன்பப்படுத்தும்.

அவ்வாறு பொய் கூறாது இருந்தால் வரும் பயன் யாது எனின்.

**294** உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா[1]
4 ருள்ளத்து ளெல்லா முளன்.

பொ. (துறவி), உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் = மன
மறிந்து பொய் சொல்லாது நடந்தால், (அவன்), உலகத்தாருள்ளத்
துள் எல்லாம் உளன் = உலகத்தார் மனம் எல்லாவற்றுள்ளும் இருப்
பவன் (ஆவன்).

துறவி என்பது அதிகாரத்தாற் கிடைத்தது.

உலகத்தார் எல்லாராலும் போற்றப்படுவன்

என்பது கருத்து.

மேலும்,

**295**
**5**

மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.

பொ. (அறவி),

மனத்தொடு = மனம் அறிய, வாய்மை மொழியின் = உண்மையைச் சொன்னால், தவத்தொடு தானம் செய்வாரின் = தவம் தானம் இவற்றைச் செய்பவரைக்காட்டிலும், தலை = சிறந்தவன், (ஆவன்).

(1)

உலகத்தார்—உலகத்தார் (மணக்.); உயர்ந்தோர்.

(பரிமே)

---

மேலும்,

296
6

[1]பொய்யாமை யன்ன [2]புகழில்லை [4]பொய்யாமை
யெல்லா [3]வறமுந் தரும்.[5]

பொ. பொய்யாமை அன்ன = உண்மையைக் கூறுதலை ஒத்த, புகழ் = புகழிற்குக் காரணம், இல்லை. (ஏனெனில்), பொய்யாமை உண்மையைக் கூறுதல், எல்லாவறமும் = எல்லா தர்மச்செயல்களின் பயனையும், தரும்.

மேலும்,

297 [6]பொய்யாமை பொய்யாமை யாற்றி
னறம்பிற
7 செய்யாமை செய்யாமை நன்று.

பொ. பொய்யாமை பொய்யாமை ஆற்றின் = உண்மை கூறுதலை நிச்சயமாய்க்கொண்டால், பிற அறம் = வேறு அறங்களை, செய்யாமை நன்று = நிச்சயமாய்ச் செய்யாதிருத்தல் நல்லது.

பொய்யாமை போய்யாமை, செய்யாமை செய்யாமை என்ற அடுக்குக்கள் துணிவுப்பொருளைக் குறித்தன.

வாய்மையால் உண்டாவது யாது எனின்,

298 புறந்தூய்மை நீரா னமையு
மகந்தூய்மை
8 வாய்மையாற் காணப் படும்.

பொ. நீரான் = ஜலத்தால்,
புறந்தூய்மை = வெளிப்புறத்தின் சுத்தி,
அமையும் = உண்டாகும். (அதுபோல),
அகந்தூய்மை = மனத்தின் சுத்தி, வாய்மையால் = உண்மை கூறுதலால், காணப் படும் = உண்டாகும்.

(1) பொய்யாமை— பொய்யாமையுடையன்
(2), (3) புகழ், அறம் என்பன ஆகுபெயர்.
(4) பொய்யாமை (மணக். பா.); எய்யாமை

(மணக்.)

(பரிமே. பா.)
(6) cf.

अपुत्रस्यापि मे लोका भविष्यन्त्यसया दिवि ।
न हि जन्मप्रभृत्युक्तं मया किंचिदिहानृतम् ॥ (म.भा.आदि.107,109)

(6) பொய்யாமையைப் பொய்யாமல் செலுத்துவனுயின் பிற களைச் செய்தல் ஒன்றும் (மணக்.) பொய்யாமை பொய்யாமை

அறம் விடத்து ஒன்றைப்
என்ற மாகவும் கொண்டு,

பெயர்ச்சொல்லாகவும் மற்றொன்றை வினையெச்ச செய்யாமை செய்யாமை என்பது செய்தல் என்ற பொருளில் வந்ததாகவும் அவ்விரண்டும் கொள்ளுதல் ஆராய்தற்பாலது.

தொழிற்பெயர் எனவும் அவர்

127

மனத்தூய்மையை உண்டாக்கியபின்னர் வாய்மை எதனை உண்டாக்கும் எனின்,

299 எல்லா [1]விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்

9 [2]பொய்யா விளக்கே விளக்கு.

பொ. சான்றோர்க்கு = மேலோர்க்கு, எல்லா விளக்கும் = உலகத்தில் ஒளிதரும் பொருள்களெல்லாம், விளக்கு அல்ல; பொய்யா

விளக்கே = பொய்யாமையாகிய விளக்கே,
விளக்கு = இருளைப் போக்
கும் சாதனம் (ஆகும்.)
சித்தசுத்தி உண்டான பின்னர் அவித்தியை
நீங்கும் என்பது
கருதது.
சான்றோர்க்கு என்பது
கன்றி பிறர்க்கு சித்தசுத்தி
வேண்டாம் எனின், சான்றோர்க்
உண்டாகாமையின் சான்றோர்க்கு
என்றார்.
ஆகலின்,
300 யாமெய்யாக் கண்டவற்று
ளில்லையெனைத்
10 'வாய்மையி னல்ல பிற.
[தொன்றும்
பொ. மெய் ஆக = உண்மையாக, யாம்
கண்டவற்றுள், நாம்
கண்ட பொருள்களுள், எனைத்தொன்றும்
= எந்த வகையாலும்,
வாய்மையின் = உண்மையைக்காட்டிலும், நல்ல =

நல்லன ஆகிய,

பிற = பிறபொருள்கள், இல்லை.

வாய்மையே எல்லாவற்றுள்ளும் சிறந்தது என்பது கருத்து.

(1) விளக்கு—ஒளி (மணக்.)

(2) பொய்யா விளக்கு)—பொய்யாத விளக்கு என்பது குறைந்து நின்றது (பரிமே.) பொய்யாமையை ஆசிரியர் விளக்கிற்கு ஒப்பிட்டனர் என்பதை 'பொய்யாமையாகிய விளக்கே' என்ற தொடரால் பரிமேலழகரே குறிக்கின்றமையான், பொய்யாவிளக்கு என்பது பண்புத்தொகையாகும். அதன் விரி பொய்யாமையாகிய விளக்கு என்பதாம். ஆங்கு மை குன்றுதல் 'ஐம்பாலறியும் பண்புதொக மொழியும்' (தொல். எழுத். 4.2) என்பதனாற் பெறப்படும்.

(3) மெய் என்பதற்கு மெய்ந்நூல் எனப் பொருள்கூறினர் பரிமேலழகர். குறளின் நடையை நோக்கின் மெய்யாகக்கண்டவற்றுள் வாய்மை ஒன்றாக இருத்தல்வேண்டும் எனத் தோற்றுகின்றது. அவ்வாறாயின் அவர்தங்கூற்று ஆராய்த்தற்பாலது.

(2) cf.

नास्ति सत्यसमो धर्मः नसत्याद् विद्यते परम् । (म.भा.आदि.99,33)

## 31. வெகுளாமை.

வெகுளாமை என்பதற்குக் கோபித்துக்கொள்ளாமை என்பது பொருள். கூடாவொழுக்கமின்மையின் மற்றொரு பிரிவாகிய வெகுளாமையை வாய்மையின் பின்னர் ஆசிரியர் கூறினர். வாய்மையுற்றார்க்கு வாய்மையிலாதாரோடு பழகின் வெகுளி வருதல் இயற்கையாதலான், அதனை அடக்கவேண்டும் என்பதை உணர்த்த வாய்மையின் பின்னர் வெகுளாமையைக் கூறினர் எனினும் அமையும்.

கோபம் என்ற பொருளில் வெகுளி, சினம் என்ற சொற்களை வழங்கினர்.

கோபத்தால் யார்க்குத் தீங்கு வருமோ அவரிடம் கோபிக்காதிருத்தலே கோபத்தை அடக்குதல்; தன் கோபம் செல்லுமிடம் செல்லாவிடம் இரண்டிடத்தும் கோபித்தல் உண்டுபண்ணும்; ஆகலின் அதனை மறத்தல்வேண்டும்; ஒருவனுக்குப் புன்சிரிப்பையும் மகிழ்ச்சியையும் போக்கும் கோபத்தைக்காட்டிலும் சிறந்த பகை

வேறொன்றும் இல்லை ; ஒருவன் தன்னைக் காத்துக்கொள்ள விரும்பின் அவன் கோபத்தை அடக்காமல் இருப்பின் அவனைக் கெடுத்து விடுமாகையால் அதனை அடக்கவேண்டும் ; கோபாக்கினி அவனை மாத்திரமின்றி அது அவனுடைய க்ஷேமத்திற்குத் துணைக்காரண மான பெரியோர்களையும் அழித்துவிடும் ; கோபத்தை ஒரு பொருளாக மதித்து அதனைக்கொண்டவனுக்குக் கேடு நிச்சயம் வரும்; காட்டுத்தீ போன்று ஒருவன் இன்னுதகைதைச் செய்தாலும் அவனைக் கோபிக்காதிருத்தல் நன்று ; அவ்வாறு இருந்தால் அவன் விரும்பியதெல்லாம் கைகூடும் ; கோபத்தை அடக்காதவன் செத்தாரையும், அடக்கினவன் துறந்தாரையும், ஒப்பான் ; எனக் கூறினர்.

## 301

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்
[லிடத்துக்[1] [2]காக்கினென் காவாக்கா லென்.

(1) உயர்திணை என்பது அஃறிணை என நின்றாற்போல செலல் லிடத்து என்பது அல்லிடத்து என நின்றது.
(2) காக்கிலென் (மணக். பா.)

சினம் காப்பான்=கோபத்தை அடக்கினவன் (என்பவன்)

செல்லிடத்து=அக்கோபத்தின் பயன் செல்லக்கூடியவிடத்தில்,

காப்பான்=காப்பவன், (ஆவன்). (அவன்), அல்லிடத்து=செல்லக்

கூடாதவிடத்தில், காக்கின் என் = அடக்கினதால் என்ன,

காவாக்கால் என்=அடக்காவிட்டால் என்ன ?

அல்லிடத்துக் காத்தலும் காவாதிருத்தலும் பயனில் ஒன்றே

ஆதும் என்பது கருத்து.

கோபத்தின் பயன் யாது எனின்,

**302** [1]செல்லா விடத்துச் சினந்தீது[2] செல்லிடத்து[1]

**2** , மில்லதனிற் றீய பிற.

பொ. சினம்=கோபம்,

செல்லாவிடத்து=செல்லாதவிடத்
தில், (காட்டப்படின்), தீது=துன்பத்திற்கு ஏது, (ஆகும்). செல்
லிடத்தும்=செல்லக்கூடிய இடத்திலும், அதனின்=அக்கோபத்
தைக் காட்டிலும், தீய=கொடியன, பிற, இல்=
இல்லை.

ஆகலின் யாது செய்யவேண்டும் எனின்,

303 மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும்.[3]

பொ. அதனான்=அக்கோபத்தால், தீய பிறத்தல் வரும்= துன்பங்கள் நேரும். (ஆகலின்), யார்மாட்டும்=எவரிடத்தும், வெகுளியை=கோபத்தை, மறத்தல்=மறக்கவேண்டும்.

கோபமுள்ளவனுக்கு என்ன தீங்கு நேரும் எனின், அவனுக்கு இம்மையும் இல்லை மறுமையும் இல்லை என்றும், மனைவி, மக்கள்,

(1) செல்லிடம்—தனக்குக்குறைந்தவர்; செல்லாவிடம்—தனக்குக் குறைந்தவரல்லார்.

(2) தீது—ஆகுபெயர்.

(3) தீயபிறத்தலதனான் வரும்

தின் ஆறுவாதம்.

என்பது முற்குறளில் சொல்லப்பட்ட cf.

17

क्रोधमूलो विनाशो हि प्रजानामिह दृश्यते । (म.भा.वन.29,6)

130

நண்பர், உடன்பிறந்தார், வேலைக்காரர், தர்மம்,
உண்மை எல்லோரும்
அவனைவிட்டு நீங்குவர் என்றும் மாபாரதத்திற்[1]
கூறியது காண்க.
அதை மறக்கவேண்டும் என்பதற்கு வே
உளவோ எனின்,
று காரணங்களும்

304 நகையு முவகையுங் கொல்லுஞ்
சினத்திற்
4 பகையு முளவோ பிற.

பொ. நகையும்=புன்சிரிப்பையும், உவகையும்=மகிழ்ச்சியை யும், கொல்லும்=போக்கும், சினத்தின்=கோபத்தைக்காட்டிலும், பிறபகையும், உளவோ? இல்லை என்பது கருத்து.

மேலும்,

**305** தன்னைத்தான் காக்கிற்

சினங்காக்க காவாக்காற்

**5** றன்னையே கொல்லுஞ் சினம்[3].

பொ. (ஒருவன்), தன்னை, தான், காக்கின்=காத்துக்கொள்ள விரும்பினால், அவன், சினம்=கோபத்தை, காக்க=அடக்குதல் வேண்டும். காவாக்கால் = அடக்காவிட்டால், சினம் = கோபம், தன்னையே, கொல்லும்=துன்பப்படுத்தும்.

கோப முடையாரையன்றி வேறு

துமோ எனின்,

யாரையாவது துன்பப்படுத்

**306** சினமென்னுஞ் சேர்ந்தாரைக்

கொல்லி [3]யின

**6** மேமப் புணையைச் சுடும்.[4]

[மென்னு

பொ. சினம் என்னும் சேர்ந்தாரைக்கொல்லி=கோபமாகிய அக்கினி, (தன்னைக் கொல்லுவதேயன்றி), இனம் என்னும் ஏமப் புணையை=தனக்கு இனமாய் தனது க்ஷேமத்திற்குப் படகுபோன்ற குருவையும், சுடும்=வருத்தப்படுத்தும்.

(1) cf. कोधस्य यो वशं गच्छेत्तस्य लोकद्वयं न च ।
पुत्रो भृत्यः सुहृद्भ्राता भार्या धर्मश्च सत्यता ।
तस्यैतान्यपयास्यंति क्रोधशीलस्य निश्चितम्॥(म.भा.आदि.73,6-10)

(2) किंतु रोषान्वितो जन्तुर्हन्यादात्मानमात्मना । (म.भा.द्रो.157,94)
यो हि संहरते क्रोधं भावस्तस्य सुशोभने ।
यो न संहरते क्रोधं तस्याभावो भवत्युत ॥

(म.भा.वन.29,4)

(3) துறவறத்தார்க்கு குரு என்றார்.

துறவறத்தாரேயாவதால் இனம்

(4) "உருவகநோக்கி சுடுமென்றுந் தொழில் கொடுத்தாராயினும் அகற்றுமென்பது பொருளாகக்கொள்க" என்றனர் பரிமேலழகர். ஈஷ்டு

131

ஒருவனுக்கு ஸம்ஸாரமாகிய ஸாகரத்தைத் தாண்டுவதாகிய க்ஷேமம் குருவினுடைய உபதேசத்தால் உண்டாவதால், குருவை ஏமப்புணை எனக் கூறினர்.

ஏமப்புணையையும் என்றவிடத்துள்ள உம்மை தொக்கது. கோபத்தை ஒரு பொருளாக மதித்தவனுக்குக் கேடு நிச்சயமாய் வருமோ எனின்,

**307** சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு

7 நிலத்தறைந்தான்
கைபிழையா தற்று.

போ. சினத்தை=கோபத்தை, பொருள் என்று=பதார்த்தம் என்று, கொண்டவன்=கொண்டவனுக்கு, கேடு, நிலத்தறைந் தான் கை=பூமியை அறைந்தவனுடைய கை, கேடு=துன்பத்தில் பிழையாதற்று=தப்பாததை ஒத்தது.

கேடு என்பது இருமுறை கொள்ளப்பட்டது.

தமக்குத் தீங்குசெய்தாரிடத்தும் வெகுளாமை வேண்டுமோ எனின்,

**308** இணரேரி தோய்வன்ன இன்னா
செயினும்
8 புணரின் வெகுளாமை நன்று.

போ. இணரெரிதோய்வு அன்ன=காட்டுத்தீ போல, இன்னா செயினும்=தீங்குகளைச் செய்தாலும், புணரின்=முடிந்தால், வெகுளாமை=கோபிக்காமை, நன்று=நல்லது, (ஆகும்).

வெகுளாதிருத்தல் அரிது என்பதைக் குறிக்க, புணரின் என்றார்.

கோபத்தை அடக்கினால் யாது வரும் எனின்,

**309**

[2]உள்ளிய தெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின்[3].

हन्याद् गुरूनपि (रामा.सु.55,4) (வெகுண்டவன் குருவையுங் கொல்லுவான்) என்ற இராமாயணவாக்யத்தை நோக்கின் அவ்வாறு கொள்ளாது சுடும் என்றதற்கு நேரிதான பொருளைக்கொள்ளலாமெனத் தோற்றுகின்றது.

(1) நிலத்தெறிந்தான் (மணக். பா.)

(2) உன்னிய வெல்லாம் (மணக். பா.)

(3) cf. यः समुत्पतितं क्रोधमक्रोधेन निरस्यति ।
देवयानि विजानीहि तेन सर्वमिदं जितम् ॥ [म.भा.आदि.73,3]
तस्मादक्रोधनं यज्ञतपोदानफलंमहत् ॥ [म.भा.आदि.73,8]

# 132

போ.
உள்ளான்

வெகுளி = கோபத்தை, உள்ளத்தால் = மனத்தாலும், எனின் = நினைக்கவில்லை எனின், உள்ளியது எல்லாம் = (அவன்) நினைத்தது எல்லாம், உடன் எய்தும் = உடனே பலிக்கும்.

ஆகவின்,

310
10

இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

பொ. சினத்தை இறந்தார் = கோபத்தை கொண்டவர், இறந்தாரனையர் = செத்தாரை ஒப்பர்.

மிகுதியாகக்
சினத்தைத்

துறந்தார் = கோபத்தைப் போக்கியவர், துறந்தார்
தாரின் அளவில் உள்ளவர், (ஆவர்).

துணை = துறந்

## 32. இன்னாசெய்யாமை.

இன்னாசெய்யாமை என்பதற்குப்

பிறருக்குத் துன்பங்களைச்
செய்யாமை என்பது பொருள்.

கூடாவொழுக்கமின்மையின் மற்றொருபிரிவாகிய இன்னாசெய்யாமையை வெகுளாமையின் பின்னர்க் கூறினர். வெகுளாமை இருப்பின் இன்னாசெய்யாமை தானே வரும் என்பதை உணர்த்த அதன் பின்னர்க் கூறினர் எனினும் அமையும்.

இன்னாதன என்ற பொருளில் நோய், மாணா யும் ஆசிரியர் வழங்கினர்.

என்ற சொற்களை

பிறர்க்கு இன்னாதவற்றைச் செய்வதால் மோக்ஷத்தை அடைவிக்கும் பாக்கியம் வரினும் அதனைக் கொள்ளார் மேலோர்; பிறர்

கோபித்து தமக்கு இன்னாதவற்றைச் செயினும் அவர்க்குத் துன்பஞ் செய்யார் பெரியோர்; தாம் பிறர்க்கு இன்னாது செய்யாமலிருக்க அவர் தமக்குத் துன்பஞ் செயினும் அவர்க்கு இன்னாதவற்றைச் செய்தல் நீக்கக்கூடாத துன்பத்தைத் தரும்; இன்னா செய்தாரைத் தண்டித்தல் அவர் வெட்கப்படுமாறு அவர்க்கு நல்லவற்றைச் செய்தலே ஆகும்; பிறர்துன்பத்தைத் தன் துன்பம்போல் கருதாவிட்டால் அறிவிற்கு யாது பயன்; தான் துன்பம் என அறிந்தவற்றைப் பிறர்க்குச் செய்யாமல் இருக்கவேண்டும்

; மனத்தாலும்
ஒருபோதும் ஒருவர்க்கும் ஒருவகையாலும்
இன்னாதவற்றைச் செய்
யாமலிருத்தல் சிறந்தது ; தனக்கு இன்னாதன என
அறிந்தவற்றை



யும் பிறர்க்குச் செய்தல் என்ன காரணத்தால் ;
பிறர்க்கு முற்பகலில்
தீங்கு செய்தால் பிற்பகலில் தனக்குத் தீங்கு
வரும் ; பிறர்க்குத்
துன்பஞ் செய்தாரே துன்பத்தை அடைதலால்
தமக்குத் துன்பம்
வேண்டாதார் பிறர்க்குத் துன்பஞ் செய்யார் ; எனக்
கூறினர்.

**311** [1]சிறப்பீனுஞ் செல்வம் பெறினும்
பிறர்க்கின்னா

**1** செய்யாமை மாசற்றார் கோள்.[2]

பொ. சிறப்பு=மோக்ஷத்தை;
ஈனும்=கொடுக்கும், செல்வம் பாக்கியத்தை,
பெறினும்= அடைந்தாலும், பிறர்க்கு இன்னாசெய்

யாமை=பிறருக்கு இன்னாதவற்றைச் செய்யாமலிருத்தல், மாசற்றார் கோள்= குற்றமில்லாதார் கொள்கை, (ஆகும்.)

இன்னும் பெரியோர்கொள்கை யாது எனின்,

**312** கறுத்தின்னா [3]செய்தவக் கண்ணு மறுத்தின்னா
**2** செய்யாமை மாசற்றார் கோள்.

பொ. கறுத்து=கோபித்து, இன்னா=இன்னாதவற்றை, செய் தவக்கண்ணும் = செய்த அவ்விடத்திலும், மறுத்து = அதற்கு எதிராக, இன்னா செய்யாமை=இன்னாதவற்றைச் செய்யாமை, மாசற்றார்கோள்=குற்றமில்லாதாரின் கொள்கை, (ஆகும்.)

'கறுத்து' என்பதற்கு 'தாஞ்செய்த குற்றத்தினாலே வெகுண்டு' எனப் பொருள் கூறினர் மணக்குடவர். வருங்குறளில் 'செய்யாமற் செற்றார்க்கு' என இருத்தலான் அவ்வாறு கூறினர் ஆகும்.

துறவறத்தாரால் தீங்கு செய்யப்படாதவர் துறவறத்தார்க்குத் தீங்கு செய்தால் அத்தீங்கு செய்தார்க்குத் தீங்கு செய்யலாமா எனின்,

**313** செய்யாமற்[4] செற்றார்க்கு

மின்னாத செய்தலி
3 னுய்யா விழுமந் தரும்.

(1) சிறப்பு—மிகுதி (மணக்.); யோகம் (பரிமே.) வீடு என்ற பொருளில் 31-ஆவது குறளில் ஆசிரியர் வழங்கியிருத்தலான் அப்பொருளை இங்குக் கொள்ளல் தகும்.

(2) தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ (கலித். 62, 7-8)

(3) செய்தவற்கண்ணும் (மணக். பா.)

(4) செய்யாமை (மணக். பா.)

# 134

போ. இன்னாத = இன்னாதவற்றை,

செய்யாமல் = செய்யப் படாமல், செற்றார்க்கும் = கோபித்தவர்க்கும், இன்னாத = இன்னாதவற்றை, செய்தபின் = செய்தபின்னர், (அவை), உய்யா = போக்கக் கூடாத, விழுமம் = துன்பத்தை, தரும் = விளைவிக்கும்.

ஆகலின் இன்னாத செய்தவர்க்குத் செய்தல் வேண்டும் எனின்,

துறவறத்தார் யாது

## 314
### 4

இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல்.[1]

போ. இன்னா செய்தாரை, ஒறுத்தல்=தண்டித்தல், அவர் நாண=அவர் வெட்கப்படுமாறு, நன்னயம்=நல்லவற்றை, செய்து விடல்=செய்தல், (ஆகும்)

*பிறர்துன்பத்தைத் தன் துன்பம்போல் வாற் பயன் உண்டோ எனின்,*

*பாராதார்க்கு அறி*

## 315
### 5

அறிவி னாகுவ துண்டோ பிறிதினோய்[2]
தந்நோய்போற் போற்றாக் கடை.

போ. பிறிதின் நோய்=பிறபொருளின் வருத்தத்தை, தம் நோய்போல்=தம்முடைய வருத்தம் போல், போற்றாக்கடை= கருதாதவிடத்தில், அறிவினான்=அறிவால், ஆகுவது=ஆகும் பயன், உண்டோ? (இல்லை என்பது கருத்து.)

*அறிவு காரணம்பற்றி யாது செய்யவேண்டும் எனின்,*

## 316

6

இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல்.

போ. *தான் இன்னா என*

*உணர்ந்தவை = தான் இன்னாதன என்று உணர்ந்தவற்றை, பிறன்கண் செயல் = பிறர்க்குச் துன்னாமை வேண்டும் = கொள்ளாமை வேண்டும்.*

*செய்தலை,*

(1) செய்துவிடல்—*செய்து விடுக (மணக்.); மறத்தல் (பரிமே.)*

*அவ்விரண்டனையும்*

(2) *பிறிதுநோய் தன்னோய்போல் (மணக். பா.)*

135

*வாக்காலும் காயத்தாலும் இன்னாசெய்யாமை போதுமோ எனின்,*

317

7

எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானு[1]

மாறுசெய் யாமை தலை.

பொ. எனைத்தானும் = எவ்வகையாலும்,

எஞ்ஞான்றும் =
எப்போழ்தும், யார்க்கும், மனத்தானும்,
செய்யாமை, தலை = சிறந்தது, (ஆகும்.)

மாணு = இன்னுதவற்றை,

தன் துன்பம்போல் பிறர் துன்பத்தை
பிறர்க்குத் துன்பஞ் செய்கின்றான் எனின்,

அறிகின்றவன் ஏன்

**318** தன்னுயிர்க் கின்னுமை
தானறிவா னென்
**8** மன்னுயிர்க் கின்ன செயல்.
[கோலோ³

பொ. தன் உயிர்க்கு இன்னுமை = தனக்கு வரும் துன்பத்தை, தான் அறிவான் = தானே உணர்வான், மன்னுயிர்க்கு = நிலை பெற்ற பிராணிகளுக்கு, இன்ன செயல் = இன்னுதவற்றைச் செய்தல் என்கொலோ = எக்காரணம் பற்றியோ?

நூல்களாற் கொள்ளப்பட்ட அறிவு அனுபவத்திற்கு வருமளவில் அவ்வறிவால் முழுப்பயனும் அடையமுடியாது என்றும் அவ்வறிவு கடவுளருளால் அடையப்படவேண்டும் என்றும் அறிக.

பிறர்க்கு இன்னுதவற்றைச் செய்தால் யாது

நிகழும் எனின்,

**319**

**9**

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

பொ. முற்பகல்=பகலின் முற்பகுதியில், பிறர்க்கு, இன்னா செய்யின்=இன்னாதவற்றைச் செய்தால், பிற்பகல்=பகலின் பிற்பகுதியில், தமக்கு, இன்னா=இன்னாதன, தாமே வரும்.

ஆகலின் தமக்குத் துன்பம் வேண்டும் எனின்,

வேண்டாதார் யாது செய்ய

**320**

நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்
**10** நோயின்மை வேண்டு பவர்.
[செய்யார்

பொ. நோய் எல்லாம்=துன்பங்கள் எல்லாம், பிறர்க்கு, நோய் செய்தார்மேல=துன்பத்தைச் செய்தாரிடத்தன, ஆம்=ஆகும். (ஆகலான்), தமக்கு, நோயின்மை வேண்டுபவர், பிறர்க்கு, நோய் செய்யார்=துன்பங்களைச் செய்யார்.

பிறர்க்கு, தமக்கு என்பன முற்குறளிலிருந்து பிறர்க்கு என்பது இரண்டுமுறை கொள்ளப்பட்டது.

அதிகரித்தன.

(1)
(2)

மனத்தானும் (பரிமே. பா.)
என்கொலோ = யாதினைக்கருதியோ (மணக்.)

## 33. கொல்லாமை.

கொல்லாமை

என்பதற்குப் பிராணிகளின் உயிரை அவற்றின் உடலினின்றும் நீக்காமை என்பது பொருள்.

துறவறத்தின் முதல் நிலையில் உள்ளோர்க்குக் கொல்லாமை சிறந்த அறமாகையால் அதனை அவர்களின் அறங்களுள் இறுதிப் ஆய், துறவறத்தின் இறுதிநிலையில் உள்ளோரின் அறங்களாகிய நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் இவற்றின் முன் னரும் ஆசிரியர் கூறினர்.

கொல்லுதல் பாபச்செயல்களின் பயனைத் தருதலால் கொல்லாமை நல்லறமாகும்; நூலோர் தொகுத்துக் கூறியவற்றுள் சிறந்தது உணவைப் பகுத்து எல்லாப் பிராணிகளுக்கும் கொடுத்து காத்தலே; எல்லாவறங்களுள் பொய்யாமை சிறந்ததாயினும் அதைக்காட்டிலும் மிகச் சிறந்தது கொல்லாமையே; கொல்லாமையே மோக்ஷத்தை அடைவிக்கும் நல்லவழி; துறவறத்தார் தன்னைக் கொன்றாரையும் கொல்லக்கூடாது; இல்லறத்தார் வேள்விக்கண் கொல்லுதலால் நல்ல பயனை அடையினும் துறவறத்தார்க்கு அதனால் பயன் இல்லை; கொல்லாமையை ஏற்றவரே துறவறத்தாருள் சிறந்தார்; அவரை யமன் அணுகமாட்டான்; கொல்லுதலை மேற்கொண்ட துறவறத்தார் கன்மசண்டாளர் ஆவர்; பிணி வறுமை இவற்றை உற்றாரை முற்பிறப்பில் இவர் கொலைத்தொழில் செய்தவர் எனக் கூறுகின்றனர்; என உணர்த்தினர்.

## 321

[1]அறவினை யாதெனிற் கொல்லாமை [3]கோறல்

1 பிறவினை[2] யெல்லாந் தரும்.

பொ. கோறல்

= கொல்லுதல், பிறவினை எல்லாம் = பாபச் செயல்களின் பயனை எல்லாம், தரும். (ஆதலான்), அறவறத்தார்க்கு, அறவினை = நல்வினை, யாது எனின், கொல்லாமை, (ஆகும்).

அறவறத்தார்க்கு என்பது அதிகாரத்தாற் கிடைத்தது.

(1) அறவினை—நல்வினை (மணக்.)

அறங்களெல்லாமாகிய செய்கை (பரிமே). 909-ஆவது கூறியதுங் காண்க.

குறளில் அறச்செயல் எனப் பரிமேலழகர் பொருள்

(2) அறவினை என முன்னர்க் கூறியதனால் பிறவினை என்பதற்கு அறமல்வினை எனப் பொருளாகும். ஈண்டு அவற்றின் பயனைக்குறித்தலால், அஃது ஆகுபெயராகும்.

(3) cf. अहिंसा परमो धर्मः । [म.भा.अनु.213,5]



322 பகுத்துண்டு [1]பல்லுயி ரோம்புத

லூலோர்

2 தொகுத்தவற்று ளெல்லாந்

தலை.

போ. நூலோர் = சாஸ்திரங்கள்
எழுதிய பெரியோர்கள்,
தொகுத்தவற்றுள் எல்லாம் = தொகுத்த அறங்கள்
எல்லாவற்றுள்
ளும், தலை = சிறந்தது, பகுத்து = பிரித்து,
உண்டு = உண்பித்து,
பல்லுயிர் = பல பிராணிகளையும்,
ஓம்புதல் = காத்தல், (ஆகும்).

பகுத்துண்டு என்பதற்குப் பகுத்துக்கொடுத்தபிறகு தான் உண்டு எனப்பொருள் கூறினும் அமையும். பகுத்து ஓம்புதல் என்ற வினைகளின் பயன் பல்லுயிரிடத்துச் செல்லுதலால், உண்டு என்பதைப் பிறவினைப்பொருளில் வந்ததாகக் கொள்ளல் தகும்.

பொய்யாமையைத் தலையாகக் கூறியிருத்தலின் கொல்லாமை அதனைக்காட்டிலும் சிறந்ததன்றோ எனின்,

323/3 ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.

போ. கொல்லாமை, ஒன்று ஆக நல்லது = ஒப்பற்றது ஆக நல்ல அறமாவது. பொய்யாமை, அதன்பின் சார = அதன்பின் வர, நன்று = நல்ல அறமாவது. (மற்று வினைமாற்றுப்பொருளில் வந்தது).

மோக்ஷத்தை அடைய கொல்லாமை நல்ல வழி ஆகுமா எனின்,

324/4 நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.

போ. நல்லாறு = (மோக்ஷத்தை அடைவிக்கும்) நல்லவழி, எனப்படுவது = என்று கூறப்படுவது, யாது எனின், யாது ஒன்

(1) "பல்லுயிரும என்னும் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது" எனக் கூறினர் பரிமேலழகர். 'பல்' என்பது பல என்ற சொல்லின் விகாரமாகையாலும், அது 'எல்லாம்' எனப் பொருள்படாமையின் 'உயிர் என்பதை இனத்தெனவறிக்த சினைக்கிளவியாகவேனும் சினைத்தென வறிந்தமுதற்கிளவியாகவேனும் கொள்ளுதல் நேரிதாகாமையாலும் அவர் தங்கூற்று ஆராய்தற்குரியது.

(2) cf.

अहिंसा सर्वभूतानामेतत्कृत्यतमं मतम् । [म.भा.अश्व.50,2]

अनृतं तु भवेद्वाच्यं न तु हिंसा कदाचन । [म.भा.कर्ण.72,24]

सत्यं धर्म इति ह्येके वदन्ति बहवो जनाः ।

यत् स्यादहिंसासंयुक्तं स धर्म इति निश्चयः॥[म.भा.कर्ण.72,56,58]

(3) cf. अहिंसा परमं सुखम् ।

अहिंसा धर्मशास्त्रेषु सर्वेषु परमं सुखम् ॥

18

[म.भा.अनु.213,5]



றும் = ஒரு பொருளையும், கொல்லாமை = கொல்லாமையை, சூழும் = நினைக்கும், நெறி = வழி, (ஆகும்.)

துறவறத்தார் அடைய விரும்புவது மோக்ஷமேயாகையால்,

ஆறு என்ற சொல் ஆற்றலால் மோக்ஷத்தை அடைவிக்கும் வழி

எனப் பொருள்கொண்டது.

தம்மைக் கொல்லுபவரைத் துறவறத்தார் கொல்லலாமா.
எனின்,

**325** தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
5
தின்னுயிர் நீக்கும் வினை.

பொ. தன் உயிர் = தன்னுடைய உயிரை, நீப்பினும் = போக்கினும், தான் = துறவத்திலுள்ளவன், பிறி தின்னுயிர் = பிறிதின் பிரியமாயுள்ள உயிரை, நீக்கும் = போக்கும், வினை = செயலை, செய்யற்க = செய்தல் கூடாது.

இல்லறத்தார் வேள்விக்கண் பசுவைக் கொன்று நல்ல பயனை அடைகின்றமையின் துறவறத்தார்க்கும் ஆகாதா எனின்,

**326** 'நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
**6** கொன்றாகு மாக்கங் கடை.²

பொ. சான்றோர்க்கு = இல்லறத்திலுள்ள பெரியோர்க்கு, நன்று = வேள்வியாகிய அறத்தால், ஆகும் = உண்டாகும், ஆக்கம் = நன்மை, பெரிது எனினும் = பெரியது என்றாலும், சான்றோர்க்கு = துறவறத்தார்க்கு, கொன்று ஆகும் ஆக்கம் = கொல்லுதலான் உண்டாகும் நன்மை, கடை = இல்லை ஆகும்.

சான்றோர்க்கு என்பது இடையில் நின்று கொண்டது.

## இருபொருள்

துறவறத்தாருள் யார் சிறந்தவர் எனின்,

**327** ³நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
**7** கொல்லாமை சூழ்வான் றலை.

(1) நன்று—நன்மை (மணக்.) இன்பம் (பரிமே.) நன்று என்ற சொல்லை ஆசிரியர் பல இடங்களில் அறம் என்ற பொருளில் வழங்குகின்றமையாலும், இல்லறத்தார்க்கு வேள்விசெய்தல் ஒரு அறன் ஆகின்றமையாலும் ஈண்டு நன்று என்பதற்கு வேள்வி எனப் பொருள் கூறலாம்.

(2) cf. अहिंसापाश्रयं धर्मं दान्तो विद्वान् समाचरेत् । (म.आ.अनु.175,3)

(3) நிலை—மனைவாழ்க்கையில் நிற்றலை (மணக்.); பிறப்பு நின்ற நிலையை (பரிமே.)

பொ. நிலை = கிருஹஸ்தாச்சிரமத்தை, அஞ்சி = பயந்து, நீத்தாருள் எல்லாம் = துறவறங்கொண்டாருள் எல்லாம், கொலை அஞ்சி = கொல்லுதலை பயந்து, கொல்லாமை = கொல்லாமையை, சூழ்வான் = கருதுகின்றவன், தலை = சிறந்தவன், (ஆவன்),

நிலை என்பது பொதுவாய் ஆச்சிரமம் என்றனும், ஈண்டு கிருஹஸ்தாச்சிரமத்தையே குறிக்கும்.

பொருள்படி.

கொல்லாமையைக் கைக்கொண்டால் யாது பயன் எனின்,

328 கொல்லாமை மேற்கொண் டொழுகுவான்
8 செல்லா துயிருண்ணுங் கூற்று.[1] [வாழ்நாண்மேற்

பொ. கொல்லாமை = கொல்லாமையை, மேற்கொண்டு, ஒழுகுவான் வாழ்நாண்மேல் = நடப்பவனுடைய வாழ்நாளின்மேல், உயிர் = உயிரை, உண்ணும் = நீக்கும், கூற்று = யமன், செல்லாது = வாராது. அவ்வாறிருக்க.

கொல்லுதலைச் செய்பவர் யார் ஆவர் எனின்,

329
9

கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து.

யும்
பொ. கொலைவினையர் ஆகிய மாக்கள் = கொல்லுதலைச் செய்
மனிதர், புன்மை தெரிவாரகத்து = கீழ்த்தனத்தை அறிகின்
றவரின் கருத்தில், புலைவினையர் = கன்மசண்டாளர், (ஆவர்).
இப்பிறப்பில் வறுமை, பிணி முதலியவற்றால் துன்பப்படுகின்
றவரை யார் எனக் கூறுவர் எனின்,

330 உயிருடம்பி னீக்கியா ரென்ப
செயிருடம்பிற்

10 [2]செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

பொ. செயிருடம்பின் = வியாதியற்ற உடம்புடனே, செல்லாத்
தீவாழ்க்கையவர் = பயன்படாது இழிந்தவாழ்க்கை யுடையவர்,
உயிர் = உயிரை, உடம்பின் = உடம்பிலிருந்து, நீக்கியார் = (முற்
பிறப்பில்) போக்கியவர், என்ப = என்று கூறுவர்.

(1) ஒருவன் வானபிரஸ்தநிலையில்
இருப்பினும், அவனுக்கு அப்
பிறப்பில் கடவுள் இட்ட ஆயுள் முடிந்தவுடன் யமன் அணுகமாட்டானு
எனின், அற்றன்று. அவ்வாறு யமன் அணுகுதல் சாதாரணமாய் அறங்
களையோ பாவங்களையோ செய்வார்க்கே ஆகும்.
மிகச்சிறந்த அறங்களை
யோ மிகக்கொடிய பாவங்களையோ செய்வார்க்கு,

அவர் அவற்றின் பயனை அப்பிறப்பிலே நுகரவேண்டுமெனக் கருதி கடவுள் அவர்களுடைய ஆயுளை நீட்டிக்கிறார் என்பது பெரியோர்கொள்கை. cf. अत्युत्कटैः पुण्यपापैरिहैव फलमश्नुते. இதனைப் பரிமேலழகருங் கூறியது காண்க.

(2) செல்லா = ஊணுஞ்செல்லாத (மணக்.) வறுமைகூர்ந்த (பரிமே.) செல்வர்வாய்ச்சொற் செல்லும் (நாலடி. 115) என்ற விடத்திற்போல பயனுறும் என்ற பொருளில் 'செல்' என்றதைக் கொள்ளினும் அமையும்,

# 140

துறவறத்தில் உள்ளவர்க்குப் பொதுவாய் உள்ள அறங்களைக் கூறி, அவருள் ஸந்ந்யாசிகளாய் இருப்பவர்க்குள்ள சிறப்பறங்களாகிய [1]நிலையாமை, [2]துறவு, [3]மெய்யுணர்தல், [4]அவாவறுத்தல் என்ற நான்கையும் நான்கு அதிகாரங்களில் ஆசிரியர் கூறினார்.

# 34. நிலையாமை.

நிலையாமை என்பதற்கு நிலைத்திராமை (எப்பொழுதும் அழி வின்றி இராமை) என்பது பொருள். எவற்றின் நிலைத்திராமை எனின், கடவுளைத் தவிர்த்து ஏனைய பொருள்களின் என்க.

நிலையில்லாத பொருள்களை நிலைத்தனவாக அறிதல் இழிந்தது; செல்வம் வரும்போது கூத்தினைப் பார்க்கவரும் மனிதர்க்கூட்டம் போல் வந்து, போம்போது கூத்து முடியும்போது அவர் போம் போல் போகும்; ஆகலின் செல்வத்தைப் பெற்றால் உடனே நிலை யுற்ற பயனைத் தரும் அறங்களில் செலவிடவேண்டும்; ஆராய்ந்து பார்ப்பின் வாழ்நாள் ஒருவனுக்கு இணையற்றதாகத் தன்னைக் காட்டி அவன் உயிரை நீக்கும் வாள்போன்றது; ஆகலின் நாவால் சொற் களை உச்சரிக்கும் சக்தி அழிந்து விக்குள் எடுப்பதற்கு முன்னமே நல்வினையை விரைவில் செய்தல் தகும்;

ஒருவன் நேற்று இருந்
தான் இப்போது இறந்தான் என மக்கள்
கூறும் தன்மையை
உடைத்து இவ்வுலகம்; அடுத்த நிமிஷம்
வாழ்வார் எனத் தீர்மா
னம் இல்லாமலிருப்பினும் மக்கள் பலவற்றைக்
கோடிக் கணக்காக
மனக்கோட்டை கட்டுகின்றார்; உடம்பிற்கும்
உயிருக்கும் உள்ள
சம்பந்தம் முட்டைக்கும் பறவைக்கும் உள்ள
சம்பந்தம் போன்றது;
சாவும் பிறப்பும் தூக்கம் விழிப்பு இவை
போன்று அடுத்தடுத்து
வரும்; உடம்பில் சம்பந்தப்படாத
பிடம் அமையவில்லைபோலும்; எனக்

உயிர்க்கு நிலையுள்ள இருப்
கூறினார்.

331
———
1

நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்

புல்லறி வாண்மை கடை.

(1) நிலையாமை = नश्वरत्वम्

(2) துறவு = सन्न्यासः

(3) மெய்யுணர்தல் = नित्यानित्यवस्तुविवेकः

(4) அவாவறுத்தல் = वैराग्यम्

141

பொ. நில்லாதவற்றை = நிலையில்லாத பொருள்களை, நிலையின = நிலையுள்ளவை, என்று உணரும் = என்று நினைக்கும், புல்லறிவாண்மை = சிற்றறிவைக்கொள்ளுதல், கடை = இழிந்தது, (ஆகும்).

நிலையில்லாத பொருள்கள் செல்வம், வாழ்நாள், உடல் முதலியன.

செல்வத்தின் தன்மை யாது எனின்,

**332** கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
**2** போக்கு மதுவிளிந் தற்று.

பொ. பெருஞ்செல்வம் = பெரிய செல்வம், (வருதற்கண்), கூத்தாட்டவைக்குழாத்தற்றே = கூத்தாட்டத்தின் அவையில் வரும் கூட்டத்தை ஒத்தது. போக்கும் = போக்கின் கண்ணும், அது

விளிந்தற்று = அது கலந்தது போன்றது. ஒரே நிமிஷத்தில் வரும் என்பதும் ஒரே நிமிஷத்தில் கெடும் என்பதும் கருத்து. போக்கு என்ற பட்டது.

சொல்லின் ஆற்றலினால் வரல் என்பது பெறப்

ஆகலின் யாது செய்தல் வேண்டும் எனின்,

**333**
**3**

அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல்.

பொ. செல்வம் = பொருள், அற்காவியல்பிற்று = நிலையில்லாத தன்மையை உடையது; அது = அச்செல்வத்தை, பெற்றால் = அடைந்தால், ஆங்கே = அப்பொழுதே, அற்குப = நிலையுள்ளவற்றை, செயல் = செய்தல், (வேண்டும்).

வாழ்நாளின் தன்மை யாது எனின்,

**334**
**4** [1]நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

(1) இக்குறளுக்கு "நாளென்பது இன்பந்

தருவதொன்றுபோலக் காட்டி உயிரை யீர்வதொரு
வாளாம், அதனை யறிவாரைப் பெறின்"
எனப் பொருள் கூறினர் மணக்குடவர். "
நாளென்று அறுக்கப்படுவ
தொரு காலவரையறைபோலத் தன்னைக் காட்டி யீர்ந்து
செல்கின்ற வாளி
னது வாயது உயிர்-அஃதுணர்வாரைப் பெறின்" எனப் பரிமேலழகர்
பொருள் கூறி, "என வென்பது பெயரன்றி இடைச்சொல்லாகலானும்,
ஒன்றுபோற் காட்டி யென்பதற்கு ஒரு பொருட்சிறப்பின்மையானும்,

## 142

பொ. நாள் என = வாழ்நாட்கள்,
ஒன்றுபோல் = இணையற்
றனபோல், காட்டி = தோற்றுவித்து,
உயிர் = உயிரை, ஈரும் = நீக்
கும், வாள், (ஆகும்), அது = அதனை,
உணர்வார் = அறிவாரை,
பெறின் = பெற்றால்.

ஆகலின் யாது செயல்வேண்டும் எனின்,

335 நாச்செற்று விக்குண்மேல்
வாராமு னல்வினை
5 மேற்சென்று செய்யப் படும்.

பொ. விக்குள், நா = நாக்கின் சக்தியை,
செற்று = போக்கி,
மேல் வாராமுன் = மேமேல வராததற்கு முன்னரே,
நல்வினை = நல்ல
செயல்களை, மேற்சென்று = சீக்கிரமாக,
செய்ய = செய்தல், படும் =
பொருந்தும்.

அதுவென்பது குற்றியலுகரமன்மையானும்
அஃதுரையன்மை யறிக''
என மூன்று காரணங்களால் மணக்குடவரை
மறுத்தனர். மணக்குடவர்
'நாவென்பது என்றவிடத்து என
என்ற இடைச்சொல் பெயரைக்
குறித்த நிலத்து எனக் காட்ட 'என்பது' என
வழங்கினவென்றும்,
என என்றது அவ்வாறு பெயரைக் குறித்தல்

வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலத்தே எனவென் கிளவி (தொல்.
சொல். இடை (10)
என்ற சூத்திரத்திற் கூறப்பட்டமையானும், பெயரோடு
என்பதற்கு உதா
ரணமாக "நாவென ஒன்றுபோற் காட்டி" என

இவ்விடமே தெய்வச் சிலையாருரையில்
காணப்படுகின்றமையானும் " அழுக்காறெனை ஒரு பாவி "
என்றவிடத்து இவ்வாறே காணப்படுகின்றமையானும்
மறுப்பில் முதற்
காரணஞ் சிறக்காது. மூன்றாங் காரணம் ' அது
உணர்வார் என்றது
கருத்தாயின் ' அது வுணர்வார் என ஆசிரியர்
படித்திருப்பர், அவ்வாறு
படிக்காமையால் " வாளது உணர்வார் " எனப்
பதம் பிரித்தல் வேண்
டும் என்பது ;

உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொ
ன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின். (குறள் 257)
என்றவிடத்து

பரிமேலழகரே " புண் அது உணர்வார் " எனப் பதம்
பிரித்தனர் என்பது அவருரையால் விளங்கும்.
முற்றியலுகரமும் குற்றியலுகரம்போன்று
தான் கெட்டு மெய்யின்மேல் பின்வரும் உயிர் ஏற
இடந்தருவதைச் சங்கச்
செய்யுட்களிலே சிலவிடங்களிற்
வது காரணமுஞ் சிறக்காது.

காணலாம். ஆகலின் மறுப்பில் மூன்று,
இரண்டாவது காரணத்தை மறுத்தல்
இன்றியமையாததன்று. அன்றியும் அவரது உரையில்

காட்டி என்பதற்கு
எழுவாயாகக் காலம் என்பதை வருவிக்கின்றனர்.



இவ்வுலகு எவ்வாறு உள்ளது எனின்,

**336** நெருந லுளனொருவ னின்றில்லை
யென்னும்
**6** பெருமை யுடைத்திவ் வுலகு.[1]

பொ. இவ்வுலகு = இந்த வுலகம், ஒருவன், நெருநல் = நேற்று, உளன் = உயிரோடு இருந்தான், இன்று = இப்பொழுது, இல்லை = இறந்துவிட்டான், என்னும் பெருமை = என்று கூறப்படும் பெருமையை, உடைத்து.

ஈண்டு பெருமை என்பது இழிவு எனப் நோக்கத் தக்கது.

பொருள்படுதல்

ஒரு நாள் முழுவதும் உயிரோடு இருப்பது நிச்சயமோ எனின்,

**337**
ஒருபொழுதும் வாழ்வ தறியார் [2]கருதுப
**7** கோடியு மல்ல பல.

பொ. ஒருபொழுதும் = ஒரு நிமிஷமேனும், வாழ்வது = நிச்சயமாய் உயிரோடிருத்தலை, அறியார் = அறியாத மனிதர், கோடியுமல்ல பல = கோடியைக் காட்டிலும் மேல்கணக்குள்ள பலவற்றையும், கருதுப = நினைக்கின்றனர்.

உயிர்க்கும் உடம்பிற்கும் சம்பந்தம் எவ்வாறு எனின்,

**338**
**8** [3]குடம்பை தனித்தொழியப்
யுடம்போ டுயிரிடை நட்பு.

புட்பறந் தற்றே

பொ. உடம்போடு = உடம்புடன், உயிரிடை = உயிர்க்கு, (உள்ள), நட்பு = சம்பந்தம், குடம்பை = முட்டை, தனித்து, ஒழிய = தனித்துக் கிடப்ப, புள் பறந்தற்று = பறவை பறந்தது போன்றது.

(1) cf. इदानीं तावदेवासौ मया दृष्टः कथं मृतः ।
इति काले व्यवह्रियतां प्रलापः श्रूयते नृणां ॥ [म.भा.शान्ति.
227,99-100]

(2) தமது வாழ்நாளைக் கோடியுமல்ல பலவாகக் கருதுவர் உலகத்தார் (மணக்.)

(3) குடம்பை என்பதற்குக் கூடு எனப் பொருள் கூறினர் மணக்குடவர். 'அது புள்ளுடன் தோன்றாமையானும் அதன்கண் அது மீண்டு புகுதலுடைமையானும் உடம்பிற்கு உவமையாகாமை அறிக' எனப் பரிமேலழகர் அவரை மறுத்தனர். அம்மறுப்புப் பொருந்தும்.

*சாவும் பிறப்பும் எவை போன்றன எனின்,*

**339** உறங்குவது போலுஞ் சாக்கா
டுறங்கி
**9** விழிப்பது போலும் பிறப்பு.

போ. *சாக்காடு = சாவு, உறங்குவது போலும் = தூங்குவது போன்றது; பிறப்பு, உறங்கி விழிப்பது போலும் = தூங்கி விழித்துக்கொள்வது போன்றது.*

*என் உயிர் உடலில் நிலைத்து இல்லை எனின்,*

**340** [1]புக்கி லமைந்தின்று கொல்லோ
வுடம்பினுட்
**10** டுச்சி லிருந்த வுயிர்க்கு.

போ. *உடம்பினுள், துச்சில் = ஒதுக்கிடத்தில், இருந்த, உயிர்க்கு, புக்கில் = நிலையுள்ள இருப்பிடம், கொல்லோ = செய்யப்படவில்லையோ ?*

*அமைந்தின்று*

# 35. துறவு.

துறவு என்பதற்கு விடுதல் என்பது பொருள், எதை விடுதல் எனின் தன் உடல் ஆவி இவற்றினின்று வேறுபட்ட மனைவி, மக்கள், செல்வம் இவற்றிலுள்ள பற்றையும், தன் உயிரினின்றும் வேறுபட்ட உடலிலுள்ள யங்கள் முதலியவற்றில் தான்

பற்றையும், தன் உடல் இந்திரி என்ற மயக்கத்தையும் என்க.

உலகத்துப்பொருள்களின் நிலையாமை உணர்ந்த பின்னரே துறத்தல் நேருமாகலான், நிலையாமையின் பின்னர்த் துறவினைக் கூறினர்.

எப்பொருள்களின் பற்றைவிடுகின்றோமோ அப்பொருள் காரணமாகத் துன்பம் இல்லை; ஐந்து இந்திரியங்களின் நுகர்ச்சியைப் போக்கி எல்லாப்பொருள்களின் பற்றை ஒருங்கே விடவேண்டும்;

ஒன்றைத் தவிர்த்து ஏனையவற்றின் பற்றைப் போக்கின், அது

மறுபடியும் மயக்கத்தைக் கொண்டுவரும்;
துறந்தபின்னர் பல உண்
டாம் ஆதலின் துறவினைத் தக்க காலத்தே
கொள்ளவேண்டும்; துற விக்கு உடம்பும்
மிகையாகும்; அகங்காரமமகாரங்களை விட்டவன்
பிரமலோகம் அடைவன்; துறந்தாரைத்
துன்பங்கள் அணுகா; முற்றுந் துறந்தாரே
சிறந்தவர்; பற்றுநீங்கிய பின்னரே பிறப்
புக்கள் நீங்கும்; அப்பற்று விடுதற்குக்
கடவுளிடமுள்ள பற்றே கார
ணம் ஆம்; எனக் கூறினர்.

(1) புக்கில் என்பது முத்திஸ்தானம் (மணக்.)

145

**341** [1]யாதனின் யாதனி னீங்கியா
**1** [2]லதனி னதனி னிலன்[3].

ஞேத

பொ. யாதனின் யாதனின் = எப்பொருள்களினின்றும், நீங்கியான் = பற்றைவிட்டவன், அதனின் அதனின் = அப்பொருள்களினின்றும், நோதல் இலன் = வருத்தத்தை அடையான்.

ஆகலின் யாது செய்யவேண்டும் எனின்,

342 அடல்வேண்டு மைந்தன்[4] புலத்தை விடல்
2 வேண்டிய வெல்லா மொருங்கு.
[வேண்டும்

பொ. ஐந்தன் புலத்தை = ஐந்து இந்திரியங்களுக்குரிய விஷயங்களின் நுகர்ச்சியை, அடல்வேண்டும் = போக்கவேண்டும்; வேண்டிய எல்லாம் = சேர்க்கப்பட்ட பொருள்கள் எல்லாவற்றையும், ஒருங்கு = ஒரே காலத்தில், விடல்வேண்டும்.

இந்திரியங்களை அடக்கிப் பொருள் எல்லாவற்றிலும் உள்ள பற்றை விடவேண்டும் என்பது கருத்து.

ஏன் எல்லாவற்றையும் ஒரே காலத்தில் விடவேண்டும் எனின்,

343 [1]இயல்பாகு [5]நோன்பிற்கொன் றின்மை யுடைமை
3 [6]மயலாகு மற்றும் பெயர்த்து.[8]

(1) யாதனின் யாதனின், அதனின் மையைக் குறித்தன.

அதனின் — அடுக்குகள் பன்

(2) அதனளவு அதனளவு (மணக்.)

(3) cf. यथा यथा च पर्यैति लोकतन्त्रमसारवत् ।

तथा तथा विरागोऽत्र जायते नात्र संशयः ॥

[म.भा.शां.374,4]

यतो यतो निवर्तते ततस्ततो विमुच्यते ।

निवर्तनाद्धि सर्वतो न वेत्ति दुःखमण्वपि ॥ [म.भा.उद्यो.36,14]

(4) ஐந்தின் (மணக். பா).

(5) நோன்பு—நோன்பி. ஆகுபெயர்.

(6) மயல்—மயலிற்குக்காரணம். ஆகுபெயர்.

(7) யாதொரு பொருளுமிலதாதல் தவத்திற்கியல்பாகும்; பொருளுடைமை மீண்டும் பிறத்தற்குக் காரணமான மயக்கத்தைத் தரும். (மணக்.)

(8) பெயர்த்து "பெயர்த்தலான் என்பது திரிந்து நின்றது" என்றனர் பரிமேலழகர். காரணப்பொருளில் வந்த செய்து என்ற வாய்பாட்டு வினையெச்சமெனக் கொள்ளின் அமையும்.

19

# 146

போ. நோன்பிற்கு = துறவிக்கு, ஒன்றின்மை = ஒரு பொருள் கூட இல்லாதிருத்தல், இயல்பு ஆகும் = இயற்கை ஆகும்; உடைமை = ஒரு பொருளின் உடைமை கூட, பெயர்த்து = மறுபடியும், மயல் ஆகும் = மயக்கத்திற்குக் காரணம் ஆகும்.

ஒன்றுமின்மை, உடைமையும் என்றவிடத்து உம்மை தொக்கன. மற்றும் வினைமாற்றின் கண் வந்தது.

எப்பொழுது துறக்கவேண்டும் எனின்,

**344**
**4**

[1]வேண்டி னுண் டாகத் துறக்க துறந்தபி னீண்டியற் பால பல.

போ. துறந்தபின், ஈண்டு = இவ்வுலகத்தில், இயற்பால = சம்பவிக்கக்கூடிய இன்பங்கள், பல, (ஆகும்). (ஆதலால்), வேண்டின் = (அவ்வின்பங்களை) வேண்டினால், உண்டு ஆகத் துறக்க = அவை தோன்றுவதற்குக் காலம் இருக்கும்படி துறக்க.

பொருள்கள் முதலியவற்றுள்ள பற்றைத் உடலின்கண் பற்று வேண்டுமோ எனின்,

துறந்தானுக்கு

**345** [2]மற்றுந் தொடர்ப்பா

டைவன்கொல் பிறப்பறுக்க 5
லுற்றார்க் குடம்பு மிகை.

போ. பிறப்பறுக்கல் உற்றார்க்கு= பிறப்பைப்போக்க நினைப்ப வர்க்கு, உடம்பும், மிகை, ஆகும். (ஆகலின்), மற்றும்= திரும்பியும், (அவர்க்கு), தொடர்ப்பாடு=பொருள்களின் பற்று, எவன்கொல்= எற்றுக்கு?

அவர்களுக்கு உடலும் மிகையாகலான் வேண்டாம் என்பது கருத்து.

பொருட்பற்று பின்னர்

(1) தனனுயிர்க்கு ஆக்கம் உண்டாகவேண்டின் தன்னுடைய எல்லா வற்றையுந் துறக்க, துறந்தபின் (மணக்.)

இவ்விடத்தே இயலும் பகுதிய பல (2) மற்றுஞ் (மணக்.)

சில தொடர்ப்பாடு உளதாவது யாதினைக் கருதியோ.

ஆகலின் எதை விடவேண்டும், அதற்கு யாது பயன் எனின்,

**346** யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்[1]

6 குயர்ந்த வுலகம்[2] புகும்[3].

பொ. உடல் = உடலையும், ஐந்து = ஐந்து இந்திரியங்களையும், வேண்டிய எல்லாம் = தேடிய பொருள்கள் எல்லாவற்றையும், யான் எனது என்னும் = யான் எனது என்ற, செருக்கு அறுப்பான் = மயக்கத்தைப் போக்கியவன், வானோர்க்கு உயர்ந்த = தேவதைகளுக்கும் அடைதற்குச் சிறந்த, உலகம் = பிரமலோகத்தை, புகும் = அடைகின்றான்.

உடல், ஐந்து, வேண்டிய எல்லாம் இவை அதிகரித்தன. வானோர்க்கும் என்றவிடத்து உம்மை தொக்கது.

இருவகைச்செருக்கும் ஆசிரியன் உபதேசித்ததைத் தியானித்தலானும்

யோகத்தினுலும் நீங்கும் என் பது
பெரியோர்கொள்கை.

அதனுல் பயன் யாது எனின்,

347 பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
7 பற்றி விடாஅ தவர்க்கு.

போ. பற்றினைப் பற்றி விடாதவர்க்கு = பற்றைவிடாதாரை, இடும்பைகள் = பிறவிதுன்பங்கள், பற்றி = பிடித்துக்கொண்டு, விடா (ஆம்).

விடாதவர்க்கு என்பது விடாதாரை என்ற வந்தது; ஆகலின் வேற்றுமை மயக்கம்.

பொருளில்.

மேலும்,

348 தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
8 வலைப்பட்டார் மற்றை யவர்.

போ. தீரத் துறந்தார் = முற்றிலும் துறந்தவர், தலைப்பட் டார் = சிறந்தவர், (ஆவர்); மற்றையவர் = ஏனையோர், மயங்கி = மயக்

(1) தேவர்க்கு மேலாகிய உலகத்தின் கண்ணே (மணக்.)
(2) ஈண்டு உலகம் என்பது மூன்றுவது குறளில் நிலம் போல காரியபிரமலோகத்தைக் குறிக்கும்.

என்பது

(3) cf. ध्यानयोगेन शुद्धेन निर्ममा निरहंकृताः ।

आप्नुवन्ति महात्मानो महान्तं लोकमुत्तमम् ॥ [म.भा.अश्वमे.51,22]
निर्ममो निरहङ्कारो मुच्यते नात्र संशयः ॥
[म.भा.अश्वमे.36,19:47,9]



கத்தை அடைவதால், (பிறப்பு) வலைப்பட்டார் = (பிறப்பாகிய) வலையின்கண் அகப்பட்டவர், ஆவர்.

பிறப்பு என்பது அதிகரித்தது.

மேலும்,

349 [1]பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
9 நிலையாமை காணப் படும்.

பொ. பற்று அற்ற கண்ணே = பற்று நீங்கியபொழுதே, பிறப்பு அறுக்கும் = பிறப்பு நீங்கும். மற்று = அல்லாதவிடத்து, நிலையாமை = நிலையில்லாத் தன்மை, காணப்படும்.

பற்றைப் போக்க யாது செய்யவேண்டும்

எனின்,

**350** பற்றுக பற்றற்ருன் பற்றினை
யப்பற்றைப்
**10** பற்றுக பற்று விடற்கு.

பொ. *பற்றற்ருன் பற்றினை* = வேண்டுதல் வேண்டாமையிலானிடத்து பற்றினை, *பற்றுக*; *அப்பற்றை*, *பற்றுவிடற்கு* = பிற வற்றில் பற்று விடுவதற்கு, *பற்றுக*.

## 36. மெய்யுணர்தல்.

மெய்யுணர்தல் என்பதற்கு உண்மைப் பொருளாகிய கடவுளுடைய தன்மையை அறிந்து அதனேடு ஒன்றுபட நிற்றல் என்பது பொருளாகும்.

துறவின் பின்னரே கடவுளுடைய உண்மைத்தன்மையை அறிவதும் அதனேடு ஒன்றுபட நிற்றலும் சாதாரணமாய் நிகழ முடியுமாகலான் துறவின் பின்னர் மெய்யுணர்தலைக் கூறினர்.

மெய்ப்பொருள் என்ற பொருளில் பொருள்,

மெய், உள்ளது செம்பொருள் என்ற சொற்களையும் ஆசிரியர் வழங்கினர்.

மெய்ப்பொருளல்லாதவற்றை

மெய்ப்பொருளாக நினைக்கின்ற மையான் பிறப்பு நிகழும்; மெய்ப்பொருள் கண்டாற்கு பிறப்பின்

(1) cf. निवृत्तं सेवमानस्तु भूतान्यत्येति पञ्च वै । [मनु.12,90]
(2) பற்றற்றான் பற்றுவது தியானசமாதி (மணக்.)



காரணம் நீங்க இன்பம் வரும்; அவர்களுக்கு பிரமலோகத்தை அடைதல் எளிது; இந்திரியங்களை அடக்கிய பின்னரும் மெய்ப் பொருளின் அறிவு இல்லாவிடின் பயன் இல்லை; எப்பொருளிடத்தும் அவற்றிற்கு ஆதாரமான மெய்ப்பொருளை அறிவதே அறிவு; அவ்வறிவை ஆசிரியரிடமிருந்து கேட்பின் மறுபிறப்பு வாராது; கேட்டபின்னர் மனம் அதனிடமே சென்று நன்று நினைப்பின் மறு பிறப்பிற்கு இடன் இல்லை; அறிவு என்பது பிறப்பு நீங்க வீடு என்று கூறப்படும்

மெய்ப்பொருளோடு ஒன்றுபடுவதே ஆகும்; மெய்ப்பொருட்கும் பிற பொருட்குமுள்ள சம்பந்தத்தை அறிந்து பிறபொருளிடத்து பற்றை நீக்குதலால் துன்பங்கள் நம்மிடம் வாரா; அத்துன்பங்கள் காமம் கோபம் அஞ்ஞானம் இவை நீங்கியவுடன் நீங்கும்; எனக் கூறினர்.

**351**
**1**

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
[1]மருளானு மாணாப் பிறப்பு.

பொ. பொருளல்லவற்றை = மெய்ப்பொருளல்லாதவற்றை, பொருள் என்று = மெய்ப்பொருள் என்று, உணரும் = அறியும், மருளான் = அஞ்ஞானத்தால், மாணாப்பிறப்பு = சிறக்காத பிறப்பு, ஆம் = ஆகும்.

மருள் நீங்கினல் யாது பயன் எனின்,

**352**
**2**

[2]இருணீங்கி யின்பம் [3]பயக்கு மருணீங்கி[4]
மாசறு காட்சி யவர்க்கு.

பொ. மருள் = அஞ்ஞானத்தை, நீங்கி = நீக்கி, மாசறுகாட்சியவர்க்கு = குற்றமற்ற அறிவுடையோர்க்கு, இருள் = பிறப்பிற்குக் காரணமாகியது, நீங்கி = நீங்க, இன்பம் = பேரின்பமாகிய வீடு, பயக்கும் = பலிக்கும்.

(1) மருள் என்பதன் விளக்கம் :—கயிற்றை அரவம் எனத் தவறி எண்ணுகிறோம். ஆங்குள்ள பொருள்கள் கயிறு அரவம் என்பன; அவற்றுள் கயிறு என்பது மெய்ப்பொருள், அரவம் என்பது மெய்யல் பொருள். அவ்வாறே ஒவ்வொரு பொருளிலும் கடவுள் இருக்கின்றார். கடவுள் கயிறு போன்றது. அவ்வப்பொருள் அரவம் போன்றது. ஆகலின் மரம் முதலிய எல்லாப்பொருளையும் கடவுளாக நினைப்பது மருளின்மை; மரம் முதலியனவாக நினைப்பது மருள்.

(2) cf. अन्धं तमः प्रविशन्ति बृह. (उपनिषत्.4,4,10.)
त्मकं, तमः – संसारनियामकम् (शांकरभाष्यम्)

अन्धम् – अदर्शन

(3) வீட்டை இன்பமாக ஆசிரியர் கூறியிருத்தலின் அவர் பௌத்த மதத்தைக் கைப்பற்றவில்லை என்பது வெளிப்படை.
(4) நீங்கி—பிறவினைப்பொருளில் வந்தது.

150

மேலும்,

353 ஐயத்தி னீங்கித் [1]தெளிந்தார்க்கு வையத்தின்
3 வான நணிய துடைத்து.

பொ. ஐயத்தின் = சந்தேகத்தினின்றும், நீங்கி, தெளிந்தார்க்கு = தெளிந்தவர்க்கு,

வையத்தின் = பூமியிலிருந்து, வானம் =
காரிய பிரமலோகம், நணியது = அருகாமையை
உடைத்து.

மெய்ப்பொருளின் அறிவு இல்லாதார்க்கு
இந்திரியங்களை அடக்
குதலால் பயன் உண்டோ எனின்,

**354** [1]ஐயுணர் வெய்தியக் கண்ணும்
பயமின்றே
**4** மெய்புணர் வில்லா தவர்க்கு.

போ. மெய்யுணர்வு = மெய்ப்பொருளின்
அறிவினை, இல்லாத
வர்க்கு = உடைத்தாயிராதார்க்கு,
ஐயுணர்வு = ஐந்து இந்திரியங்
களான் உண்டாகும் அறிவு,
எய்தியக்கண்ணும் = நீங்கிய போதிலும்,
பயம் இன்று = பயன் இல்லை. (ஏ = அசை).

அவ்வறிவு யாது எனின்,

**355** [3]எப்பொரு ளெத்தன்மைத்
தாயினு மப்பொருள்
**5** மெய்ப்பொருள் காண்ப தறிவு.

போ. எப்பொருள் = எந்த பொருளும், எத்தன்மைத்து ஆயினும் = எந்த தன்மையை உடையதாகத் தோன்றினும், அப் பொருள் = அப்பொருளிடத்தில், (அதற்கு பொருள் = மெய்ப்பொருளாகிய கடவுளை,

ஆதாரமாக), மெய்ப் காண்பது = காண்டல், அறிவு, (ஆகும்).

அவ்வறிவை அடையும் வழி யாது, எனின்,

அதனால் பயனும் யாது

**356** [4]கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
**6** மற்றீண்டு வாரா நெறி.

(1) துணிந்தார்க்கு (மணக். பா.)

(2) மெய்முதலாகிய பொறிகள் ஐந்தினாலும் அறியப்படுவன வெல்லாம் அறிந்தவிடத்தும் அதனால் ஒருபயனுண்டாகாது உண்மையை அறியும் அறிவிலாதார்க்கு. (மணக். பா.)

(3) cf. एष सर्वेषु भूतेषु गुढोत्मा न प्रकाशते ।
दृश्यते
त्वग्र्यया बुद्ध्या सूच्मया सूच्मदर्शिभिः॥(कठोपनिषत्.3,12)

(4) கற்றல் என்பதும் श्रवणम् என்பதும் ஒருபொருட்கிளவி; மெய்ப் பொருளின் உணர்வு வரும்வரை கற்றல்வேண்டும் என்பது आत्मा वारे

பொ.
ஈண்டு = இவ்வுலகத்தில், கற்று = ஆசிரியனிடம் கேட்டு, மெய்ப்பொருள் = கடவுளை, கண்டார், மற்று = மறுபடியும், ஈண்டு = இவ்வுலகிற்கு, வாராநெறி = வாராத வழியின்கண், தலைப்படுவர் = தோன்றுவர்.

கற்றபிறகு யாது செய்தால் மறுபிறப்பு இல்லை எனின்,

357 [1]ஓர்த்துள்ள முள்ள துணரி ஞெருதலையாப்
7 பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

பொ. உள்ளம் = மனம், ஓர்த்து = மனனஞ் செய்து, உள்ளது = மெய்ப்பொருளை, ஒருதலை ஆ = நிச்சயம் ஆக உணரின் = அறிந்தால், பேர்த்து = மறுபடியும், பிறப்பு = மறுபிறப்பு, உள்ள வேண்டா = நினைக்கப்படவேண்டா.

பிறப்பு நீங்கின் யாது நிகழும் எனின்,

358 பிறப்பென்னும் பேதைமை நீங்கச்

8 செம்பொருள் காண்ப தறிவு.[3] [[4]சிறப்பென்னுஞ்

போ. பிறப்பு என்னும் பேதைமை = பிறப்பு என்று சொல்லப்படுகின்ற உயர்வில்பொருள், நீங்க, சிறப்பு என்னும் செம்பொருள் = வீடு என்று கூறப்படுகின்ற உயர்வுபொருளை, காண்பது = காண்டல், அறிவு, (ஆகும்).

பிறப்பு எப்பொழுது நீங்கும் எனின்,

**359**
**9**

சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.

போ. சார்பு = பொருளல்லவற்றிற்கும் செய்பொருளுக்கும் உள்ள சம்பந்தத்தை, உணர்ந்து = அறிந்து, சார்பு = பொருளல்லவற்றிலுள்ள சம்பந்தம், கெட ஒழுகின் = நீங்க நடந்தால், சார்தரு நோய் = சம்பந்தத்தை உண்டுபண்ணும் பிறவித்துன்பம், அழித்து = நீக்கப்பட்டு, சார்தரா = அணுகா.

மேலும் எப்பொழுது அந்நோய் கெடும் எனின்,

(1) ஓர்த்தல் என்பதும் मननम् என்பதும் ஒருபொருட்கிளவி.

(2) வீட்டினையும் செம்பொருளையும் ஒன்றாக ஆசிரியர் கூறுதலின் அவர் அத்வைதமதத்தினர் எனக் கூறுதல் சாலும். स विश्वकृत् स हि सर्वस्य कर्ता तस्य लोकः स उ लोक एव (बृहदारण्यक.4,4,13) ब्रह्मैव लोको ब्रह्म लोकः (बृहदा.4,3,32). एवंविच्छांतः...... आत्मन्येवात्मानं पश्यति......... एष ब्रह्मलोकः (बृहदारण्यक.4,4,23; शांकरभाष्यं)

(3) பிறப்பிற்கு முதற்காரணமாய அவிச்சை கெடவீட்டிற்கு நிமித்தகாரணமாய செவ்வியபொருளைக் காண்பதே ஒருவர்க்கு மெய்யுணர்வாவது (பரிமே.)

360 [1]காமம் வெகுளி மயக்க
மிவைமூன்ற
10 ஞமங் கெடக்கெடு நோய்.

பொ. காமம் = ஆசை, வெகுளி = கோபம், மயக்கம் = அஞ்ஞானம், இவை மூன்றன் நாமம் = இம்மூன்றின் பெயரும், கெட, நோய் = பிறவித்துன்பம், கெடும்.

---

## 37. அவாவறுத்தல்.

அவாவறுத்தல் என்பதற்கு ஆசையை முற்றும் போக்குதல் என்பது பொருள்.

காமங்கெட பிறவித்துன்பம் நீங்கும் என முன்னதிகாரத்து ஈற்றுக்குறளில் ஆசிரியர் கூறியதால், இவ்வதிகாரத்திற்கு அஃதே தோற்றுவாய் எனக் கொள்ளல் தகும்.

அவாவறுத்தல் என்ற பொருளில் வேண்டாமை, அவாவின்மை என்ற சொற்களை வழங்கினர்.

அவா என்பது எல்லோர்க்கும் எப்பொழுதும் பிறப்பை உண்டாக்கும் விதை ; அப்பிறப்பைப் போக்க அவாவின்மை வேண்டும் ; அவாவின்மைக்கு ஒத்தது இவ்வுலகத்தும் மேலுலகத்தும் இல்லை ; அவாவின்மையே வீட்டிற்குக்காரணம் ஆகலின் அதனை அடைதற்கு கடவுளின் அருளை அடையவேண்டும் ; அவாவில்லாதாரே முழுமையும் பற்றற்றவர் எனக் கூறல் தகும் ; ஒருவனை வஞ்சிக்கும் பொருள் அவாவாதலான் அதனைப் போக்குவதே துறவறம் ; அவாவினைப் போக்கின் குற்றமற்ற செயல்கள் தாமே வரும் ; அவா

வில்லார்க்குத் துன்பமின்மையும் அவாவினை உடையார்க்கு மேல் மேல் துன்பமும் நிகழும் ; பெருந்துன்பத்தை விளைவிக்கும் அவாவைப் போக்கின் இவ்வுலகிலே பேரின்பத்தைப் பெறலாம் ; எவ்வேளையில் நிரம்பாத ஆசையை ஒருவன் போக்குகின்றானோ அப்போதே அவன் வீட்டினைப் பெறுவான் ; எனக் கூறினர்.

(1) cf. संगात्संजायते कामः कामात् क्रोधोभिजायते ।
क्रोधात् भवति संमोहः संमोहात्स्मृतिविभ्रमः ॥
आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ।
प्रसादे सर्वदुःखानां हानिरस्योपजायते ॥
[भगवद्गीता.II,62-65]

153

**361** அவாவென்ப வெல்லா
வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
**1** தவாஅப் பிறப்பீனும் வித்து.

போ.

அவா = ஆசையை, எல்லாவுயிர்க்கும் = பிராணிகள் எல்

லோருக்கும், எஞ்ஞான்றும் = எப்பொழுதும், தவாப்பிறப்பு =

தவறாது வருகின்ற பிறப்பினை, ஈனும் = உண்டுபண்ணும், வித்து

என்ப = விதை என்று கூறுவர் (பெரியோர்).

ஆகலின் நமக்கு எதுவேண்டும், அதற்குக் கருவி யாது

எனின்,

**362**

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது

2 வேண்டாமை வேண்ட வரும்.

போ. (துறவறத்திலுள்ளவன்), வேண்டுங்கால் = (ஒரு பொருளை) வேண்டின், பிறவாமை = பிறவாமையை, வேண்டும் = விரும்புகிறான்; அது, வேண்டாமை = அவாவின்மையை, வேண்ட = விரும்ப, வரும், (மற்று = வினைமாற்று).

அவ்வவாவின்மை எத்தன்மைத்து எனின்,

**363** வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை

3 யாண்டு மஃதொப்ப தில்.

போ. வேண்டாமை அன்ன =

அவாவின்மையைப் போன்ற,
விழுச்செல்வம் = சிறந்த பாக்கியம்,
ஈண்டு = இவ்வுலகத்தில், இல்லை,
யாண்டும் = (வேறு) எவ்விடத்திலும், அஃது = அதனை, ஒப்பது,
இல் = இல்லை.

மற்றும் அது எத்தன்மைத்து, அது எதனால் வரும் எனின்,

**364** [1]தூஉய்மை யென்ப
தவாவின்மை மற்றது
4
வாஅய்மை வேண்ட வரும்.

போ. அவாவின்மை என்பது, தூய்மை = வீட்டிற்குக்
காரணம், என்ப = என்று கூறுவர். அது, [2]வாய்மை = கடவுளை,
வேண்ட, வரும்.

(1) தூய்மை = ஆகுபெயர்; அழுக்கறுத்தல் (மணக்.) (2) வாய்மை என்பதும் सत्यम् என்பதும் ஒருபொருட்கிளவியாகும். सत्यम् என்ற
சொல் பிரமத்தைக் குறிப்பது
सत्यं ज्ञानमनन्तं ब्रह्म (2,1), तत्सत्यमित्याचक्षते (2,6) என்ற

தைத்திரீயோபநிஷத்தொடர்களால்விளக்கும்.
மணக்குடவர் வாய்மை என்பதற்கு "மெய் சொல்லுதலை" எனப் பொருள் கூறினர்.

30

154

அவாவின்மைக்கும் துறந்தார்க்கும் யாது சம்பந்தம் எனின்,

**365** அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா

**5** ரற்றாக வற்ற திலர்.

போ அவாவற்றார் = அவாவினை நீக்கியவர், அற்றவர் = முற்றத் துறந்தார், என்பார் = என்று கூறப்படுவர்; மற்றையார் = அவாவினை நீக்காதவர், அற்றாக அற்றது = முற்றத்துறத்தலை, இலர் = உடைத் தாயிரார்.

ஆகலின் யாது செய்தல் வேண்டும் எனின்,

**366** அஞ்சுவ தோரு மறனே யொருவனை

**6** வஞ்சிப்ப தோரு மவா.

போ. அவா, ஒருவனை,

வஞ்சிப்பது = மயக்கத்தைச்செய்து கெடுப்பது, (ஆகும்). (ஆதலான்), அதனை,
அஞ்சுவது = நீக்குவது,
அறன் = துறவறம் (ஆகும்). (ஏ, ஒரும் = அசை).

அவாவை நீக்கின் யாது நிகழும் எனின்,

367 அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
7 தான்வேண்டு மாற்றான் வரும்.

பொ. அவாவினை, ஆற்ற = முழுமையும், அறுப்பின் = நீக்கின், தவாவினை = குற்றமற்ற செயல்கள், தான் வேண்டும் ஆற்றான் = தான் வேண்டிய வழிக்கண், வரும்.

மேலும்,

368
8

அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்.

பொ. அவாவில்லார்க்கு, ஆசையற்றவர்க்கு, துன்பம், இல் ஆகும் = இல்லை ஆகும்;
அஃது = அவ்வவா, உண்டேல் = இருப்பின், துன்பம், தவாது = தவறாது, மேன்மேல் வரும்.

மேலும்,

369

இன்ப [1]மிடையறா [2]தீண்டு மவாவென்னுந்

**9** துன்பத்துட் டுன்பங் கெடின்.

*பொ. அவா என்னும் துன்பத்துட்டுன்பம் கெடின் = ஆசை என்ற பெருந்துன்பம் நீங்கின், இடையறுது = இடைவிடாமல், ஈண்டும் = இவ்வுலகத்தின்கண்ணும், இன்பம்,*

வரும்.

*வரும் = பேரின்பம்* வரும் *என்பது*

*அதிகரித்தது.*

(1) இடையறுது—*முற்றுவினை (பரிமே.)*
(2) ஈண்டும்=*மிகும் (மணக்.)*

**155**

*மேலும்,*

**370** ஆரா வியற்கை யவாநீப்பி
[1]னந்நிலையே
**10** பேரா வியற்கை தரும்.[1]

பொ. ஆராவியற்கையவா = நிரம்பாத்தன்மையை உடைய அவாவினை, நீப்பின் = போக்கின், (அது), அங்கிலேயே = அந்தநிலையிலே, பேராவியற்கை = நித்தியமாகிய வீட்டினை, தரும்.

இல்லறத்தைப்பற்றி 20 அதிகாரங்களும் துறவறத்தைப்பற்றி 13 அதிகாரங்களும் கூறியபின்னரும் பொருட்பால் காமத்துப்பால் இவற்றைக் கூறுதற்கு முன்னரும் ஊழைப்பற்றி ஓர் அதிகாரம் ஆசிரியர் கூறினர். மக்களின் சுகதுக்கங்களுக்கு அவர் முற்பிறப்புக்களில் செய்த வினைகளின் பயனும் இப்பிறப்பில் தன் முயற்சியால் செய்த வினைகளின் பயனுமே ஆகும். கர்மம் தன்முயற்சி இவற்றுள் அறத்தைச் செய்யத் தன்முயற்சிக்கு ஆற்றல் அதிகமாதலானும், பொருளை அடைவதற்கும் இன்பத்தை யனுபவித்தற்கும் கர்மத்திற்கு ஆற்றல் அதிகமாதலானும் அறத்துப்பாலுக்குப் பின்னரும் ஏனையவற்றிற்கு முன்னரும் இவ்வதிகாரத்தை ஆசிரியர் கூறியது பொருந்தும்.

---

## 38. ஊழ்.

---

ஊழ் என்பதற்கு முற்பிறப்பில் செய்த என்பது பொருள்.

செயல்களின் பயன்

நல்வினைப்பயனாக முயற்சியும் தீவினைப்பயனாகச் சோம்பலும் தோன்றும்; தீவினை அறிவைப் போக்கும், நல்வினை அறிவை வளர்க்கும்; சிறந்த பல நூல்கள் கற்றாலும் வினைக்குத்தக்க அறிவே

(1) அங்கிலேயே பேராவியற்கைதரும் என்றதனால் ஜீவன்முக்தியை ஆசிரியர் குறிக்கின்றனர் என்பது வெளிப்படை. ஜீவன்முக்தி அத்வைதமதத்திலே கொள்ளப்பட்டமையான் ஆசிரியர்க்கு அம்மதமே உடன்பாடு எனக் கொள்ளல் தகும்.

(2) cf. यदा सर्वे प्रमुच्यन्ते कामा येऽस्य हृदि श्रिताः ।
अथ मर्त्योऽमृतो भवत्यत्र ब्रह्म समश्नुते ॥
(कठोपनिषत्.6,14)

योऽकामो निष्काम आप्तकाम आत्मकामो न तस्य प्राणा उत्क्रामन्ति
ब्रह्मैव सन् ब्रह्माप्येति [बृहदारण्यक. 4,4,6]

न जातु कामः कामानामुपभोगेन शाम्यति ।
हविषा कृष्णवर्त्मेव भूय एवाभिवर्धते ॥
[म.भा.आदि.69,53]

यो न कामयते किंचिन्न किंचिदवमन्यते ।
इह लोकस्थ एवैष ब्रह्मभूयाय कल्पते ॥
[म.भा.अश्वमे.47,8]

இருக்கும்; செல்வமுடையாதற்கும் அறிவுடையாதற்கும் சம்பந்தம் இல்லை; செல்வத்தைப் பெறும்போது நல்லவை தீயன வாகும் தீயன நல்லன வாகும்; தமக்கு உரித்தாதற்குத் தகாதன எவ்வாறு காப்பாற்றினும் நில்லா, தகுவன வெளியில் எறியப்படினும் போகா; கோடிக்கணக்காகப் பொருள் தேடினும் தெய்வசம்மதியில்லாவிட்டால் அதை அனுபவிக்கமுடியாது; தமக்கு ஊழால் வரக்கூடிய துன்பங்கள் துறவறத்தை யடைந்தால் போம் எனின் வறுமையுற்றோர் துறவிகள் ஆவர்; நல்ல வினைப்பயன்களாகிய சுகங்களை அனுபவிக்கும்போது சுகப்படுகிறவர்கள் தீயவினைப்பயன்களாகிய துக்கங்களை அனுபவிக்கும்போது ஏன் துக்கப்படுகின்றார்; ஊழைக்காட்டிலும் வலியுள்ளது ஒன்றும் இல்லாமையால் எல்லாவற்றைக் காட்டிலும் அதன் பயனே முன்னர் வரும்; எனக் கூறினர்.

ஊழ், கர்மம், பழவினை இவையெல்லாம் ஒருபொருட்கிளவியாகும்.

**371**
**1**

[1]ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
[1]போகூழாற் றோன்று மடி.[4]

போ. கைப்பொருள் ஆகூழால்=கைக்குவரும் பொருளை, வளர்க்கும் ஊழால், அசைவின்மை=முயற்சி, தோன்றும். கைப்பொருள் போகூழால்=கைப்பொருளைப் போக்கும் ஊழால், மடி=சோம்பல், தோன்றும்.

பொருளின் மிகுதிகுறைவிற்குமாத்திரம் வெனின்,

ஊழ் காரணமோ

பேதைப் படுக்கு[2] மிழவூ ழறிவகற்று[3]
மாகலூ ழுற்றக் கடை.[4]

போ. இழவூழ்=குறைவுபடுத்தும் ஊழ், உற்றக்கடை=வந்த பொழுது, அறிவு=அறிவை, பேதைப்படுக்கும் = குறைக்கும்; ஆகலூழ்=மிகுதிப்படுத்தும் ஊழ், உற்றக்கடை, அறிவு=அறிவை, அகற்றும்=மிகுதிப்படுத்தும்.

(1)

அகூழ் — ஆகும் ஊழ்; போகூழ் = போகும் ஊழ்.
ஆகும் போகும் என்பன பிறவினைப்பொருளில் வந்தன.

(2) cf. दैवेन किल यस्यार्थः सुनीतोपि विपद्यते ।
सदा दैवागमे यत्नः तेन कार्यो विजानता ॥

[म.भा.विराट.23,9]

(3) பேதைப்படுக்கும், அகற்றும் இவற்றிற்குச் செயப்படுபொருளாக கைப்பொருள் என்பதை அதிகரித்தனர் பரிமேலழகர். அறிவையே செயப்படுபொருளாகக் கொண்டனர் மணக்குடவர். பின்வரும் இரண்டு குறள்களையும் நோக்கின் மணக்குடவர் கொள்கையே சிறக்கும்.

(4) cf. बलं बुद्धिश्च तेजश्च प्रतिपत्तिश्च भारत ।
भवन्ति भवकालेषु विपद्यन्ते विपर्यये ॥

[म.भा.मौसल.9;37]



பல நூல்களைக் கற்பதனால் ஊழிற்குக் காரியமாகிய அறிவை மிகுதிப்படுத்த முடியாதோ எனின்,

373 நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
3 னுண்மை யறிவே மிகும்.[5]

போ. நுண்ணிய நூல்=சூக்ஷ்மமாகிய பொருள்களை

உணர்த்தும் நூல்கள், பல=பலவற்றை, கற்பினும்=படித்தாலும், தன் உண்மையறிவே=தன்னுடைய ஊழாலுள்ள அறிவே, மிகும்=மேற்படும்.

பணத்தை மிகுதிப்படுத்தும் ஊழிற்கும் அறிவை மிகுதிப்படுத்தும் ஊழிற்கும் சம்பந்தம் உண்டோ எனின்,

374 இருவே றுலகத் தியற்கை [1]திருவேறு
4 தெள்ளிய ராதலும் [1]வேறு.

போ. உலகத்தியற்கை=உலகத்தின் சுபாவம், இருவேறு=இரண்டுவகைப்பட்டது; திருவேறு=செல்வத்தையாக்கும் ஊழ்வேறு தெள்ளியராதலும் வேறு=அறிவுடையர் ஆக்கும் ஊழும்வேறு.

செல்வத்தை ஆக்கும்போது முன்பு நல்லன தீயனவாயிருந்தன எவ்வாறு ஆகும் எனின்,

375 நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு

5 நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

பொ. செல்வம் = செல்வத்தை, செயற்கு = ஆக்கும்போது, நல்லவை எல்லாம் = நல்லன எல்லாம், தீய ஆம் = தீயன ஆகும். தீயவும் = தீயனவும், நல்ல ஆம் = நல்லன ஆகும்.

பொருளைக் காத்தால் அது நிலைத்தும், காவாதிருந்தால் அது குறைந்தும், இருக்குமோ எனின்,

376 பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
6 சொரியினும் போகா தம.[2]

பொ. பாலல்ல = (தமக்கு) உரித்தாகாதன, பரியினும் = காக்கப்படினும், ஆகா ஆம் = நிலைத்திருக்கா ஆகும், தம = தமக்குரித்தான பொருள்கள், உய்த்துச் சொரியினும் = வெளியிற் சென்று எறியப்படினும், போகா.

கோடிக்கணக்காகப் பணஞ்சேர்த்தவரெல்லாம் இன்பத்தை அடைவரோ எனின்,

377 வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
7 தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

பொ. வகுத்தான் = தெய்வம், வகுத்த வகையல்லால் = விதித்த முறையில்லாமற் போனால், கோடி தொகுத்தார்க்கும் =

(1) cf. न विधिं ग्रसते प्रज्ञा प्रज्ञां तु ग्रसते विधिः ।
विधिपर्यागतानर्थान् प्रज्ञावान्प्रति पद्यते ॥

(2)

[म.भा.आदि.123,17]

(2) தரு, மதளளயராதல இவை ஆகுமபயா.

(3) cf. अरक्षितं तिष्ठति दैवरक्षितं सुरक्षितं दैवहतं विनश्यति ॥

## 153

கோடிக்கணக்காகப் பணம் சேர்த்தார்க்கும்,
வித்தல், அரிது = இல்லை.
துய்தல் = அநுப

வறுமையுற்றார் எப்போது துறவறத்தை
37 3/8 துறப்பார்மற் றுப்புர வில்லா
ஊட்டா கழியு மெனின்.

அடைவர் எனின்,
றுறற்பால

போ. உறற்பால = தமக்கு வரக்கூடிய துன்பங்கள், ஊட்டா கழியும் எனின் = வாராது நீங்கும் எனின், துப்புரவில்லார் = தரித்திரர், துறப்பார் = துறவறத்தை அடைவர்.

நல்வினையின் பயனாகிய சுகத்தை அனுபவிக்கும்போது சுகமடைகின்றவர்கள் தீவினையின் பயனாகிய துக்கத்தையும் அனுபவிக்கும்போதும் சுகமடைகின்றார்களா எனின்,

**379**
**9**

நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன்.

போ. நன்று = நல்வினைப்பயன், ஆங்கால் = வரும்போது, நல்ல ஆக் காண்பவர் = நல்லனவாக நினைக்கின்றவர், அன்று = தீவினைப் பயன், ஆங்கால் = வரும்போது, அல்லற்படுவது = துன்பப்படுவது, எவன் = எக்காரணம் பற்றி?

நல்வினைப்பயனாகிய சுகத்தை இன்பத்தோடு ஏற்றுக்கொள்ளுமாறு தீவினைப்பயனாகிய துக்கத்தை இன்பத்தோடு ஏன் மக்கள் ஏற்றுக்கொள்ளவில்லை என்பது கருத்து.

ஆகலின்,

**380** ஊழிற் பெருவலி யாவுள

மற்றொன்று

**10** சூழினுந் தான்முந் துறும்.[1]

போ. மற்றொன்று = ஊழைக்காட்டிலும் வேறொன்றை, சூழினும் = நினைத்தாலும், தான் = ஊழே, முந்துஉறும் = முன்னர் நிற்கும்; (ஆகலான்) ஊழின் = ஊழைக்காட்டிலும், பெருவலி = அதிக வலியுள்ளன, யா உள = யாவை இருக்கின்றன?

ஒன்றுமில்லை என்பது கருத்து.

(1) cf. दैवं तु बलवत्तरम् [म.भा.कर्ण 22,31]
दैवमेव परं मन्ये धिक्पौरुषमनर्थकम् [म.भा.आदि219,5,

கௌசிககுலதிலக சொக்கநாதமகிகளின் வழித்தோன்றலும் மங்களாம்பிகை ஸ்வாமிநாத சாஸ்திரிகள் இவர்கள்தம் புதல்வனுமான சுப்பிரமணியசாஸ்திரியால் இயற்றப்பட்ட பாலருரை முற்றும்.



# குறள்களின் முதற்குறிப்பகராதி.

ஈண்டு எண்கள் குறளைக் குறிக்கும்.

---

# திருக்குறட் சொல்லகராதி.

* ஈண்டு எண் குறளைக் குறிக்கும்.




42396